# மாணவர் செந்தமிழ் மாலை

எட்டாம் வகுப்பு

ஆ. கார்மேகக்கோன்

மதுரை

# மாணவர் செந்தமிழ் மாலை



## எட்டாம் வகுப்பு.

PART I - TAMIL (Academic Course)

[1958 ஆம் ஆண்டு, ஏப்ரல் திங்கள், 23 ஆம் நாள் அரசினர் வெளியிட்ட புதிய பாடத்திட்டத்தின்படி தொகுக்கப்பெற்றது.]

தொகுப்பாசிரியர் ;

ரா. கிருஷ்ணமூர்த்தி, எம்.ஏ., எல்.டி., பி.ஓ.எல்.,
தமிழ்த்துறைத் தலைவர்,
மதுரைக் கல்லூரி, மதுரை.

(Paper used : 14.5 kg. Double Demy—White Printing)

வெளியீடுவோர் :

ஆ. கார்மேகக் கோன்,

தல்லாகுளம், : : மதுரை.

 1964 [விலை ரூ. 2-25 பைசா.

முதற் பதிப்பு—நவம்பர், 1958
இரண்டாம் பதிப்பு—செப்டம்பர், 1959
மூன்றாம் பதிப்பு—ஜூலை, 1961
நான்காம் பதிப்பு ஜூன், 1963
ஐந்தாம் பதிப்பு—ஜூன், 1964




**Approved by the Text Book Committee Madras, for Class use.**

**Sup. Gazette Page No. 20. Dated 13—5—59.**

Printed at The Loyola Printers, Madurai—'64.

# முன்னுரை

'மாணவர் செந்தமிழ் மாலை' என்னும் இந்நூல் சென்னை அரசினர் 1958 ஏப்ரல் 23 இல் வெளியிட்ட புதிய பாடத்திட்டத்தின்படி தொகுக்கப்பட்டது. அத்திட்டத்தில் கூறியுள்ளபடியே இதில் செய்யுட் பகுதியும், உரை நடைப்பகுதியும், அவற்றிற்குரிய பொருளும் அளவும் மனத்தில் கொண்டு அமைக்கப்பட்டுள்ளன.

சங்க காலம், இடைக்காலம், பிற்காலம், இக்காலம், எனப் பிரிக்கப்பட்ட செய்யுட்பகுதிகளில், குறித்த அளவில், வாழ்த்து, அறவுரை, தொடர் நிலைச் செய்யுள், பல்சுவை என்ற தலைப்புக்களுக்கேற்பச் சுவை மிக்க பகுதிகள் இதில் சேர்க்கப்பட்டுள்ளன. செய்யுட் பகுதிகளின் ஆசிரியர்களைப் பற்றிய குறிப்புக்கள், நூல் பற்றிய குறிப்புக்கள், அருஞ்சொற்பொருள், இலக்கணக் குறிப்புக்கள், கேள்விகள், பயிற்சிகள் முதலியவை மாணவர்கள் எளிதில் கண்டறியுமாறு ஆங்காங்கே கொடுக்கப்பட்டிருக்கின்றன.

உரை நடைப் பகுதியிலும் பாடத்திட்டத்தின்படி, இலக்கியத் தொடர்புள்ளவை, அல்லாதவை என்ற பாகுபாட்டின் கீழ்ப் புலவர்கள், புரவலர்கள், கலைஞர்கள், இலக்கிய வரலாறு, பெருமக்களின் வாழ்க்கை நிகழ்ச்சிக் குறிப்புக்கள், சுவைபட அமைந்த செய்யுள் உரையாக்கம் நாடகம், உரையாடல், கடிதம், குடும்பக்கலை, நாட்டு நலத்திட்டங்கள், பன்னாட்டுச் செய்திகள் நுண்கலை, கற்பனைக் கட்டுரை, சொற்போர் மன்ற நிகழ்ச்சி முதலிய தலைப்புக்களுக்குப் பொருத்தமான பாடங்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

அவை யாவும் தமிழ்ப் பேரறிஞர்களால் எழுதப்பட்டவை; எளிய, இனிய, அழகிய, தூய தமிழ் நடையில் அமைந்தவை;

மாணவர்கள் சிறந்த உரை நடைப் பயிற்சி பெறுவதற்கு உறு துணையானவை. உரை நடைப் பாடங்களின் இறுதியிலும் கேள்விகளும், பயிற்சிகளும் கொடுக்கப்பட்டுள்ளன. மாணவர்கள் தமிழிலக்கியத்தின் மீது பற்றுதலையும், மொழிப் பயிற்சியையும், பல்துறையறிவையும் பெற வேண்டுமென்னும் உயரிய நோக்கத்துடன் தக்க முறையில் இவையெல்லாம் அமைக்கப்பட்டுள்ளன என்பது இந்நூலை நோக்குவார்க்கு இனிது விளங்கும்.

இதில் தம் கட்டுரைகளையும் செய்யுட்களையும் வெளியிடுவதற்கு இசைந்தருளிய பேரறிஞர்களுக்கு எனது நன்றி. இதனை உருவாக்குவதில் எனக்கு உறுதுணையாயிருந்து, கையெழுத்துப் படிகளையும் அச்சுப் படிகளையும் ஒப்புநோக்கி உடனிருந்து திருத்தியுதவிய திரு. பண்டித மீ. கந்தசாமிப் புலவர் அவர்கட்கும் எனது உளமார்ந்த நன்றி உரியது.

காலஞ்சென்ற பேராசிரியர் ஆ. கார்மேகக் கோனார் அவர்கள் எனக்குப் பலவாண்டுகளாக நூல் இயற்றும் துறையில் நன்முறையில் அளித்த பயிற்சியையும் ஊக்கத்தையும் ஆதரவையும் நான் மறத்தல் இயலாது. அப்பெரியார் தம் குடும்பத்தினர் இன்று அவர் நடத்தி வந்த நூல் வெளியீட்டுத் தொழிலை அன்னார் பெயரிலேயே கூட்டாகத் தொடர்ந்து நடத்தி வருகின்றனர். இந்நூலை அவர்கள் உயரிய முறையில் வெளியிட்டுதவியதற்கு அவர்களுக்கு எனது உளங்கனிந்த நன்றி உரியதாகுக. இதன் தகுதியறிந்து இதனைத் தம் பள்ளிகளில் பாடநூலாக வைத்துதவ வேண்டுமென்று ஆசிரியப் பெருமக்களையும் அறிஞர்களையும் யான் பணிவுடன் வேண்டுகின்றேன்.

மதுரை,
20—11—'58.

ரா. கிருஷ்ணமூர்த்தி,
தொகுப்பாசிரியர்,

# பொருளடக்கம்

## செய்யுட்பகுதி

# உரைநடைப்பகுதி

---

## மனப்பாடத்திற்குரிய செய்யுட்பகுதிகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | வாழ்த்துப்பகுதி முழுவதும் ... | 16 | வரிகள் |
| 2. | திருக்குறள் – முதல் 10 குறள்கள் ... | 20 | ,, |
| 3. | நாலடியார் – முதல் 3 செய்யுட்கள் ... | 12 | ,, |
| 4. | அறநெறிச்சாரம் – முதல் 3 செய்யுட்கள் ... | 12 | ,, |
| 5. | மணிமேகலை (வரிகள் 85 - 104) ... | 20 | ,, |
| 6. | நளவெண்பா (செய்யுட்கள் 18–23) ... | 24 | ,, |
| | ஆக மொத்தம் ... | 104 | ,, |

# நாட்டு வணக்கம்

ஜன கண மன அதிநாயக ஜெயஹே
பாரத பாக்ய விதாதா
பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
த்ராவிட உத்கல வங்கா
விந்திய ஹிமாசல யமுனு கங்கா
உச்சல ஜலதி தரங்கா
தவசுப நாமே ஜாகே
தவசுப ஆசிஷ மாங்கே
காயே தவ ஜய காதா
ஜன கண மங்கள தாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா
ஜயஹே ஜயஹே ஜயஹே
ஜய ஜய ஜய ஜயஹே.

—மகாகவி இரவீந்திரநாத தாகூர்

# தேசீய கீதம்

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற நீதான்
மக்கள் எல்லாருடைய மனத்திலும் ஆட்சி செலுத்துகிருய்;
நின் திருநாமம், பஞ்சாபையும் சிந்துவையும்
குஜராத்தையும் மஹாராஷ்டிரத்தையும்
திராவிடத்தையும் ஒரிஸாவையும் வங்காளத்தையும்
உள்ளக் கிளர்ச்சியடையச் செய்கிறது.
அது விந்திய ஹிமாலய மலைகளில் எதிரொலிக்கிறது.
யமுனை, கங்கை நதிகளின் இன்ப நாதத்தில் கலக்கிறது,
இந்தியக் கடல் அலைகளால் ஒலிக்கப்படுகிறது.
அவை நின் ஆசியை வேண்டுகின்றன; நின் புகழைப்
பாடுகின்றன.

இந்தியாவின் சுக துக்கங்களை நிர்ணயிக்கிற உனக்கு
வெற்றி, வெற்றி, வெற்றி.

# மாணவர் செந்தமிழ் மாலை

## எட்டாம் வகுப்பு

## செய்யுள்

## I. வாழ்த்துப் பகுதி

### 1. தெய்வம்

[இப்பாடல் நம்மாழ்வார் இயற்றிய திருவாய் மொழியிலிருந்து எடுக்கப்பட்டது. நம்மாழ்வார் என்பவர் வைணவ சமய ஆழ்வார்கள் பன்னிருவருள் முதன்மையானவர். இவர் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள திருக்குருகூர் எனப்படும் ஆழ்வார் திருநகரியில் வேளாளர் குலத்தில் பிறந்தவர். இவர் வடமொழி வேதங்களைத் தமிழ் செய்தார். இவரது காலம் கி. பி. எட்டாம் நூற்றாண்டு என்று கூறுவர். இங்குப் பாடமாக வந்துள்ள செய்யுள் இவரது பொது நோக்கை வற்புறுத்துகிறது.]

உயர்வற உயர்நலம் உடையவன் எவன்அவன்
மயர்வற மதிநலம் அருளினன் எவன்அவன்
அயர்வறும் அமரர்கள் அதிபதி எவன்அவன்
துயரறு சுடரடி தொழுதுஎழுஎன் மனனே!

அருஞ்சொற்பொருள் :

உயர்வுஅற – அதற்குமேல் உயர்ந்தது இல்லையாம்படி; மயர்வு அற - மயக்கம் (அறியாமை) நீங்குமாறு; அருளினன் - கொடுத்தவன்; அயர்வுஅறும் - மறதியற்ற; அமரர்கள் - (மரணமில்லாத) தேவர்கள்; அதிபதி – தலைவன்; துயர் அறு – துன்பத்தைப் போக்குகின்ற; சுடர் அடி - ஒளி பொருந்திய திருவடிகளை; மனன் - மனம்.

## இலக்கணக்குறிப்பு :

உயர்வு + அற — உயர்வற ; உயர்நலம் — வினைத்தொகை (உயர்ந்த, உயரும், உயருகின்ற என்று முக்காலமும் விரியும்) உடையவன்—குறிப்பு வினையாலணையும் பெயர் (காலங்காட்டவில்லை) ; மயர்வு + அற—மயர்வற ; மதிநலம்—வேற்றுமைத்தொகை (மதியினது நலம் என விரியும்) ; அருளினன் — தெரிநிலை வினையாலணையும் பெயர் (காலங் காட்டிற்று); அயர்வு + அறும் — அயர்வறும்; துயர் + அறு— துயரறு ; சுடர் + அடி — சுடரடி — இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை ; மனம்—மனன்—ஈற்றுப்போலி ; ஏகாரம் விளி.

## 2. தமிழ் மொழி

[வரகவி என்றும் தேசிய கவி என்றும் சிறப்பித்துக் கூறப்படுகின்ற மகாகவி சுப்ரமணிய பாரதியார் எட்டையாபுரத்தில் கி. பி. 1889-ஆம் ஆண்டு சின்னச்சாமி ஐயருக்குப் புதல்வராய்ப் பிறந்தார் ; இளமையிலேயே கவி பாடும் திறமை பெற்று எட்டையாபுரம் சமஸ்தானத்தில் புலவராய் இருந்து, பின்னர்த் தேச விடுதலைப் போராட்டத்தில் பங்கு கொண்டு, உணர்ச்சி ததும்பும் தேசியப் பாடல்களைப் பாடி மக்களைக் கிளர்ந்தெழும்படி செய்தார் ; 1921-இல் காலமானார். பாடமாக வந்துள்ள செய்யுள் அவரது தாய்மொழிப் பற்றை நன்கு எடுத்துக்காட்டுகின்றது.]

வாழ்க நிரந்தரம் வாழ்க தமிழ்மொழி
வாழிய வாழியவே !
வான மளந்த(து) அனைத்தும் அளந்திடும்
வண்மொழி வாழியவே !
ஏழ்கடல் வைப்பினும் தன்மணம் வீசி
இசைகொண்டு வாழியவே !
எங்கள் தமிழ்மொழி எங்கள் தமிழ்மொழி
என்றென்றும் வாழியவே !

## அருஞ்சொற்பொருள் :

நிரந்தரம்—நிலையாக ; வானம் அளந்தது—வானத்தில் அடங்கியுள்ள பொருள்கள் ; வண்மொழி — செழிப்பான தமிழ்மொழி ; வைப்பு — இடம்(உலகம்) ; இசை — புகழ்.

## இலக்கணக்குறிப்பு :

வாழ்க — வியங்கோள் வினைமுற்று ; தமிழ்மொழி — இரு பெயரொட்டுப் பண்புத்தொகை ; (தமிழாகிய மொழி என்று சிறப்புப் பெயரும் பொதுப் பெயருமாய்த் தொடர்ந்து வந்தது.) வாழிய — வியங்கோள் வினைமுற்று ; அளந்தது — வினையாலணையும் பெயர் ; வண்மொழி — பண்புத்தொகை (வண்மை + மொழி) ; ஏழ்கடல் — பண்புத்தொகை (ஏழாகிய கடல் என விரியும்) ; வைப்பினும்—உம்மை முற்றும்மை ; என்று + என்றும்—என்றென்றும்.

## 3. தமிழ் நாடு

[இச்செய்யுளின் ஆசிரியர், மதுரை அமெரிக்கன் கல்லூரியில் முப்பத்தேழு ஆண்டுகள் தமிழ்ப் பேராசிரியராய் இருந்து அரும்பெருந் தொண்டாற்றிய செந்நாப்புலவர் ஆ. கார்மேகக்கோனார் என்பவர் ; இவர் கி. பி. 1889-இல் பிறந்து, 1957-இல் இயற்கை எய்தினார் ; மிகுந்த ஆராய்ச்சித் திறமையும், எழுத்து வன்மையும், சொல் வன்மையும் உடையவர் ; பல அரிய நூல்களை இயற்றியவர்.]

சங்கம் வைத்துத் தமிழ்பயின்று தகைமைபெறு நாடு
தலைமைமிகு புலவர்தமைத் தந்ததிரு நாடு
வங்கமிசைக் கடல்கடந்து வளங்கொணர்ந்த நாடு
வகுத்தஅறம் பலபுரிந்து வயங்குகின்ற நாடு
துங்கமிகும் வீரர்தமைத் தோற்றுவித்த நாடு
துகளறுசீர்ப் போர்முறையால் தூய்மைபெறு நாடு
எங்கும்எழிற் பொழில்சூழ்ந்தே ஏர்திகழும் நாடு
எவ்வளமும் செழித்தயலார் இசைக்கும்இசை நாடு.

## அருஞ்சொற்பொருள் :

தகைமை—பெருமை (தகுதி); வங்கம்—கப்பல்; மிசை—மீது; வயங்கு—விளங்கு; துங்கம்—உயர்வு; துகள்அறு—குற்றமற்ற; எழில்—அழகிய; பொழில்—சோலை; ஏர்—அழகு; திகழும்—விளங்கும்; இசைஇசைக்கும்—புகழ்பாடுகின்ற.

## இலக்கணக்குறிப்பு :

தகைமை — பண்புப்பெயர்; பெறுநாடு — வினைத்தொகை; கடல் கடந்து—வேற்றுமைத்தொகை: (கடலைக் கடந்து என விரியும்); துகள் + அறு—துகளறு; போர்முறை—ஆறும் வேற்றுமைத்தொகை; எழில் பொழில், இசை நாடு — இரண்டன் உருபும் பயனும் உடன் தொக்க தொகைகள்.

## கேள்விகள் :

1. நம்மாழ்வார் இறைவனை எப்படி வருணிக்கிறார் ?

2. பாரதியார் தமிழ்மொழியின் பெருமையை எங்ஙனம் கூறுகிறார் ?

3. தமிழ்நாட்டின் பெருமையைப் பேராசிரியர் கார்மேகக்கோனார் கூறியபடி தொகுத்துக் கூறுக.

---

# II. அறவுரை

## 1. திருக்குறள்

[ திருக்குறளை இயற்றியவர் தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனுர். இந்நூல் 1330 குறள் வெண்பாக்களால் ஆகியது; 133 அதிகாரங்களை உடையது; அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று உறுதிப் பொருள்களையும் பற்றி முறையே அறத்துப்பால், பொருட் பால், காமத்துப்பால் என்னும் மூன்று பகுதிகளாக விரித்துரைப்பது; எனவே, முப்பால் என்றும் முப்பால் நூல் என்றும் சிறப்பிக்கப்படுவது. இது வடமொழி மறை போலத் தமிழில் இயன்றமையால் தமிழ் மறை என்று வழங்கப்படும்; எல்லோருக்கும் பொதுவான அறங்களைக் கூறுவதால் பொதுமறை என்றும் சொல்லப்படும். இந்நூலாசிரியர் காலம் ஏறத்தாழக் கி. பி. இரண்டாம் நூற்றுண்டு; (கடைச் சங்க காலம்); இது பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் அடங்கும்.]

### கடவுள் வாழ்த்து

1. வேண்டுதல்வேண் டாமை இலானடி சேர்ந்தார்க்(கு)
யாண்டும் இடும்பை இல.

### வான் சிறப்பு

2. விசும்பின் துளிவீழின் அல்லால்மற் றுங்கே
பசும்புல் தலைகாண் பரிது.

### நீத்தார் பெருமை

3. இருமை வகைதெரிந்(து) ஈண்(டு)அறம் பூண்டார்
பெருமை பிறங்கிற்(று) உலகு.

### அறன் வலியுறுத்தல்

4. சிறப்பீனும் செல்வமும் ஈனும் அறத்தினூஉ உங்(கு)
ஆக்கம் எவனோ உயிர்க்கு ?

5. ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வா யெல்லாம் செயல்.

### இல் வாழ்க்கை

6. அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றில்
போஒய்ப் பெறுவ தெவன்?

### வாழ்க்கைத் துணை நலம்

7. பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
திண்மைஉண் டாகப் பெறின்?

8. சிறைகாக்கும் காப்(பு)எவன் செய்யும்? மகளிர்
நிறைகாக்கும் காப்பே தலை.

### மக்கட்பேறு

9. தம்மின்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது.

### அன்புடைமை

10. அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்;
மறத்திற்கும் அஃதே துணை.

### விருந்தோம்பல்

11. இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு.

### இனியவை கூறல்

12. இன்சொலால் ஈரம் அளைஇப் படி(று)இலவாம்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்.

13. அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின்.

### செய்ந்நன்றி யறிதல்

14. செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது.

### நடுவு நிலைமை

15. கெடுவல்யான் என்ப தறிகதன் நெஞ்சம்
நடுவொரீஇ அல்ல செயின்.

### அடக்கமுடைமை

16. காக்க பொருளா அடக்கத்தை; ஆக்கம்
அதனினூஉங் கில்லை உயிர்க்கு.

17. எல்லார்க்கும் நன்றாம் பணிதல்; அவருள்ளும்
செல்வர்க்கே செல்வம் தகைத்து.

### பொறையுடைமை

18. ஒறுத்தாரை ஒன்றாக வையாரே; வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போல் பொதிந்து.

### அழுக்காறாமை

19. அழுக்காற்றின் அல்லவை செய்யார் இழுக்காற்றின்
ஏதம் படுபாக்(கு) அறிந்து.

### வெஃகாமை

20. அஃகாமை செல்வத்திற்(கு) யாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள்.

### ஒப்புரவறிதல்

21. ஒப்புரவி னால்வரும் கேடெனின் அஃ(து)ஒருவன்
விற்றுக்கோள் தக்க(து) உடைத்து.

### ஈகை

22. வறியார்க்(கு)ஒன்(று) ஈவதே ஈகை;மற் றெல்லாம்
குறியெதிர்ப்பை நீர(து) உடைத்து.

23. இலனென்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலனுடையான் கண்ணே உள.

24. அற்றார் அழிபசி தீர்த்தல் அஃ(து)ஒருவன்
பெற்றான் பொருள்வைப் புழி.

## புகழ்

25. ஒன்றா உலகத்(து) உயர்ந்த புகழல்லால்
பொன்றாது நிற்ப(து)ஒன்(று) இல்.

26. வசையென்ப வையத்தார்க்(கு) எல்லாம் இசையென்னும்
எச்சம் பெறாஅ விடின்.

## புலால் மறுத்தல்

27. தன்ஊன் பெருக்கற்குத் தான்பிறி(து) ஊனுண்பான்
எங்ஙனம் ஆளும் அருள்?

## தவம்

28. வேண்டிய வேண்டியாங்(கு) எய்தலால் செய்தவம்
ஈண்டு முயலப் படும்.

## கூடா ஒழுக்கம்

29. மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்தது ஒழித்து விடின்.

## வாய்மை

30. வாய்மை எனப்படுவ(து) யாதெனின் யாதொன்றும்
தீமை இலாத சொலல்.

## வெகுளாமை

31. தன்னைத்தான் காக்கிற் சினம்காக்க காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம்.

## இன்னா செய்யாமை

32. நோயெல்லாம் நோய்செய்தார் மேலவாம்; நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர்.

## நிலையாமை

33. நெருநல் உளன்ஒருவன் இன்றில்லை என்னும்
பெருமை உடைத்(து)இவ் வுலகு.

## மெய்யுணர்தல்

34. எப்பொருள் எத்தன்மைத்(து) ஆயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப(து) அறிவு.

35. காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய்.

## ஊழ்

36. நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்
அல்லல் படுவ தெவன்?

## இறை மாட்சி

37. காட்சிக்(கு) எளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்
மீக்கூறும் மன்னன் நிலம்.

## கல்வி

38. எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு.

39. உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில்.

## கல்லாமை

40. கல்லா ஒருவன் தகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும்.

41. விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோ(டு) ஏனை யவர்.

## கேள்வி

42. நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய
வாயினர் ஆதல் அரிது.

## அறிவுடைமை

43. எவ்வ(து) உறைவ(து) உலகம் உலகத்தோ(டு)
அவ்வ(து) உறைவ(து) அறிவு.

## பெரியாரைத் துணைக்கோடல்

44. தம்மிற் பெரியார் தமரா ஒழுகுதல்
வன்மையுள் எல்லாம் தலை.

45. இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பார் இலானும் கெடும்.

## தெரிந்து செயல் வகை

46. ஆக்கம் கருதி முதல்இழக்கும் செய்வினை
ஊக்கார் அறிவுடை யார்.

47. நன்றாற்றல் உள்ளும் தவறுண்(டு) அவரவர்
பண்பறிந்(து) ஆற்றாக் கடை.

## வலியறிதல்

48. நுனிக்கொம்பர் ஏறினார் அஃ(து)இறந்(து) ஊக்கின்
உயிர்க்(கு)இறுதி ஆகி விடும்.

49. ஆகா(று) அளவிட்டி(து) ஆயினும் கேடில்லை
போகா(று) அகலாக் கடை.

### காலமறிதல்

50. அருவினை என்ப உளவோ கருவியால்
காலம் அறிந்து செயின்?

51. கொக்(கு)ஒக்க கூம்பும் பருவத்து; மற்(று)அதன்
குத்(து)ஒக்க சீர்த்த இடத்து.

### இடனறிதல்

52. அஞ்சாமை அல்லால் துணைவேண்டா எஞ்சாமை
எண்ணி இடத்தால் செயின்.

### தெரிந்து வினையாடல்

53. அன்(பு)அறிவு தேற்றம் அவாவின்மை இந்நான்கும்
நன்(கு)உடையான் கட்டே தெளிவு.

### சுற்றம் தழால்

54. பற்றற்ற கண்ணும் பழைமைபா ராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே உள.

### பொச்சாவாமை

55. அச்சம் உடையார்க்(கு) அரண்இல்லை ஆங்(கு)இல்லை
பொச்சாப்(பு) உடையார்க்(கு) நன்கு.

### செங்கோன்மை

56. கொலையிற் கொடியாரை வேந்(து)ஒறுத்தல் பைங்கூழ்
களைகட்(டு) அதனொடு நேர்.

### வெருவந்த செய்யாமை

57. அருஞ்செவ்வி இன்னா முகத்தான் பெருஞ்செல்வம்
பேஎய்கண்(டு) அன்ன(து) உடைத்து.

### கண்ணோட்டம்

58. கண்ணோட்டத்(து) உள்ள(து) உலகியல்; அஃதிலார்
உண்மை நிலக்குப் பொறை.

### ஊக்கமுடைமை

59. உரம்ஒருவற்(கு) உள்ள வெறுக்கை; அஃ(து)இல்லார்
மரம்;மக்கள் ஆதலே வேறு.

### ஆள்வினையுடைமை

60. தாளாண்மை என்னும் தகைமைக்கண் தங்கிற்றே
வேளாண்மை என்னும் செருக்கு.

61. தெய்வத்தான் ஆகா(து) எனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்.

### அமைச்சு

62. அறிகொன்(று) அறியான் எனினும் உறுதி
உழையிருந்தான் கூறல் கடன்.

### வினைத்தூய்மை

63. ஈன்றாள் பசிகாண்பான் ஆயினும் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை.

### வினைத்திட்பம்

64. வினைத்திட்பம் என்ப(து) ஒருவன் மனத்திட்பம்;
மற்றைய எல்லாம் பிற.

### குறிப்பறிதல்

65. அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம்.

### படைச்செருக்கு

66. விழுப்புண் படாதநாள் எல்லாம் வழுக்கினுள்
வைக்கும்தன் நாளை எடுத்து.

### நட்பு

67. நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு.

## நட்பாராய்தல்

68. ஊதியம் என்ப(து) ஒருவற்குப் பேதையார்
கேண்மை ஒரீஇ விடல்.

## பழைமை

69. பேதைமை ஒன்றோ பெருங்கிழமை என்றுணர்க
நோதக்க நட்டார் செயின்.

## சூது

70. சிறுமை பலசெய்து சீரழிக்கும் சூதின்
வறுமை தருவ(து)ஒன்(று) இல்.

## மானம்

71. புகழ்இன்றால் புத்தேள்நாட்(டு) உய்யாதால் என்மற்(று)
இகழ்வார்பின் சென்று நிலை?

## சான்றாண்மை

72. கொல்லா நலத்தது நோன்மை; பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு.

73. இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு?

## நாணுடைமை

74. அணியன்றோ நாணுடைமை சான்றோர்க்(கு)?
பிணியன்றோ பீடு நடை? [அஃதின்றேல்

## குடி செயல் வகை

75. குற்றம் இலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்றும் உலகு.

## உழவு

76. இலம்என்(று) அசைஇ இருப்பாரைக் காணின்
நிலம்என்னும் நல்லாள் நகும்.

### நல்குரவு

77. நற்பொருள் நன்குணர்ந்து சொல்லினும் நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும்.

### இரவச்சம்

78. இர(வு)உள்ள உள்ளம் உருகும்; கர(வு)உள்ள
உள்ளதூஉம் இன்றிக் கெடும்.

### கயமை

79. தேவர் அனையர் கயவர் அவரும்தாம்
மேவன செய்(து)ஒழுக லான்.

80. அறைபறை அன்னர் கயவர்தாம் கேட்ட
மறைபிறர்க்(கு) உய்த்(து)உரைக்க லான்.

### அருஞ்சொற் பொருள் :

1. வேண்டுதல்--விருப்பு; வேண்டாமை--வெறுப்பு; இலான்—இல்லாதவனாகிய இறைவன்; யாண்டும்—எப்பொழுதும், எவ்விடத்தும்; இடும்பை—துன்பங்கள்.

2. விசும்பின்—ஆகாயத்தில்; துளி—மழைத் துளிகள்; வீழின் அல்லால்—விழுந்தாலன்றி; தலைகாண்பு அரிது—தலையைக் காண்பதும் முடியாது; (மற்று, ஆங்கே—அசைகள்).

3. இருமை—பிறப்பு, வீடு (மோட்சம்); வகை—தன்மை; ஈண்டு—இவ்வுலகத்தில்; அறம்—துறவறம்; பூண்டார்-மேற்கொண்டவர்களுடைய; பிறங்கிற்று—விளங்கும்.

4. சிறப்பு—வீடு பேறு (மோட்சம்); செல்வம் — சுவர்க்கம் முதலிய செல்வங்கள்; ஊங்கு—மேலான; ஆக்கம்—நன்மையைத் தருவது; எவன்—என்ன ?

5. ஒல்லும்—இயன்ற; ஓவாதே—இடைவிடாமல்; செல்லும் வாய்—முடிந்த இடத்து; செயல்—செய்யக்கடவர்.

**6.** அறத்தாற்றின்—அறநெறிப்படி; ஆற்றின் — செய்தால்; புறத்தாற்றின்—துறவறநெறியில்.

**7.** பெருந்தக்க—பெருமையான தகுதியுடையவை; திண்மை—உறுதி (கலங்காத நிலை).

**8.** சிறை—காவற்கூடம்; நிறை காக்கும்—கற்பினுல் தம்மைப் பாதுகாத்துக்கொள்ளும்; தலை—தலையானது (சிறந்த பாதுகாப்பாகும்)

**9.** தம்மில்—தம்மைவிட; மன்னுயிர்—நிலைபெற்ற மக்கள்.

**10.** சார்பு — துணையாவது; என்ப — என்று சொல்லுவர்; மறத்திற்கும்—பாவச் செயல்களை நீக்குதற்கும்.

**11.** இல் இருந்து ஓம்பி—வீட்டின்கண் மனையாளோடும் இருந்து பொருளைப் பாதுகாத்து; விருந்து ஓம்பி — விருந்தினரைப் பேணி; வேளாண்மை—உபகாரம், உதவி.

**12.** இன்சொல்—இனிய சொல்லாவது; ஈரம் அளைஇ—அன்பு கலந்து: படிறு—குற்றம், வஞ்சனை; இலவாம்—இல்லாதனவாகிய; செம்பொருள்—அறத்தினை; கண்டார்—அறிந்தவர்.

**13.** அல்லவை—பாவச் செயல்கள்; இனிய—இன்சொற்களை.

**14.** செய்யாமல்—தனக்குப் பிறர் ஓர் உதவியும் செய்யாமலிருக்கும் போது; செய்த—தான் பிறர்க்குச் செய்த; வையகம்—உலகம்; வானகம்—தேவலோகம்; ஆற்றல் அரிது—கைம்மாருகக் கொடுத்தாலும் போதாது.

**15.** கெடுவல்—அழிவேன்; நடுவு ஓரீஇ—நியாயத்தினின்றும்நீங்கி; அல்ல—தகாதவற்றை.

**16.** பொருளா—சிறந்த பொருளாக.

**17.** செல்வம் தகைத்து—மற்ருெரு செல்வமாகும் தகுதியை உடையது.

18. ஒறுத்தார்—தண்டித்தவரை ; ஒன்றாக—ஒரு பொருளாக ; வையார்—கருதமாட்டார் ; பொதிந்து—இடைவிடாது நினைத்து.

19. அழுக்காற்றின்—பொறாமையினால் ; இழுக்காற்றின்—அத் தீநெறியால் ; ஏதம் — துன்பம் ; படுபாக்கு — உண்டாவதை.

20. அஃகாமை — குறையாமலிருக்கும் வழி ; வெஃகாமை — விரும்பாதிருத்தல்.

21. ஒப்புரவு - உலக நடையினையறிந்து செய்தல்; விற்றுக்கோள் தக்கது உடைத்து - தன்னை விற்றாயினும் பெற்றுக்கொள்ளும் தகுதி யையுடையது.

22. வறியார் — ஏழைகள் ; ஒன்று — ஒரு பொருளை ; குறி எதிர்ப்பை - கைம்மாறு ; நீரது - தன்மை.

23. இலன் — (நான்) ஏழை; எவ்வம் — இழிவான சொல்; குலன்—உயர்குடி.

24. அற்றார்—பொருளற்றவர் (ஏழைகள்); அழிபசி—மிக்கபசி; தீர்த்தல்—தீர்க்கக்கடவர்; பொருள் பெற்றான் ஒருவன்—செல்வன்; வைப்புழி—சேமித்து வைக்கும் இடமாகும்,

25. ஒன்றா — ஒரு பொருளும் நிலைக்காத; பொன்றாது — அழியாமல்.

26. இசை — புகழ்; எச்சம் — இறந்த பின் எஞ்சியிருப்பது; வசை—பழி; என்ப—என்று கூறுவர் பெரியோர்.

27. ஊன்—உடம்பு; பிறிது—மற்றோருயிரின்.

28. வேண்டிய—விரும்பிய பயன்களை; வேண்டியாங்கு—விரும் பியபடியே; எய்தலான்—அடைவதால்; ஈண்டு—இப்பிறவியில்.

29. மழித்தல்—தலைமயிரை நீக்குதல்; நீட்டல்—சடைவளர்த்தல்; உலகம்—உயர்ந்தோர்; பழித்தது—தகாதென்று கூறிய ஒழுக்கத்தை.

30. யாதொன்றும் – சிறிதும்; இலாத - இல்லாத சொற்களை.

31. காக்கின் - பாதுகாக்க விரும்பினால்; சினம் காக்க – கோபம் வராமல் தடுத்துக்கொள்ளக் கடவன்.

32. நோய் – இன்னாதன : மேலவாம் - மேற்சென்றடையும்.

33. நெருநல் - நேற்று; பெருமை – (நிலையாமை) மிகுதி.

34. எத்தன்மைத்தாயினும் - எந்த இயல்புடையதாயினும்: அப் பொருள் – அந்தப்பொருளின்கண் ; அறிவு – மெய்யுணர்வு.

35. காமம் - விருப்பு; வெகுளி - வெறுப்பு; மயக்கம் - அறியாமை நாமம் - பெயருங்கூட; நோய் - வினைப்பயன்கள் (பாவ புண்ணியங்கள்); கெடும் - உளவாகா.

36. நன்று - நல்வினை; ஆங்கால் – விளையும் போது; நல்ல வா(க)– (இதன் விளைவுகளை) நல்லவை என்று; அன்று - தீவினை; அல்லல் - துன்பம்.

37. காட்சிக்கு - (யாவரும் சென்று) காண்பதற்கு; எளியன் – எளிதில் கிடைப்பவனாய்; மீக்கூறும் - (உலகம்) உயர்த்துக்கூறும்.

38. எண் – கணிதம்; எழுத்து - இலக்கியம்; (அறம் முதலிய பொருள்களைக் காண்பதற்குக் கருவியாதலின், இவ்விரண்டும் கண் எனப்பட்டன.)

39. உவப்ப – மகிழுமாறு ; தலைக்கூடி – தலைப்பெய்து (சேர்ந்து) உள்ளப் பிரிதல் – (இனி இவரை நாம் எங்ஙனம் கூடுவோம் என்று) நினையுமாறு நீங்குதல்; அனைத்து - அத்தன்மைத்து.

40. தகைமை – (நான் அறிவுடையவன் என்று தன்னை மதிக்கும்) மதிப்பு; தலைப்பெய்து – கற்றவன் கண்டு; சொல்லாட – உரையாட; சோர்வுபடும் – கெடும்.

41. இலங்கு - விளங்கிய; ஏனையவர் - அல்லாதவர் ; விலங்கொடு மக்கள் அனையர் - விலங்கினும் மக்கள் எத்துணை நன்மையுடையவரோ அத்துணைத் தீமையுடையவர்.

42. நுணங்கிய - நுட்பமான; கேள்வியர் - கேள்வி அறிவுடையவர்; வணங்கிய வாயினர் - பணிந்த சொற்களையுடையவர்.

43. எவ்வது - எவ்வழியில்; உறைவது - ஒழுகுவது; அவ்வது- அவ்வழியில்.

44. தமரா - தம்மைச் சேர்ந்தவராகக் கொண்டு; தலை - சிறந்தது.

45. இடிப்பாரை - அறிவு புகட்டுபவரை; ஏமரா - காவலற்ற; இலானும் - இல்லையாயினும்.

46. ஆக்கம் - ஊதியத்தை; ஊக்கார் - மேற்கொள்ளார்.

47. நன்று ஆற்றல் - நல்ல செயல்களைச் செய்தல்; ஆற்றுக்கடை செய்யாவிடின்.

48. கொம்பர் நுனி - கிளையினது நுனியில்; அஃதிறந்து - அவ்வளவினைக் கடந்து; ஊக்கின் - முயன்றால்.

49. ஆகாறு - பொருள் வரும் வழி; போகாறு - போகும் வழி; அகலாக்கடை - மிகுதியாகாவிடின்.

50. அருவினை - அரிய செயல்கள் ; கருவி - முடித்தற்குரிய கருவி; காலம் - தக்க பொழுது.

51. கூம்பும் பருவம் - செயல் நிகழ முடியாத காலம்; கொக்கு ஒக்க - கொக்கை போலக் காலம் பார்த்திருக்கக் கடவர்; சீர்த்த விடத்து - செய்யும் காலம் வரும்போது.

52. அஞ்சாமை - மனவுறுதி; எஞ்சாமை - குறையாமல்; இடத்தால் - இடத்தோடு பொருந்த,

53. தேற்றம் - கலங்காமை, கடடே - மேலதே;

54. பற்று அற்ற கண்ணும் - செல்வம் இல்லாத காலத்தும்; பழைமை - பழைய உறவை.

55. பொச்சாப்பு-மறதி; நன்கு இல்லை-செல்வத்தால் பயனில்லை.

56. கொலையின் - கொலையால்; ஒறுத்தல் - தண்டித்தல்; பைங்கூழ் - பயிர்களுக்கு; களை கட்டதனோடு - களை நீக்கிக் காத்தலோடு.

57. அருஞ்செவ்வி - (தன்னைக் காண வேண்டுபவர்) காண்பதற்கு அரியவனாய்; பேஎய் கண்டன்னது உடைத்து - பேயின் வசப்பட்டதைப் போன்றது (அதனால் தனக்கும் பிறர்க்கும் பயனில்லை.)

58. கண்ணோட்டத்து-தாட்சணியத்தினால்: உண்மை-இருப்பது; நிலக்குப்பொறை - பூமிக்குப் பாரம்.

59. உள்ளவெறுக்கை - ஊக்கமிகுதி; உரம் - திண்ணிய அறிவு.

60. தாளாண்மை - முயற்சி; தகைமை - உயர்ந்த குணம்; செருக்கு - மேம்பாடு.

61. தெய்வத்தான் - ஊழ்வினைப்படி; ஆகாது - கருதிய பயனைத் தாராது; மெய் வருத்த - உடம்பு வருந்திய அளவிற்கு.

62. அறிகொன்று - (பிறர் கூறும்) அறிவையும் அழித்து; அறியான் - தானேயும் அறியாதவன்; உழை இருந்தான் - அருகில் இருப்பவன் அமைச்சன்); உறுதி - நன்மை தருபவற்றை.

63. ஈன்றாள் - பெற்ற தாயினது; சான்றோர் - அறிவுடையோர்

64. வினைத்திட்பம் - செயல் புரிவதில் உறுதி; மனத்திட்பம் - மன உறுதி.

**65.** அடுத்தது - அடுத்துள்ள பொருளை; பளிங்கு - கண்ணாடி; கடுத்தது - மிக்க எண்ணத்தை.

**66.** விழுப்புண் மார்பிலும் தோளிலும் முகத்திலும் படும் சிறந்த புண்; வழுக்கினுள் - வீணே கழிந்த நாட்களில்.

**67.** நவில்தொறும்-ஒவ்வொரு முறையும் கற்கும் போதும்; நூல் நயம் போலும் - ஒரு நூலின் பெருமை விளங்குவது போன்றது; பயில் தொறும் - பழகும்தோறும்; பண்புடையாளர் - நற்பண்புடைய பெரியோர்.

**68.** ஊதியம் - பேறு (செல்வம் பேதையார் - அறிவற்றவர்; கேண்மை - நட்பு; ஓரீஇவிடல் - ஒழித்து நீக்குதல்.

**69.** நோதக்க - வெறுக்கத்தக்கவற்றை; நட்டார் - நண்பர்கள்; பெருங்கிழமை - மிக்க உரிமை.

**70.** சிறுமை - துன்பங்கள்; சீர் - புகழ்.

**71.** நிலை - நிற்றல்; புத்தேள் நாட்டு உய்யாது - தேவர் உலகத்திற்கும் செலுத்தாது.

**72.** நோன்மை - தவம்; சால்பு - பெரியராம் தன்மை

**73.** பயத்ததோ - பயனையுடையதோ?

**74.** நாணுடைமை - பழிபாவங்களுக்கு அஞ்சும் தன்மை; பீடு நடை - பெருமிதமான நடை.

**75.** குடி செய்து - குடியை உயரச் செய்து.

**76.** இலம் - யாம் வறியவர்; அசைஇ - சோம்பி.

**77.** நல்கூர்ந்தார்-வறுமையுடையவரது; சோர்வுபடும்-பயனற்றதாகும்.

**78.** இரவு உள்ள-இரந்து நிற்றலை நினைத்தால்; கரவு-உள்ளதை மறைத்தல்.

79. கயவர் - கீழோர்; மேவன - விரும்பும் செயல்களை.

80. மறை - இரகசியத்தை; உய்த்து உரைக்கலான் - கொண்டு போய் சொல்லுதலால்; அறைபறை - அறைபடும் பறை; அன்னர் - போன்றவர்.

## இலக்கணக்குறிப்பு:

1. இலான் - எதிர்மறைக்குறிப்பு வினையாலணையும் பெயர்; சேர்ந்தார்க்கு - தெரிநிலை வினையாலணையும் பெயர்.

2. பசும்புல் - பண்புத்தொகை; அரிது - குறிப்பு வினைமுற்று.

3. பூண்டார் - தெரிநிலை வினையாலணையும் பெயர்.

4. செல்வமும் - உம்மை, இறந்தது தழீஇய எச்சம்.

5. வாய் - ஏழாம் வேற்றுமை உருபு; செயல் - வியங்கோள் வினைமுற்று.

6. போஓய் - செய்யுளிசை (அல்லது இசை நிறை) அளபெடை.

7. தக்க - குறிப்பு வினையாலணையும் பெயர்.

8. காப்பு - தொழிற்பெயர்.

9. மாநிலம் - உரிச்சொல் தொடர்; மன்னுயிர் - வினைத்தொகை; (மன்னிய, மன்னுகின்ற, மன்னும், உயிர் என விரியும்.)

10. அறத்திற்கே - ஏகாரம் பிரிநிலை; மறத்திற்கும் - உம்மை, இறந்தது தழீஇயது; அஃதே - ஏகாரம் தேற்றம்.

11. விருந்து - பண்பாகுபெயர்; விருந்து (புதுமை) என்னும் பண்பின் பெயர் அதனையுடையவர்க்கு ஆகி வந்தது.

12. அளைஇ - சொல்லிசையளபெடை; செம்பொருள் - பண்புத் தொகை.

13. அல்லவை, நல்லவை, இனிய – குறிப்பு வினையாலணையும் பெயர்.

14. வையகமும் வானகமும் – உம்மை எண்ணும்பொருளில் வந்த இடைச்சொல்.

15. கெடுவல் – தன்மையொருமை எதிர்கால வினைமுற்று; ஓரீஇ – சொல்லிசை அளபெடை; அல்ல – குறிப்பு வினையாலணையும் பெயர்.

16. காக்க – வியங்கோள் வினைமுற்று; பொருளா – ஈறுகெட்ட வினையெச்சம்; ஆக்கம் – தொழிலாகுபெயர்.

17. எல்லார்க்கும் – உம்மை, முற்றும்மை; செல்வர்க்கே – ஏகாரம் பிரிநிலை; தகைத்து – குறிப்பு வினைமுற்று.

18. ஒறுத்தாரை, பொறுத்தாரை – வினையாலணையும் பெயர்கள்.

19. படுபாக்கு – செய்பாக்கு என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம்.

20. அஃகாமை, வெஃகாமை – எதிர்மறைத் தொழிற்பெயர்கள்.

21. கேடு, கோள் – முதனிலை நீண்ட தொழிற்பெயர்கள்.

22. வறியார்க்கு – குறிப்பு வினையாலணையும் பெயர்; ஈவதே – ஏகாரம் தேற்றம்; நீரது – குறிப்பு வினைமுற்று; இதில் அது – பகுதிப் பொருள் விகுதி (இதற்குப் பகுதியின் பொருளன்றி வேறு தனிப்பொருள் இல்லை.)

23. இலன் – தன்மை ஒருமைக் குறிப்பு முற்று.

24. அற்றார், பெற்றான் – வினையாலணையும் பெயர்கள்; அழிபசி – வினைத்தொகை; தீர்த்தல் – அல் ஈற்று உடன்பாட்டு வியங்கோள் வினைமுற்று.

25. ஒன்று - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம் (தகர ஈறு கெட்டது); இல் - கடைக்குறை விகாரம் (ஐ என்னும் கடைசி எழுத்து குறைந்தது.)

26. எச்சம் - தொழிலாகுபெயர்; பெருஅ - இசை நிறையளபெடை.

27. உண்பான் - வினையாலணையும் பெயர்.

28. வேண்டிய - வினையாலணையும் பெயர்; செய்தவம் - வினைத்தொகை.

29. உலகம்-இடவாகுபெயர்; (இங்கு உயர்ந்தோரைக் குறித்து நின்றது.)

30. படுவது + யாதெனின் - படுவதியாதெனின் (யகரத்தின் முன்னர் உகரம் இகரமாகியது, குற்றியலிகரம்); இலாத - எதிர்மறைக் குறிப்பு வினையாலணையும் பெயர்.

31. காக்க - வியங்கோள் வினைமுற்று.

32. மேல - பலவின்பால் குறிப்பு வினைமுற்று

33. உளன், இல்லை, உடைத்து - குறிப்பு வினைமுற்று.

34. மெய்ப்பொருள் - பண்புத்தொகை.

35. நாமம் - இழிவு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது; நோய் - சாதியொருமை (நோய்களையெல்லாம் குறித்தலால்)

36. நல்ல - பலவின்பால் குறிப்பு முற்று.

37. எளியன், சொல்லன் - குறிப்பு முற்றெச்சங்கள்; அல்லன் - குறிப்பு முற்று.

38. எண், எழுத்து - தொழிலாகுபெயர்கள்.

39. அனைத்து - குறிப்புமுற்று.

40. கல்லா - ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

41. இலங்குநூல் - வினைத்தொகை ; கற்றூர் - வினையாலணையும் பெயர் ; அனைய - குறிப்புமுற்று ; இச்செய்யுள் உவமையணி.

42. அல்லார் - குறிப்பு வினையாலணையும் ; வாயினர் - குறிப்பு முற்று.

43. உலகம் – இடவாகுபெயர்.

44. தமரா - ஈறுகெட்ட வினையெச்சம்.

45. ஏமரா - ஏமர், பகுதி ; கொடுப்பர் – வினையாலணையும் பெயர்.

46. செய்வினை - வினைத்தொகை ; அறிவுடையார் - குறிப்பு வினையாலணையும் பெயர்.

47. உள்ளும் – உம்மை, உயர்வு சிறப்பு.

48. கொம்பர் - கொம்பு என்பதன் கடைப் போலி ; ஏறினர் - வினையாலணையும் பெயர். இச்செய்யுள் பிறிது மொழிதல் அணி.

49. ஆகும்ஆறு = ஆகாறு, போகும்ஆறு = போகாறு, (உயிர் வரின் உக்குறள் மெய்விட்டோடும் என்னும் விதிப்படி குற்றியலுகரம் புணர்ச்சியில் மறைய, மெய்யோடு உயிர் சேர்ந்தது.)

50. அருவினை - பண்புத்தொகை, வினை - பால் பகா அஃறிணைப் பெயர்.

51. ஒக்க – வியங்கோள் வினைமுற்று ; இச்செய்யுள் உவமையணி.

52. அஞ்சாமை – எதிர்மறைத் தொழிற்பெயர் ; எஞ்சாமை - வினையெச்சம்.

53. உடையான் - குறிப்பு வினையாலணையும் பெயர் ; கட்டே - குறிப்பு வினைமுற்று.

**54.** கண்ணும்—உம்மை; உயர்வு—சிறப்பு; பற்று—முதனிலைத் தொழிற் பெயர், ஆகுபெயராயிற்று.

**55.** பொச்சாப்பு—தொழிற் பெயர்.

**56.** கொலையின்—கொலையால்; உருபு மயக்கம் (மூன்றனுருபுக்கு பதில் ஐந்தனுருபு வந்தது). இச்செய்யுள் உவமையணி.

**57.** அருஞ்செவ்வி, பெருஞ்செல்வம் — பண்புத் தொகைகள்; இன்னா—ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்; பேஎய் — இசை நிறையளபெடை. இதுவும் உவமையணி.

**58.** இலார்—எதிர்மறை வினையாலணையும் பெயர்; உண்மை—தொழிற் பெயர்; நிலம் + கு = நிலக்கு; பொறை—தொழிலாகு பெயர்.

**59.** மரம்—சாதியொருமை.

**60.** தகைமை—பண்புப் பெயர்.

**61.** முயற்சி—தொழிற் பெயர்,

**62.** அறி—முதனிலைத் தொழிற் பெயர். (அறிவு என்று மிகுதி இல்லாமல், முதனிலையளவே நின்று தொழிற் பெயராயிற்று).

**63.** ஈன்றாள்—வினையாலணையும் பெயர்; செய்யற்க—எதிர்மறை வியங்கோள் வினைமுற்று.

**64.** வினைத்திட்பம், மனத்திட்பம்—ஏழாம் வேற்றுமைத்தொகைகள்; என்பது—வினையாலணையும் பெயர்.

**65.** அடுத்தது; கடுத்தது—வினையாலணையும் பெயர்கள். இச்செய்யுள் உவமையணி.

**66.** விழுப்புண்—உரிச்சொற்றொடர்.

**67.** பண்புடையாளர்—குறிப்பு வினையாலணையும் பெயர். இதுவும் உவமையணி.

68. பேதையார்—குறிப்பு வினையாலணையும் பெயர்; ஓரீஇ—சொல்லிசையளபெடை. (ஒருவி என்னும் இயற்சொல் திரிசொல்லாயிற்று.)

69. நோதக்க, நட்டார்—வினையாலணையும் பெயர்கள்; உணர்க—வியங்கோள் வினைமுற்று.

70. இல்—இல்லை என்பதன் கடைக்குறை விகாரம்.

71. புத்தேள் நாடு—ஆறும் வேற்றுமைத் தொகை; இகழ்வார்—வினையாலணையும் பெயர்; நிலை—தொழிற் பெயர்.

72. கொல்லா, சொல்லா—ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சங்கள்; நோன்மை, சால்பு—பண்புப் பெயர்; நலத்தது—குறிப்பு முற்று; பிறர் தீமை—ஆறும் வேற்றுமைத் தொகை.

73. இன்னா, இனிய — குறிப்பு வினையாலணையும் பெயர்கள்; செய்தார்க்கு—தெரிநிலை வினையாலணையும் பெயர்; பயத்தது—குறிப்பு முற்று, உம்மை—உயர்வு சிறப்பு; ஏகாரம்—தேற்றம்.

74. ஓகாரங்கள்—எதிர்மறை.

75. குடி செய்து — இரண்டாம் வேற்றுமைத் தொகை; வாழ்வானை—வினையாலணையும் பெயர்; சுற்றமா—ஈறு கெட்ட வினையெச்சம்; உலகு—இடவாகு பெயர்,

76. இலம்—தன்மைப் பன்மை எதிர்மறைக் குறிப்பு முற்று; அசைஇ—சொல்லிசையளபெடை; இருப்பாரை — வினையாலணையும் பெயர்.

77. நற்பொருள்—பண்புத்தொகை; சொற்பொருள் — ஆறும் வேற்றுமைத் தொகை; நற்கூர்ந்தார்—வினையாலணையும் பெயர்.

78. இரவு + உள்ள = இரவுள்ள; கரவு + உள்ள = கரவுள்ள; உள்ளதூஉம்—இன்னிசையளபெடை.

79. மேவன---வினையாலணையும் பெயர். இச் செய்யுள் வஞ்சப் **புகழ்ச்சியணி**, அதாவது புகழ்வது போலப் பழித்தல்.

80. அறைபறை—வினைத்தொகை; மறை—தொழிலாகு பெயர்,

## கேள்விகள் :

1. இறைவனது குணம் எவ்வாறு கூறப்பட்டுள்ளது ?
2. இவ்வுலகில் யாருடைய பெருமை விளங்கி நிற்கும் ?
3. அன்பின் செயல் எவ்வாறு வற்புறுத்தப்பட்டுள்ளது ?
4. இல்வாழ்க்கையின் சிறந்த குறிக்கோள் யாது ?
5. இன்சொல் என்பது என்ன ?
6. இன்சொற் கூறுவதால் பயன் யாது ?
7. பொறுமையின் சிறப்பு எங்ஙனம் கூறப்பட்டுள்ளது?
8. உண்மையான ஈகை யாது ?
9. உலகத்தில் அழியாது நிற்பது யாது ?
10. வாய்மையின் இலக்கணம் என்ன ?
11. மன்னன் எவ்வாறிருக்க வேண்டும் ?
12. கல்வியின்பம் எவ்வாறு குறிக்கப்பட்டுள்ளது ?
13. அறிவின் இலக்கணமாவது யாது ?
14. வன்மையுள் எல்லாம் தலை—எது ?
15. அறிவுடையார் எத்தகைய செயல் செய்யார் ?
16. காலமறிந்து செயலாற்ற வேண்டுமென்பது எவ்வுவமையால் வற்புறுத்தப்பட்டுள்ளது ?

17. எத்தகைய பண்புடையவர்களை அரசன் தெரிந்து ஒரு வினையின்கண் ஆளவேண்டும் ?

18. சுற்றத்தாரிடம் உள்ள இயல்பு யாது ?

19. கொடியவர்களை அரசன் தண்டிப்பது எது போன்றது ?

20. 'பேஎய் கண்டன்ன துடைத்து'—எது? ஏன் ?

21. மனவூக்கம் இல்லாதவர் எத்தகையவர் ? ஏன் ?

22. அமைச்சனது கடமை யாது ?

23. மேலோர் நட்பு எத்தகையது ? விளக்குக,

24. சால்பு என்பது யாது ? சான்றோர் இயல்பு யாது ?

25. சான்றோர்க்கு அணி எது ?

26. கயவர் எத்தகையவர் ? ஏன் ?

## 2. நாலடியார்

[இது பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றாகும். பல சைன முனிவர்கள் பாடிய வெண்பாக்களினின்றும் தெரிந்தெடுத்த நானூறு வெண்பாக்களைக் கொண்ட ஒரு நீதி நூல். அதனால் இது நாலடி நானூறு என்று வழங்கப்படும். இந்நூலுக்குத் திருக்குறள் போல் பால் இயல் அதிகாரப் பகுப்புமுறை செய்து உரையும் செய்தவர் பதுமனார் என்னும் சைனப் புலவர். "ஆலும் வேலும் பல்லுக்குறுதி நாலும் இரண்டும் சொல்லுக்குறுதி." என்று வழங்கும் பழமொழியே இந்நூற் பெருமையை விளக்கும். இந்நூலிற் கூறப்படும் நீதிகள் எல்லா மதத்தினர்க்கும் சாதியார்க்கும் ஒத்தன.]

(செல்வத்தை வழங்காதவன் அதை இழந்தவனாகவே கருதப்படுவான்,)

1. உண்ணான் ஒளிநிறான் ஓங்கு புகழ்செய்யான்
துன்னருங் கேளிர் துயர்களையான்—கொன்னே
வழங்கான் பொருள்காத்(து) இருப்பானேல் அஆ !
இழந்தான்என்(று) எண்ணப்படும்.

(கற்க வேண்டுபவை மெய்யறிவு நூல்களே)

2. அலகுசால் கற்பின் அறிவுநூல் கல்லா(து)
உலகநூல் ஓதுவ(து) எல்லாம்—கலகல
கூஉந் துணையல்லால் கொண்டு தடுமாற்றம்
போஒந் துணையறிவார் இல்.

(மேன்மக்கள் எந்நிலையிலும் நற்குணத்தைக் கைவிடார்)

3. கடித்துக் கரும்பினைக் கண்தகர நூறி
இடித்துநீர் கொள்ளினும் இன்சுவைத்தே ஆகும்;
வடுப்பட வை(து)இறந்தக் கண்ணும் குடிப்பிறந்தார்
கூறுர்தம் வாயிற் சிதைந்து.

(நல்லினத்தால் சிறியோரது சிறுமை மறையும்)

4. பாலோ(டு) அளாயநீர் பாலாகும் அல்லது
நீராய் நிறம்தெரிந்து தோன்றுதாம்—தேரின்
சிறியார் சிறுமையும் தோன்றுதாம் நல்ல
பெரியார் பெருமையைச் சார்ந்து.

(முயற்சியால் வரும் வலிமையே வலிமை)

5. ஆடுகோ(டு) ஆகி அதர்இடை நின்றதூஉம்
காழ்கொண்ட கண்ணே களி(று) அணைக்கும்
கந்(து)ஆகும்;
வாழ்தலும் அன்ன தகைத்தே ஒருவன்தான்
தாழ்வின்றித் தன்னைச் செயின்.

அருஞ்சொற்பொருள் :

1. ஒளிநிறுன்-புகழை நிலை நாட்டாமல்; துன்னரும் பெறுதற்கரிய; கேளிர் - சுற்றத்தார்; கொன்னே - வீணாக; வழங்கான் - பிறருக்குக் கொடாமல்; அ ஆ-இரக்கக் குறிப்பு.

2. கற்பின் - கற்றால்; அலகுசால் - பெருமை மிக்க; அறிவு நூல் – மெய்யறிவைத் தரும் சமய நூல்களை; உலக நூல் - உலக அறிவைத் தரும் நூல்களை; துணை - மாத்திரை; தடுமாற்றம் - அறிவு மயக்கம்.

3. கண் தகர நூறி-கணுக்கள் உடையும்படி சிதைத்து; வடுப்பட-பழி உண்டாகுமாறு; இறந்தக் கண்ணும் - எல்லை மீறிய இடத்தும்; குடிப்பிறந்தார் - உயர்குடியிற் பிறந்தவர்.

4. அளாய - கலந்த; தேரின் - ஆராய்ந்தால்.

5. ஆடுகோடு-அசைகின்ற கொம்பு (கிளை); அதர் இடை-வழியில்; காழ் - வயிரம்; களிறு அணைக்கும் - யானையைக் கட்டும்; கந்து - கட்டுத்தறி.

## இலக்கணக் குறிப்பு:

1. உண்ணுன், நிருன், செய்யான், களையான் - முற்றெச்சங்கள்; துன்ன + அரும் = துன்னரும் (தொகுத்தல் விகாரம்); அ ஆ-ஈரசையாக விட்டிசைத்தது. (இன்றெனின் நீரை என்று ஓரசையாகிப் பிழைபடும்.)

2. அறிவு நூல்; உலக நூல்-இரண்டனுருபும் பயனும் உடன் தொக்க தொகைகள்; கலகல-இரட்டைக்கிளவி (ஒலிக்குறிப்புமாம்): கூஉம் - சொல்லிசையளபெடை (கூவும் என்ற இயற்சொல் கூஉம் என்று திரிசொல்லாயிற்று.) போஒம் - இசைநிறையளபெடை.

3. சுவைத்தே - குறிப்புமுற்று; ஏகாரம் - தேற்றம்; இச் செய்யுள் எடுத்துக்காட்டுவமையணி (இரண்டாம் அடிக்குப் பின், அது போல என்ற உவம உருபு தொக்கது)

4. சிறியார், பெரியார் - குறிப்பு வினையாலணையும் பெயர்கள்: இதுவும் எடுத்துக் காட்டுவமையணி.

5. ஆடுகோடு - வினைத்தொகை: நின்றதூஉம் - இன்னிசையளபெடை; தகைத்தே - குறிப்பு முற்று; ஏகாரம் அசை, இச் செய்யுள் உவமையணி.

## கேள்விகள்:

1. யார் தன் பொருளை இழந்தவனாகக் கருதப்படுவான்?

2. உலக நூல் கற்பதால் பயனில்லை என்று ஆசிரியர் கூறக் காரணம் யாது?

3. மேன்மக்கள் எந்நிலையிலும் நற்குணத்தைக் கைவிடார் என்பது எவ்வாறு வற்புறுத்தப்பட்டுள்ளது?

4. சிறியோர்க்குப் பெரியோரால் ஏற்படும் நன்மை என்ன? எது போல?

5. ஒருவன் முயற்சியால் எவ்வாறு பிறர்க்குப் பயன்பட முடியும்?

## 3. அறநெறிச்சாரம்

[இதனை இயற்றிய ஆசிரியர் முனைப்பாடியார் என்பவர். இவர் மதம் சைனம். இதனுள் கூறப்படும் அறமும் ஒழுக்கமும் எல்லோரும் மேற்கொள்ளத் தக்கவை. இந்நூலில் 222 வெண்பாக்கள் உள்ளன; இந்நூலின் காலம் 500 ஆண்டுகளுக்கு முற்பட்டதென்னலாம். இந்நூல் சிறந்த அறநெறிகளைச் சுருக்கி வெளியிடுகின்றமையால் 'அறநெறிச் சாரம்' எனப் பெயர் பெற்றது]

(இளமையில் அறம் செய்க)

1. இன்சொல் விளைநிலமா ஈதலே வித்தாக
வன்சொல் களைகட்டு வாய்மை எருஅட்டி
அன்புநீர் பாய்ச்சி அறக்கதிர் ஈன்பதோர்
பைங்கூழ் சிறுகாலைச் செய்.

(கீழ் மக்கள் நெஞ்சில் அறிவுரை புகாது)

2. வைகலும் நீருள் கிடப்பினும் கல்லிற்கு
மெல்லென்றல் சால அரிதாகும்; அஃதேபோல்
வைகலும் நல்லறம் கேட்பினும் கீழ்கட்குக்
கல்லினும் வல்லென் னும் நெஞ்சு.

(நூல் ஆராயும் முறை)

3. காய்தல் உவத்தல் அகற்றி ஒருபொருட்கண்
ஆய்தல் அறிவுடையார் கண்ணதே;—காய்வதன் கண்
உற்றகுணம் தோன்றாது ஆகும்; உவப்பதன் கண்
குற்றமும் தோன்றாக் கெடும்.

(தற்புகழ்ச்சி வேண்டா)

4. பலகற்றோம் யாமென்று தற்புகழ வேண்டா;
அலர்கதிர் ஞாயிற்றைக் கைக்குடையும் காக்கும்;
சிலகற்றார் கண்ணும் உளவாம் பலகற்றார்க்(கு)
அச்சாணி யன்னதோர் சொல்.

(புறங்கூறல் ஆகாது)

5. முன்னின்(று) ஒருவன் முகத்தினும் வாயினும்
கன்னின்(று) உருகக் கலந்துரைத்துப்—பின்னின்(று)
இழித்(து)உரைக்கும் சான்றோரை அஞ்சியே தேவர்
விழித்(து)இமையார் நின்ற நிலை.

## அருஞ்சொற்பொருள் :

1. களை கட்டு - களையை நீக்கி; அட்டி - பெய்து; பைங்கூழ் - பயிர்; சிறுகாலை - இளமையில்.

2. வைகலும் - நாள்தோறும்; சால - மிகவும்.

3. காய்தல் - வெறுப்பு; உவத்தல்-விருப்பு; ஆய்தல்-ஆராய்தல் தோன்றா-தோன்றாமல்.

4. அலர்கதிர் - பரந்த கதிர்களையுடைய; அச்சாணி - அச்சில் கோக்கப்பட்ட ஆணி.

5. கல் நின்று உருக - கல்லும் நின்று உருகுமாறு; சான்றோர் - கீழ் மக்கள் (இகழ்ச்சிக் குறிப்பு; இமையார் - கண் இமைக்காமல்.

## இலக்கணக் குறிப்பு :

1. இன்சொல், வன்சொல் - பண்புத்தொகைகள். இச்செய்யுள் உருவக அணி.

2. இச்செய்யுள் உவமையணி.

3. தோன்று-ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

4. கற்றூர்க்கு-வினையாலணையும் பெயர்.

5. இமையார் - முற்றெச்சம். இச்செய்யுள் தற்குறிப் பேற்ற அணி (தேவர்கள் கண் இமையாமல் இருப்பதற்குக் கவிஞர் தம் குறிப்பின்படி ஒரு காரணத்தைக் கற்பித்தார்.

## கேள்விகள்:

1. அறக்கதிர் ஈனும் பயிரை எப்படி உண்டாக்க வேண்டும்?

2. கீழ்மக்கள் அறத்தை அறியும் தன்மையற்றவர் என்பதற்குக் கூறப்பட்ட உவமானம் யாது?

3. ஒரு பொருளை எப்படி ஆராயவேண்டும்? ஏன்?

4, தற்புகழ்ச்சி கூடாதென்பதற்கு ஆசிரியர் கூறும் காரணம் என்ன?

5. தேவர்கள் இமையாமல் இருப்பதற்குக் கவிஞர் கூறும் காரணம் யாது? இதனால் நாம் அறிவது என்ன?

---

# III. கதைப் பகுதி

## பாத்திர மரபு கூறிய காதை:

[மணிமேகலை தமிழ் மொழியிலுள்ள ஐம்பெருங்காப்பியங்களுள் ஒன்று. இதனை இயற்றிய ஆசிரியர் மதுரைக் கூலவாணிகன் சாத்தனார். இது கோவலனுக்கு மாதவியிடம் பிறந்த மணிமேகலையின் வரலாற்றைக் கூறுவது. இதில் பௌத்த சமய தருமங்களும் இயற்கை வருணனைகளும் ஆங்காங்கே நிரம்ப அமைந்துள்ளன. இதன் காலம் சிலப்பதிகார காலமாகிய கி. பி. இரண்டாம் நூற்றாண்டு ஆகும். பாடப் பகுதி மணிமேகலைக்கு அறவணடிகள் கூறியதாக அமைந்தது; அமுத சுரபியின் வரலாற்றைக் கூறுவது.]

### ஆபுத்திரனது கவலை

ஆங்கவற் கொருநாள் அம்பலப் பீடிகை
பூங்கொடி நல்லாய்! புகுந்தது கேளாய்;
மாரி நடுநாள் வல்லிருள் மயக்கத்(து)
ஆரிடை உழந்தோர் அம்பலம் மரீஇத்
துயில்வோன் தன்னைத் தொழுதனர் ஏத்தி
'வயிறுகாய் பெரும்பசி மலைக்கும்' என்றலும்
ஏற்றூண் அல்லது வேற்றூண் இல்லோன்
ஆற்றுவது காணான் ஆரஞர் எய்தக்

### பாத்திரம் பெறுதல்

'கேளிது மாதோ, கெடுகநின் தீதென'
யாவரும் ஏத்தும் இருங்கலை நியமத்துத்
தேவி சிந்தா விளக்குத் தோன்றி,
'ஏடா! அழிபல்; எழுந்திது கொள்ளாய்.

நாடுவறங் கூரினுமிவ் வோடுவறங் கூராது;
வாங்குநர் கையகம் வருந்துதல் அல்லது
தான்தொலை வில்லாத் தகைமைய(து)'' என்றே

## சிந்தா தேவியை வாழ்த்துதல்

'சிந்தா தேவி! செழுங்கலை நியமத்து
நந்தா விளக்கே! நாமிசைப் பாவாய்!
வானோர் தலைவி! மண்ணோர் முதல்வி!
ஏனோர் உற்ற இடர்களை வாய்,' எனத்
தான்தொழு தேத்தித் தலைவியை வணங்க,

## ஆபுத்திரனது வள்ளன்மை

ஆங்கவர் பசிதீர்த்(து) அந்தநாள் தொட்டு
வாங்குகை வருந்த மன்னுயிர் ஓம்பலின்
மக்களும் மாவும் மரஞ்சேர் பறவையும்
தொக்குடன் ஈண்டிச் சூழ்ந்தன விடாஅ
பழுமரத் தீண்டிய பறவையின் எழூஉம்
இழுமென் சும்மை இடையின்(று) ஒலிப்ப

## இந்திரன் வருகை

ஈண்டுநீர் ஞாலத் திவன்செயல் இந்திரன்
பாண்டு கம்பளம் துளங்கிய தாகலின்,
தளர்ந்த நடையின் தண்டுகால் ஊன்றி
வளைந்த யாக்கையோர் மறையோ னாகி
மாயிரு ஞாலத்து மன்னுயிர் ஓம்பும்
ஆருயிர் முதல்வன் தன்முன் தோன்றி,
'இந்திரன் வந்தேன்; யாது நின்கருத்(து)?
உன்பெருந் தானத்(து) உறுபயன் கொள்க,' என

## ஆபுத்திரன் இந்திரனை இகழ்தல்

வெள்ளை மகன்போல் விலாவிற நக்(கு), 'ஈங்(கு)
எள்ளினன் போம்,' என்(று) எடுத்துரை செய்வோன்

‘ஈண்டுச் செய்வினை ஆண்டுநுகர்ந் திருத்தல்
காண்தகு சிறப்பின் நும் கடவுளர் அல்ல(து)
அறஞ்செய் மாக்கள் புறங்காத்(து) ஓம்புநர்
நற்றவம் செய்வோர் பற்றற முயல்வோர்
யாவரும் இல்லாத் தேவர்நன் னாட்டுக்(கு)
இறைவன் ஆகிய பெருவிறல் வேந்தே!
வருந்தி வந்தோர் அரும்பசி களைந்(து)அவர்
திருந்துமுகங் காட்டும்என் தெய்வக் கடிஞை;
உண்டி கொல்லோ உடுப்பன கொல்லோ
பெண்டிர் கொல்லோ பேணுநர் கொல்லோ
யாவையீங்(கு) அளிப்பன தேவர்கோன்?’ என்றலும்

## இந்திரனது தீய எண்ணம்

புரப்போன் பாத்திரம் பொழிந்(து)ஊண் சுரந்(து)ஈங்(கு)
இரப்போர்க் காணா(து) ஏமாந்திருப்ப
நிரப்பின்(று) எய்திய நீணிலம் அடங்கலும்
பரப்பு நீரால் பல்வளம் சுரக்கென
ஆங்கவன் பொருட்டால் ஆயிரங் கண்ணோன்
ஓங்குயர் பெருஞ்சிறப்(பு) உலகோர்க்(கு) அளித்தலும்
பன்னீ ராண்டு பாண்டிநன் னாடு
மன்னுயிர் மடிய மழைவளம் இழந்தது
வசித்தொழில் உதவ மாநிலம் கொழுப்பப்
பசிப்(பு)உயிர் அறியாப் பான்மைத்(து) ஆகலின்
ஆருயிர் ஓம்புநன் அம்பலப் பீடிகை
ஊணொலி அரவம் ஒடுங்கிய தாகி
விடரும் தூர்த்தரும் விட்டேற் றாளரும்
நடவை மாக்களும் நகையொடு வைகி
வட்டும் சூதும் வம்பக் கோட்டியும்
முட்டா வாழ்க்கை முறைமைய தாக

## ஆபுத்திரன் தனித்திருத்தல்

ஆபுத் திரன்தான் அம்பலம் நீங்கி
ஊரூர் தோறும் உண்போர் வினாஅய்

யாரிவன் என்றே யாவரும் இகழ்ந்தாங்(கு)
அருந்தே மாந்த ஆருயிர் முதல்வனை
இருந்தாய் நீயோ என்பார் இன்றையின்
திருவின் செல்வம் பெருங்கடல் கொள்ள
ஒருதனி வரூஉம் பெருமகன் போலத்
தானே தமியன் வருவோன் தன்முன்,
மாநீர் வங்கம் வந்தோர் வணங்கிச்
'சாவக நன்னாட்டுத் தண்பெயல் மறுத்தலின்
ஊனுயிர் மடிந்த(து) உரவோய்!' என்றலும்,

## சாவக நாட்டிற்குச் செல்லுதல்

'அமரர்கோன் ஆணையின் அருந்துவோர்ப் பெறாது
குமரி மூத்தவென் பாத்திரம் ஏந்தி
அங்(கு)அந் நாட்டுப் புகுவதென் கருத்தென
வங்க மாக்களோடு மகிழ்வுடன் ஏறிக்
கால்விசை கடுகக் கடல்கலக் குறுதலின்
மாலிதை மணிபல் லவத்திடை வீழ்த்துத்
தங்கிய தொருநாள்; தானுங் கிழிந்தனன்;
இழிந்தோன் ஏறினன் என்றிதை எடுத்து
வழங்குநீர் வங்கம் வல்லிருள் போதலும்
வங்கம் போயபின் வருந்துயர் எய்தி
அங்கு வாழ்வோர் யாவரும் இன்மையின்
'மன்னுயிர் ஓம்புமிம் மாபெரும் பாத்திரம்
என்னுயிர் ஓம்புதல் யானோ பொறேஎன்!
தவந்தீர் மருங்கில் தனித்துயர் உழந்தேன்;
சுமந்தென் பாத்திரம்?' என்றனன் தொழுது

## ஆபுத்திரனது தூய எண்ணம்

'கோமுகி என்னும் கொழுநீர் இலஞ்சியின்
ஓரியாண் டொருநாள் தோன்றெ'றன் விடுவோன்
'அருளறம் பூண்டாங் காருயி ரோம்புநர்

உளரெனில் அவர்கைப் புகுவாய்,' என்றாங்(கு)
உண்ணா நோன்போ டுயிர்பதிப் பெயர்ப்புழி
அந்நாள் அங்கவன் தன்பாற் சென்றே
என்னுற் றனையோ என்றியான் கேட்பத்
தன்னுற் றனபல தானெடுத் துரைத்தனன்.

## ஆபுத்திரனது மறுபிறப்பு

குணதிசைத் தோன்றிக் காரிருள் சீத்துக்
குடதிசைச் சென்ற ஞாயிறு போல
மணிபல் லவத்திடை மன்னுடம் பிட்டுத்
தணியா மன்னுயிர் தாங்குங் கருத்தொடு
சாவகம் ஆளுந் தலைத்தாள் வேந்தன்
ஆவயிற்(று) உதித்தனன் ஆங்கவன் தானென்.

## அருஞ்சொற்பொருள்:

*1—8:* வல்லிருள் - மிக்க இருள்; மயக்கத்து-மயங்கிய நேரத்தில்; ஆரிடை-அரியவழி; உழந்தோர் - (நடந்து) துன்புற்றோர்; மரீஇ - அடைந்து; மலைக்கும் - துன்புறுத்தும்; ஏற்றூண் - பிச்சை ஏற்றுப் பெற்ற உணவு; ஆற்றுவது - செய்வது.

*9—16:* நியமம்-கோயில்; அழியல்–வருந்தாதே; வறங்கூரினும் - வறுமையுற்றாலும், வாங்குநர் - பெற்றுக்கொள்வோர்; தொலைவிலா - குறையாத.

*16—21:* நந்தா விளக்கு - அணையாத விளக்குப் போன்றவள்; பாவாய் - பதுமைபோன்றவளே ; ஏனோர் - (என்னையடைந்த) அயலார்.

*22—27:* ஓம்பலின் - பாதுகாத்தலினால்; தொக்கி-கூடி; ஈண்டி– நெருங்கி; எழூஉம் - எழுகின்றன; சும்மை - ஆரவாரம்.

**28—35**; பாண்டு - வெண்மையான; துளக்கியது - நடுங்கும்படி செய்தது; தானத்து - கொடையின்; உறுபயன் - மிகுந்த பயனை.

**36—48**: வெள்ளை மகன் – அறியாதவன்; விலா இற - விலா வெலும்பு முறியுமாறு; நக்கு - சிரித்து; எள்ளினன் - இகழ்ந்தனன்; ஈண்டு - இவ்வுலகத்து; ஆண்டு - தேவருலகத்து; காண்தகு - காண்பதற்கு இனிய; புறங்காத்து – ஆதரித்து; பற்று அற - உலக ஆசைகள் நீங்குவதற்கு; விறல் - வெற்றி; திருந்துமுகம் – மகிழ்ந்த முகத்தை; கடிஞை - பிச்சைப் பாத்திரம் (அமுத சுரபி); பேணுநர் - ஆதரிப்பவர்.

**49—64**; புரப்போன்-(ஏழைகளைப்)பாதுகாப்பவன்(ஆபுத்திரன்); ஊண் சுரந்து - உணவுமிகுதியாகி; ஏமாந்திருப்ப - செயலற்று இருக்குமாறு: நிரப்பு இன்று – வறுமை இல்லாமல்; எய்திய – அடையும்படி; அடங்கலும் – முழுவதும் ஆயிரம் கண்ணோன் - இந்திரன்; வசி-மழை-பான்மை – தன்மை; விடர் - காமுகர்; தூர்த்தர் - கெட்டவர்; விட்டேற்றுளர் – தறுதலைகள்; நகை - மகிழ்ச்சி; வைகி - வாழ்ந்து; வட்டு - சூதாடும்காய்; வம்பக்கோட்டி – வெட்டிக் கூட்டம்; முட்டா - பொருள் குறைவற்ற.

**65—73**: வினய் - கேட்டு; அருந்தேமாந்த - (தான் வழங்கும் உணவைப் பிறர்) உண்ண விரும்பிய; தமியன் – தனியாக; வங்கம் - கப்பல்; தண் பெயல் – குளிர்ந்த மழை; மறுத்தலின் - பொய்யாமையால்; உரவோய் - பெரியோனே!

**76—84**; குமரி – இளமை; கால் விசை கடுக-காற்று வேகமாகச் செலுத்த; இதை – கப்பலில் தூக்கிக்கட்டும் பாய்; இழிந்தனன் - இறங்கினான்; நீர் வழங்கு - நீரில் செல்லும்.

**85—90**: பொறேஎன் - பொறுக்கமாட்டேன்; தவம்தீர் மருங்கில்-யான் செய்த தவம் தீர்ந்த இவ்விடத்தில்; என் - என்ன பயன்?

*91—88:* இலஞ்சி - பொய்கை; உயிர்பதிப்பெயர்ப்புழி - உடலை விட்டு உயிரை நீக்கியபோது; தன்னுற்றன - தனக்கு நேர்ந்த செய்திகள்.

*99—205:* சித்து - போக்கி, குணதிசை - கிழக்கு: குட திசை - மேற்கு; தலைத்தாள் - மிக்க முயற்சியையுடைய; ஆ வயிற்று - பசுவின் வயிற்றில்.

## இலக்கணக்குறிப்பு:

*1—8:* பூங்கொடி - இரண்டனுருபும் பயனும் உடன் தொக்க தொகை; வல்லிருள் - பண்புத் தொகை; ஆரிடை - பண்புத் தொகை; (அருமை + இடை) உழந்தோர், துயில்வோன்-வினையாலணையும் பெயர்கள், மரீஇ - சொல்லிசையளபெடை; தொழுதனர், காணுன் - முற்றெச்சங்கள்; இல்லான் - எதிர்மறைக் குறிப்பு வினையாலணையும் பெயர்; ஆரஞர் – பண்புத் தொகை (அருமை + அஞர்).

*9—16:* அழியல் - எதிர்மறை வியங்கோள் வினைமுற்று: கொள்ளாய் - ஏவல் வினைமுற்று; தகைமையது - குறிப்பு முற்று.

*17—21:* நந்தா - ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்; களைவாய் - ஏவல் வினைமுற்று; இழும் – ஒலிக்குறிப்புச் சொல்.

*22—27:* வாங்கு கை, பழு மரம் – வினைத்தொகைகள் சூழ்ந்தன - முற்றெச்சம்; விடாஅ, எழூஉம் - இசைநிறை அளபெடைகள்.

*28—35:* மாயிரு-ஒரு பொருட் பன்மொழி அல்லது மீமிசைச் சொல்; உறுபயன் - வினைத்தொகை.

*36—48:* நக்கு + ஈங்கு = நக்கீங்கு; எள்ளினன் - முற்றெச்சம்; பெருவிறல், அரும்பசி - பண்புத்தொகைகள்; திருந்துமுகம் வினைத் தொகை; தேவர்கோன் - ஆறும் வேற்றுமைத் தொகை.

**49—64**; புரப்போன், இரப்போர் - வினையாலணையும் பெயர்கள். நீணிலம் - வினைத்தொகை (நீள் + நிலம்); பல்வளம் — பண்புத்தொகை; சுரக்க - வியங்கோள் வினைமுற்று; சுரக்க+என — சுரக்கவென (தொகுத்தல் விகாரத்தால் சுரக்கென என்றாயிற்று) : ஓங்கு உயர் - மீமிசைச்சொல்; மாநிலம் - உரிச்சொற்றொடர் ; ஊண் - முதனிலை நீண்ட தொழிற்பெயர்; முட்டா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

**65—75** : வினாஅய், வரூஉம்-இசைநிறையளபெடை; ஆருயிர்-பண்புத்தொகை ; தமியன் - குறிப்பு முற்றெச்சம் ; தண்பெயல்-பண்புத்தொகை ; ஊனுயிர் - இரண்டனுருபும் பயனும் உடன்தொக்க தொகை (ஊன் + உயிர்).

**76—84**: அமரர் கோன்-ஆறும் வேற்றுமைத்தொகை; அருந்துவோர், இழிந்தோன் - வினையாலணையும்பெயர்கள்; வழங்குநீர் - முன் பின்னாக வந்த ஏழாம் வேற்றுமைத்தொகை ; (நீரில் வழங்கு என்பது மாறி வந்தது)

**85—90** : வருந்துயர் - வினைத்தொகை; மாபெரு - மீமிசைச்சொல் ; பொறேஎன் - இசைநிறையளபெடை; என்றனன் - முற்றெச்சம்.

**91—98**: அருளறம்-உம்மைத்தொகை (அருளாகிய அறம்எனக் கொண்டு இருபெயரொட்டுப்பண்புத் தொகையாகவும் கூறலாம்); என்றியான் - குற்றியலுகரம்; உற்றன - வினையாலணையும்பெயர்.

**99—104** : குணதிசை, குடதிசை-இருபெயரொட்டுப் பண்புத் தொகைகள்; காரிருள் - பண்புத்தொகை (கருமை + இருள்); தணியா-ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

## கேள்விகள் :

1. ஆபுத்திரன் ஏன் கவலையுற்றான் ?

2. சிந்தாதேவி அவனுக்கு எப்படி அருள் செய்தாள் ?

3. அமுத சுரபியின் தன்மை யாது ?

4. ஆபுத்திரன் அறம் செய்த திறத்தினைக் கூறுக.

5. இந்திரன் ஆபுத்திரனிடம் கூறியது என்ன ?

6. அதற்கு ஆபுத்திரன் கூறிய விடை யாது ?

7. இந்திரன் ஆபுத்திரனை எப்படித் தண்டித்தான் ?

8. ஆபுத்திரன் சாவக நாட்டிற்குச் சென்றது ஏன் ?

9. அவன் மணிபல்லவத் தீவில் தங்க நேர்ந்தது எப்படி ?

10. அவன் அமுத சுரபியைக் கோமுகிப் பொய்கையில் ஏன் எறிந்தான் ?

11. பாத்திரத்தை அவன் என்ன கூறி விடுத்தான் ?

12. ஆபுத்திரன் இறந்த செய்திக்குக் கூறப்பட்ட உவமானம் யாது ?

## 2. நளவெண்பா

[இது வெண்பாக்களாலாய ஒரு சிறு காப்பியம், நளவெண்பா - நளனைப்பற்றிய வெண்பா - இரண்டனுருபும் பயனும் உடன் தொக்க தொகை, இதனை இயற்றிவர் புகழேந்திப்புலவர். இவர், ''வெண்பா வீற் புகழேந்தி'' என்று பாராட்டப்பட்டவர். இவர் பிறப்பிடம், செங்கற்பட்டை அடுத்த பொன் விளைந்த களத்தூர். மதம், வைணவம்; காலம்: இரண்டாம் குலோத்துங்கன் காலமாகிய 12-ஆம் நூற்றுண்டின் இடைப்பகுதி; இவர், சோழநாட்டைச் சேர்ந்த மள்ளுவ நாட்டுச் சிற்றரசனுகிய சந்திரன் சுவர்க்கி என்பவனுல் ஆதரிக்கப்பட்டவர். பாடப்பகுதி, விதர்ப்ப நாட்டரசன் வீமன் மகளாகிய தமயந்தியின் சுயம்வரத்தைப் பற்றிக் கூறுவது, தமயந்தி தான் முன்னரே விரும்பிக் காதலித்த நளனையே மணந்து கொள்வது இதில் கூறப்படுகிறது.]

### சுயம்வர காண்டம்

### வீமன் சுயம்வர நாளை அறிவித்தல்

1. 'மங்கை சுயம்வரநாள் ஏழ்என்று வார்முரசம்
எங்கும் அறைறெ'கன்(று) இயம்பினுன்—பைங்கமுகின்

கூந்தல்மேல் கங்கைக் கொழுந்(து)ஓடும் நல்நாடன்
வேந்தர்மேல் தூ(து)ஓடவிட்டு.

### அரசர்கள் வந்திருத்தல்

2. புள்உறையும் சோலைகளும் பூங்கமல வாவிகளும்
உள்ளும் புறமும் இனி(து)உறைந்தார்—தெள்அரிக்கண்
பூமகளைப் பொன்னைப் பொருவேல் விதர்ப்பன்தன்
கோமகளைத் தம்மனத்தே கொண்டு.

### நளன் புறப்பாடு

3. காவலன்தன் தூதர் கடைக்கா வலர்க்(கு)அறிவித்(து)
ஏவலின்போய் ஈ(து)என்(று) இயம்புதலும்—'மாவில்
பொலிந்ததேர் பூட்(டு)' என்றான் பூவாளி பாய
மெலிந்ததோள் வேந்தன் விரைந்து.

### தேரை வேகமாகச் செலுத்தும்படி நளன் கூறல்

4. 'கெட்ட சிறுமருங்குல் கீழ்மகளிர் நீள்வரம்பில்
இட்ட பசுங்குவளை ஏர்அடித்த—கட்டி
கரையத்தேன் ஊறும் கடல்நாடன் ஊர்க்கு
விரையத்தேர் ஊர்,' என்றான் வேந்து.

### நாரதர் தமயந்தியின் சுயம்வரத்தைப் பற்றி இந்திரனிடம் கூறல்

5. 'வீமன் மடந்தை மணத்தின் விரைதொடுத்த
தாமம் புனைவான் சுயம்வரத்து—மாமன்னர்
போயினார்,' என்றான் புரந்தரற்குப் பொய்யாத
வாயினான் மாதவத்தோர் மன்.

### நாரதர் தமயந்தியின் அழகைப் புகழ்தல்

6. 'அழகு சுமந்(து)இளைத்த ஆகத்தாள் வண்டு
பழகு கருங்கூந்தல் பாவை—மழகளிற்று

வீமன் குலத்துக்(கு)ஓர் மெய்த்தீபம்; மற்(று) அவளே
காமன் திருவுக்(கு) ஓர் காப்பு.

### தேவர்கள் சுயம்வரத்திற்கு வருதல்

7. மால்வரையை வச்சிரத்தால் ஈர்ந்தானும் வானவரும்
கோல்வளைதன் மாலை குறித்(து)எழுந்தார்—சால்புடைய
விண்நாடு நீங்கி விதர்ப்பன் திருநகர்க்கு
மண்நாடு நோக்கி மகிழ்ந்து.

### தேவர்கள் நளனைக் காணுதல்

8. பைந்தெரியல் வேல்வேந்தன் பாவைபால் போயினதன்
சிந்தை கெடுத்(து) அதனைத் தேடுவான்—முந்தி
வருவான்போல் தேர்மேல் வருவானைக் கண்டார்
பெருவானின் தேவர் பெரிது

### நளன் தேவர்கள் ஏவலைச் செய்ய இணங்குதல்

9. காவல் குடைவேந்தைக் கண்ணுற்று விண்ணவர்கோன்
'ஏவல் தொழிலுக்(கு)இசை' என்றான்;—ஏவற்கு
மன்னவனும் நேர்ந்தான் மனத்தினால் மற்(று) அதனை
இன்னதென ஓரா(து) இசைந்து.

### இந்திரனுக்கு மாலை சூட்டுமாறு நளன் தமயந்தியை வேண்டுதல்

10. 'என்உரையை யாதென்(று) இகழா(து) இமையவர்வாழ்
பொன்உலகம் காக்கும் புரவலனை—மென்மாலை
சூட்டுவாய்,' என்றான் தொடையில்தேன் தும்பிக்கே
ஊட்டுவான் எல்லாம் உரைத்து.

### தமயந்தியின் விடை

11. 'இயமரம்நின்(று) ஆர்ப்ப இனவளைநின்(று) ஏங்க
வயம்மருதோள் மன்னா! வகுத்த—சுயம்வரந்தான்
நின்பொருட்டால் என்று நினை'என்றாள் நீள்குடையான்
தன்பொருட்டால் நைவாள் தளர்ந்து.

### தமயந்தி நளனை வேண்டல்

12. போ(து) அரிக்கண் மாதராள் பொன்மாலை சூட்டத்தான்
ஆதரித்தார் தம்மோ(டு) 'அவையகத்தே—சோதிச்
செழுந்தரள வெண்குடையாய்! தேவர்களும் நீயும்
எழுந்தருள்க,' என்றாள் எடுத்து.

### நளன் இந்திரனிடம் மீண்டும் கூறுதல்

13. விண்ணவர்தம் ஏவலுடன் வீமன் திருமகள்பால்
நண்ணு புகழ்நளனும் நன்(கு)உரைத்த—பெண்அணங்கின்
வன்மொழியும் தேவர் மனம்மகிழத் தான் மொழிந்த
மென்மொழியும் சென்றுரைத்தான் மீண்டு.

### தேவர்கள் நளனுக்கு வரம்கொடுத்தல்

14. 'அங்கி அமுதம்நீர் அம்பூண் அணிஆடை
எங்குநீ வேண்டினைமற்(று) அவ்விடத்தே—சங்கையறப்
பெற்றாய்,' எனவருணன் ஆகண் டலன்தருமன்
மற்றோனும் ஈந்தார் வரம்.

### நளன் சுயம்வர மண்டபத்தில் வந்திருத்தல்

15. மன்றல்அம்தார் மன்னர் நடுஅணைய வந்திருந்தான்
கன்று குதட்டிய கார்நீலம்—முன்றில்
குறுவிழிக்கு நேர்நாடான் கோதைபெருங் கண்ணின்
சிறுவிழிக்கு நோற்றிருந்த சேய்.

### சுயம்வர மண்டபத்திற்குத் தமயந்தி வருதல்

16. மன்னர் விழித்தா மரைபூத்த மண்டபத்தே
பொன்னின் மடப்பாவை போய்ப்புக்காள்—மின்நிறத்துச்
செய்யதாள் வெள்ளைச் சிறையன்னம் செங்கமலப்
பொய்கைவாய்ப் போவதே போன்று.

### தோழி அரசர்களைத் தமயந்திக்கு அறிமுகம் செய்தல்

17. மன்னர் குலமும் பெயரும் வளநாடும்
இன்ன பரிசென்(று) இயல்அணங்கு—முன்நின்று

தார்வேந்தன் பெற்ற தனிக்கொடிக்குக் காட்டினுள்
தேர்வேந்தர் தம்மைத் தெரிந்து.

### யதுகுல மன்னன்

18. 'ஆழிவடி அம்(பு)அலம்ப நின்றானும் அன்(று) ஒருகால்
ஏழ்இசை நூல் சங்கத்(து) இருந்தானும்—நீள்விசும்பின்
நற்றேவர் தூது நடந்தானும் பாரதப்போர்
சென்றானும் கண்டாய்இச் சேய்.

### குருகுல மன்னன்

19. 'தெரியில் இவன்கண்டாய் செங்கழுநீர் மொட்டை
அரவின் பசுந்தலைஎன்(று) அஞ்சி—இரவெல்லாம்
பிள்ளைக் குரு(கு) இரங்கப் பேதைப்புள் தாலாட்டும்
வள்ளைக் குருநாடர் மன்.

### அவந்தி நாட்டு மன்னன்

20. 'வண்ணக் குவளை மலர்வெளவி வண்டெடுத்த
பண்ணில் செவிவைத்(து)அப் பைங்குவளை—உண்ண(து)
அருங்கடா நிற்கும் அவந்திநா(டு) ஆளும்
இருங்கடா யானை இவன்.

### பாஞ்சாலநாட்டு மன்னன்

21. 'விடக்கதிர்வேல் காளை இவன்கண்டாய் மீனின்
தொடக்(கு) ஒழியப் போய்மிர்த்த தூண்டில்—மடற்
[கமுகின்
செந்தோடு பீறித்தேன் செந்நெல் பசுந்தோட்டில்
வந்தோடு பாஞ்சாலர் மன்.

### கோசல நாட்டு மன்னன்

22. 'அன்னன் துயில்எழுப்ப அம்தா மரைவயலில்
செந்நெல் அறிவார் சினை ஆமை—வன்முதுகில்
கூன்இரும்பு தீட்டும் குலக்கோ சலநாடன்
தேன்இருந்த சொல்லாய் !இச் சேய்.

## அங்க நாட்டு மன்னன்

23. 'கூன்சங்கின் பிள்ளை கொடிப்பவளக் கோ(டு)இடறித்
தேன்கழியில் வீழத் திரைக்கரத்தால்—வான்கடல்வந்(து)
'அந்தோ!' எனஎடுக்கும் அங்கநா(டு) ஆளுடையான்
செந்தேன் மொழியாய்! இச் சேய்'

## நளன் போல இருந்த தேவர்களைக் கண்டு தமயந்தி மயங்குதல்

24. காவலரைத் தன்சேடி காட்டக்கண்(டு) ஈர்இருவர்
தேவர் நளன்உருவாச் சென்றிருந்தார்;—பூவரைந்த
மாசிலாப் பூங்குழலாள் மற்(று) அவரை காணாநின்(று)
ஊசலா(டு) உற்றாள் உளம்.

## தமயந்தி தெய்வத்தை வேண்டுதல்

25. 'மின்னும்தார் வீமன்தன் மெய்ம்மரபில் செம்மைசேர்
கன்னியான் ஆகில் கடிமாலை—அன்னம்தான்
சொன்னவனைச் சூட்ட அருள்' என்றாள் சூழ்வியின்
மன்னவனைத் தன்மனத்தே வைத்து.

## தமயந்தி நளனை அறிதல்

26. கண்இமைத்த லால்அடிகள் காசினியில் தோய்தலால்
வண்ண மலர்மாலை வாடுதலால்—எண்ணி
நறுந்தா மரைவிரும்பும் நன்னுதலே அன்னாள்
அறிந்தாள் நளன்தன்னை ஆங்கு.

## நளனுக்குத் தமயந்தி சுயம்வரமாலை சூட்டுதல்

27. விண்அரசர் எல்லோரும் வெள்கி மனம்சுளிக்கக்
கண் அகன் ஞாலம் களிகூர—மண்அரசர்
வன்மாலை தம்மனத்தே சூட வயவேந்தைப்
பொன்மாலை சூட்டினாள் பொன்.

## மன்னர்களின் ஏமாற்றம்

28. திண்தோள் வயவேந்தர் செந்தா மரைமுகம்போய்
வெண்தா மரையாய் வெளுத்தவே—ஒண்தாரைக்
கோமாலை வேலான் குலமாலை வேற்கண்ணாள்
பூமாலை பெற்றிருந்த போது.

## நளனும் தமயந்தி உடன் செல்லுதல்

29. மல்லல் மறுகின் மடநா(கு) உடன்ஆகச்
செல்லும் மழவிடைபோல் செம்மாந்த—மெல்இயலாள்
பொன்மாலை பெற்றதோ ளோடும் புறப்பட்டான்
நன்மாலை வேலான் நளன்.

## அருஞ்சொற்பொருள்

1. மங்கை - தமயந்தி; ஏழ் என்று - ஏழாம் நாள் என்று; வார் முரசம் - வாரையுடைய முரசு; கமுகு - பாக்குமரம்; கூந்தல்-பூ; கொழுந்து - நீர்த் திவலைகள்; ஓடவிட்டு - செலுத்தி.

2. புள் - பறவைகள்; உறையும் - தங்கும்; கமலம் - தாமரை; வாவி - குளம்; தெள் அரிக்கண் - தெளிந்த செவ்வரி படர்ந்த கண்ணை யுடைய; பொன்னை - திருமகள் போன்றவளை; கோமகள் - அரசகுமாரி.

3. கடைக்காவலர் - வாயிற்காவலர்; மாவில் - குதிரைகளுடன்; பூவாளி - (மன்மதனுடைய) பூவாகிய அம்பு.

4. கெட்ட - தேய்ந்துபோன; மருங்குல் - இடை; கட்டி - மண் கட்டி: (குவளை தேன் ஊறும் என்று கூட்டுக-)

5. விரை - நறுமணம்; தாமம் - மாலை; புரந்தரன் - இந்திரன்; மாதவத்தோர் மன் - முனிவர்க்கரசனாகிய நாரதன்-

6. ஆகத்தாள் — உடம்பினையுடையவள்; மழகளிற்று — இளமையான யானைகளையுடைய; திரு — அழகு; காப்பு — பாது காப்பு,

7. மால்வரை - பெரிய மலையின் இறகுகளை ; வச்சிரத்தால் - தனது வச்சிரப்படையினால் ; ஈர்ந்தான் - அறுத்தவன் ; கோல் வளை - அழகிய வளையை யணிந்த தமயந்தி.

8. பைந்தெரியல் - பசுமையான மாலை ; தேடுவான் - தேடுவதற்கு ; பெருவான் - பெருமையுடைய தேவருலகத்து.

9. விண்ணவர்கோன் - தேவேந்திரன் ; இசை - இணங்கு ; நேர்ந்தான் - இணங்கினான் ; ஓராது - அறியாமல்.

10. இமையவர் - தேவர்கள் ; பொன்னுலகம் - தேவருலகம் ; புரவலன் - அரசன் (இந்திரன்) ; தும்பி - வண்டு.

11. இயமரம் - மணமுரசு ; ஆர்ப்ப - முழங்க ; இனவளை - கூட்டமான சங்குகள் ; வயம் - வெற்றி. வலிமை ; மரு(வு) - பொருந்திய ; நைவாள் - வருந்துபவள் (தமயந்தி)

12. போது - மலர்(போன்ற); அரி-செவ்வரி (சிவந்த கோடுகள்; ஆதரித்தார் - விரும்பியவர்கள் ; தரளம் - முத்து.

13. நண்ணு - பொருந்திய ; அணங்கு - தெய்வம் ; வன்மொழி - கொடிய சொல் ; மென்மொழி - இனியசொல்.

14. அங்கி - நெருப்பு ; சங்கை அற - ஐயமின்றி ; ஆகண்டலன்- இந்திரன் ; மற்றூன்-அங்கிக் கடவுள்; அக்கினி, இந்திரன், வருணன், தருமன் ஆகியோர் முறையே நெருப்பு, அமுதம், நீர், அம்பூணணி ஆடை ஆகியவற்றை வேண்டியபோது பெறுக' என்று நளனுக்கு வரமளித்தனர்.

15. மன்றல் - திருமணம் ; அம்தார் - அழகியமாலை ; குதட்டிய - கடித்தெறிந்த ; கார்நீலம் - கரிய குவளைப்பூ ; முன்றில் - முற்றத்தில் ; குறுவிழிக்கு - சிறு கண்களுக்கு; கோதை - மாலை போன்ற அழகிய தமயந்தி.

16. பொன்னின்-திருமகள் போன்ற; மடப்பாவை-இளமையான தமயந்தி ; தாள் - கால் ; சிறை - சிறகு.

17. இன்ன பரிசு - இத்தகையவை ; இயல் அணங்கு - தோழி ; கனிக்கொடிக்கு - ஒப்பற்ற கொடி போன்ற தமயந்திக்கு.

18. ஆழி – கடல் : வடிஅம்பு - நீண்ட (தனது) கூரிய அம்பை; அலம்ப - அலைக்கும்படி ; ஏழிசை நூல் சங்கம் - ஏழாகிய இசைக் கலையைப் பயிலும் சங்கம் ; விசும்பு - தேவருலகம் ; செற்றான் - சினந்தவன்.

19. அரவின் - பாம்பின் ; பிள்ளைக் குருகு - அன்னப்பறவையின் குஞ்சு ; இரங்க - அழ ; வள்ளை - ஒரு பூ.

20. பண்ணில் - இசையில்; அருங்கடா - அருமையான எருமைக் கடாக்கள் ; இருங்கடா - பெரிய மதத்தையுடைய.

21. விடம் கதிர்வேல் - நஞ்சையுடைய ஒளி வீசும் வேல் (ஏந்திய) காளை - எருது போன்றவன் ; தொடக்கு - தொடுதல் ; மடல் - ஓலை ; தோடு - பாளை ; பீறி - கிழித்து . செங்கெல் – ஒருவகை உயர்ந்த நெல்.

22. சினையாமை-முட்டையையுடைய ஆமையின்; கூன் இரும்பு - வளைந்த அரிவாளி ; தேன் இருந்த சொல்லாய் - இனிமை பொருந்திய சொல்லையுடையவளே ; சேய் - அரச குமாரன்.

23. கோடு - கிளை (மீது) ; தேன்கழி - தேன் கலந்த உப்பங் கழியில் ; வான் - பெரிய ; திரைக் கரத்தால் - அலையாகிய கையினால் ; ஆளுடையான் - ஆள்பவன்.

24. ஈரிருவர் - நால்வர் ; உருவா - உருவமாக ; பூவரைந்த - பூச் சூடிய ; ஊசலாடுற்றாள் - கலங்கினாள்.

25. கடிமாலை-மணமாலை; சூழ்விதியின்-பொருந்திய விதியினால்.

26. காசினி - பூமி ; நல்நுதல் - நல்ல நெற்றியையுடையவள். (திருமகள்).

**27.** சுளிக்க-வருந்த; கண் அகன் ஞாலம்-இடம் அகன்ற உலகம்; களிகூர - மகிழ்ச்சி மிக; வன்மாலை - வலிய மயக்கத்தை; பொன் - பொன் போன்ற தமயந்தி.

**28.** குலமாலை – நற்குலத்துதித்த மாலை போன்று அழகிய.

**29,** மல்லல் - வளம் பொருந்திய; மறுகில் - தெருவில் - மடநாகு – இளமையான பசு; உடனுக - உடன் வர; மழவிடை; இளமையான எருது; செம்மாந்து - பெருமையுடன்.

## இலக்கணக் குறிப்பு :

**1.** சுயம்வரநாள் – நான்கனுருபும் பயனும் உடன் தொக்க தொகை; வார் முரசம் - இரண்டன் உருபும் பயனும் உடன் தொக்க தொகை; அறைக - வியங்கோள் வினைமுற்று; பைங் கமுகு - பண்புத் தொகை; 'கூந்தல் மேல் கங்கைக் கொழுங்கோடும்' என்றது உயர்வு நவிற்சியணி.

**2.** அரிக்கண் - இரண்டனுருபும் பயனும் உடன் தொக்க தொகை; பொன்னை - உவம ஆகுபெயர்; பொருவேல் - வினைத் தொகை; கோமகள் - நான்காம் வேற்றுமைத் தொகை.

**3.** பூவாளி - இருபெயரொட்டுப் பண்புத் தொகை,

**4.** சிறுமருங்குல், கீழ்மகளிர், பசுங்குவளை-பண்புத்தொகைகள்; நீள்வரம்பு – வினைத்தொகை.

**5.** புணைவான் – வான் ஈற்று எதிர்கால வினையெச்சம்.

**6.** ஆகத்தாள் – குறிப்பு வினைமுற்று; கருங்கூந்தல் - பண்புத் தொகை; பாவை, தீபம் - உவம ஆகுபெயர்கள். இச் செய்யுள் இயல்பு (தன்மை) நவிற்சியணி.

**7.** ஈர்ந்தான் – வினையாலணையும் பெயர்; கோல் வளை - பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.

8. பைந்தெரியல் (பசுமை + தெரியல்), பெருவான் – பண்புத் தொகைகள் : வேல் வேந்தன் – இரண்டனுருபும் பயனும் உடன் தொக்க தொகை ; வருவான் – வினையாலணையும் பெயர்.

9. குடைவேந்து – இரண்டனுருபும் பயனும் உடன் தொக்க தொகை ; விண்ணவர் கோன் – நான்காம் வேற்றுமைத் தொகை.

10. புரவலனை – உருபு மயக்கம் (புரவலனுக்கு என்பதற்குப் பதிலாகப் புரவலனை என வந்தது) ; மென்மாலை – பண்புத்தொகை

11. மருதோள்-வினைத்தொகை (மருவுதோள் என்பது மருதோள் என வந்தது தொகுத்தல் விகாரம்); நைவான்–வினையாலணையும்பெயர்.

12. ஆதரித்தார் – வினையாலணையும் பெயர் ; செழுந்தரளம் – பண்புத்தொகை (செழுமை + தாளம்); வெண் குடையாய் – குறிப்பு வினையாலணையும் பெயர், விளி.

13. நண்ணுபுகழ் – வினைத்தொகை; வன்மொழி. மென்மொழி – பண்புத்தொகைகள்.

14. அணியாடை-வினைத்தொகை ; அங்கி அமுதம் நீர்–உம்மைத் தொகை ; வேண்டினை – முன்னிலை ஒருமை வினைமுற்று ; பெற்றாய் – கால வழுவமைதி (பெறுவாய் என்பது உறுதி பற்றிப் பெற்றாய் என வந்தது). இச்செய்யுள் நிரல் நிரையணி.

15. கார் நீலம் – பண்புத்தொகை; கோதை – உவம ஆகுபெயர்.

16. விழித்தாமரை – உருவகம்; மடப்பாவை – பண்புத்தொகை புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை; செய்ய தாள் வெள்ளை – முரண்தொடை; சிறை அன்னம் – இரண்டனுருபும் பயனும் உடன் தொக்க தொகை; செங்கமலம் – பண்புத்தொகை; வாய் – ஏழாம் வேற்றுமை உருபு.

17. தார் வேந்தன், தேர் வேந்தர் - இரண்டனுருபும் பயனும் உடன் தொக்க தொகைகள்.

18. நின்றான், இருந்தான், நடந்தான், செற்றான் - வினையாலணையும் பெயர்கள்; நீள் விசும்பு - வினைத்தொகை.

19. பசுந்தலை - பண்புத் தொகை; இச் செய்யுள் மயக்க அணி (செங்கழுநீர் மொட்டை, அரவின் நிலை என்று மயங்கியதாகக் கூறிய தனால்).

20. கடாயானை - இரண்டனுருபும் பயனும் உடன் தொக்க தொகை, இச்செய்யுள் இயல்பு நவிற்சியணி.

21. மடல் கழுகு - இரண்டனுருபும் பயனும் உடன் தொக்க தொகை; செங்நெல், பகந்தோடு - முரண் தொடை. இச்செய்யுள் உயர்வு நவிற்சியணி.

22. அரிவார் - வினையாலணையும் பெயர்; வன்முதுகு - பண்புத் தொகை. இச்செய்யுள் இயல்பு நவிற்சியணி.

23. கொடிப்பவளம், தேன்கழி-இரண்டனுருபும் பயனும் உடன் தொக்க தொகைகள்; திரைக்கரம் - உருவகம்: ஆளுடையான் - குறிப்பு வினையாலணையும் பெயர்; செந்தேன்-பண்புத்தொகை; இதுவும் இயல்பு நவிற்சியணி.

24. பூக்குழலான் - இரண்டனுருபும் பயனும் உடன் தொக்க தொகை; காணு - செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சம்.

25. மெய்ம்மரபு-பண்புத்தொகை; கடிமாலை-உரிச்சொற்றொடர்; சொன்னவனை - வினையாலணையும் பெயர்; அருள் - ஏவல் வினைமுற்று; சூழ்விதி - வினைத்தொகை,

26, மலர் மாலை-மூன்றனுருபும் பயனும் உடன் தொக்க தொகை; நன்னுதல் - பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை; அன்னாள் - குறிப்பு வினையாலணையும் பெயர்.

27. விண்ணரசர் - ஏழாம் வேற்றுமைத்தொகை; ஞாலம்-இடவாகுபெயர்; பொன்மாலை-மூன்றனுருபும் பயனும் உடன் தொக்க தொகை; பொன் – உவம ஆகு பெயர்,

28. திண்தோள் - பண்புத் தொகை; வயவேந்தர்-இரண்டனுருபும் பயனும் உடன் தொக்க தொகை; செந்தாமரை, வெண் தாமரை முரண்தொடை; வேலான் - குறிப்பு வினையாலணையும் பெயர்; வேல்கண்ணாள் - உவமைத்தொகை; பூமாலை - மூன்றனுருபும் பயனும் உடன் தொக்க தொகை.

29. மல்லல் மறுகு - இரண்டனுருபும் பயனும் உடன் தொக்க தொகை; மடநா குடனுக-சீரெதுகை; மெல்லியவாள்; நல்மாலை - பண்புத்தொகைகள். இச்செய்யுள் உவமையணி.

## கேள்விகள்:

1. விதர்ப்ப நாட்டின் இயற்கைச் செழிப்பு எங்ஙனம் கூறப் பட்டுள்ளது?
2. நாரதர் தமயந்தியின் அழகை எவ்வாறு வருணிக்கிறார்?
3. நளன் சுயம்வரத்திற்குச் செல்வது எப்படி வருணிக்கப் பட்டுள்ளது?
4. தேவர்பொருட்டுத் தூது சென்ற நளனிடம் தமயந்தி கூறியதென்ன?
5. தேவர்கள் நளனுக்கு அளித்த வரங்கள் யாவை?
6. தமயந்தி சுயம்வர மண்டபத்தில் புகுந்த காட்சியைக் கூறுக.
7. யதுகுல மன்னன் சிறப்பு யாது?
8. குருகுல மன்னன் நாட்டில் காணப்படும் இயற்கைக் காட்சி யாது?
9. பாஞ்சால நாட்டின் பெருமை யாது?

10. அங்க நாட்டில் நிகழும் இயற்கை விரோதத்தைக் கூறுக.

11. தமயந்தி நளனை எவ்வாறு அறிந்துகொண்டாள்?

12. தமயந்தி நளனுக்கு மாலை சூட்டியபோது நிகழ்ந்தது யாது?

13. நளன் தமயந்தியுடன் சென்ற காட்சி எவ்வாறிருந்தது?

## 3. திருவிளையாடற் புராணம்

### கூடற்காண்டம்

[இந்நூலை இயற்றியவர் பரஞ்சோதி முனிவர் என்பவர். இதில் மதுரையில் எழுந்தருளியுள்ள சோமசுந்தரக் கடவுள் தம் அடியார் பொருட்டுச் செய்த பல அற்புதங்கள் அல்லது திருவிளையாடல்கள் கூறப்படுகின்றன. அவை 64 ஆகும். இத்திருவிளையாடல்களைப் பற்றிப் பெரும்பற்றப்புலியூர் நம்பி என்ற ஒருவரும் பாடியுள்ளார். பரஞ்சோதி முனிவர் சோழநாட்டில் திருமறைக் காட்டில் (வேதாரணியம்) வேளாளர் மரபில் மீனாட்சி சுந்தர தேசிகரது அருமந்த மகவாய் அவதரித்தார், மதுரையில் ஒரு குருவினிடம் ஞானோபதேசம் பெற்றுத் துறவு பூண்டார், அங்கிருக்கும் போது, நகரமக்களது வேண்டுகோளாலும், மீனாட்சியம்மைக் கட்டளையாலும் இப்புராணத்தைப் பாடினார் என்று கூறப்படுகிறது. பின்னர் இது சோமசுந்தரக் கடவுள் முன்னிலையிலேயே அரங்கேற்றப்பட்டது, இவரது காலம் ஏறத்தாழ 300 ஆண்டுகட்கு முற்பட்டது என்னலாம். இந்நூல் மதுரைக் காண்டம், கூடற்காண்டம், திருவாலவாய்க் காண்டம், என்று மூன்று பகுதிகளாய், 3363 பாடல்களால் இயன்றது, சொற்சுவை பொருட்சுவையோடு தெய்வ மணம் கமழ்ந்து, பத்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடப் பெற்றது.]

#### நான்மாடக் கூடலான படலம்

#### வருணன் மதுரையை அழிக்க ஏழு முகில்களை ஏவுதல்.

1. கதிர்மதி மிலைந்த வேணிக் கண்ணுதல் வருணன் ஏய
அதிர்கடல் வறப்பச் செய்த ஆடல்ச(து) அனையான் ஏய

முதிர்மழை ஏழின் மேலும் முன்னைநான் முகிலும் போக்கி
மதுரைநான் மாடக் கூட லாக்கிய வண்ணஞ் சொல்வாம்.

2. எற்றுதெண் திரைநீர்ச்சேர்ப்பான்தன்செயல் இழுக்கிநாணம்
உற்றிருகண்ணுஞ் சேப்ப வுடன்றெழு கோபச் செந்தீப்
பற்றிடஆகம் வெம்பிப் பரவையும் யாறும் வெந்து
வற்றிடவெகுண்டு நின்றான் மானமும் வலியுங் குன்றான்.

3. நளிர்புனல்மதுரை மூதூர் நாயகன் ஆடல்தன்னைத்
தெளிகிலன் ஆகிப் பின்னுஞ் செழுமுகில் ஏழுங் கூவிக்
'குளிர்கடல்வறந்ததென்னக் குடித்தெழுந்(து) இடித்துப் [பொய்யா
ஒளிவளர் மதுரை முற்றும் ஒல்லெனக் கலைமின்' என்றான்.

ஏழு முகில்களும் பொழிந்து பெருந்துயர் விளைத்தல்

4. பொள்ளென மேகம் ஏழும்புகுந்துயர் தெரிய முந்நீர்ப்
பள்ளமும் வறப்ப முற்றும் பருகிமெய் கருகி மின்னித்
தெள்ளருந் திசையும் வானுஞ் செவிடுறப் பிலமும் பாரும்
விள்ளமால் வரைகள் எட்டும் வெடிபட மேருச் சாய

5. ஊழிநாள் வெடிக்கும் அண்ட கடாகத்தின் ஒலிபோல் [ஆர்த்துப்
பாழிவான் உருமு வீழப் பணடவி மணிகள் சிந்தி
ஆழிநீர் ஞாலந் தாங்கும் அராவுடல் நெளியத் திக்கிற்
சூழிமால் யானை நின்ற நிலைகெடத் துணுக்கங் கொள்ள

6. வெள்ளிய நீறு பூத்து முழுவென வீங்கு காய்போல்
தெள்ளிய வாலி சிந்தத் திரண்டதிண் பளிக்குத் தூண்போல்
ஒள்ளிய தாரை சோர உம்பர்மீன் கணங்க ளோடும்
துள்ளிய திரையில் ஆடும் மீன்கணம் துடித்து வீழ

7. ஆர்த்தெழு கொண்மூ ஏழும் சராசரம் அனைத்தும் சூழ்ந்து
போர்த்தன ஞாலம் உண்ணப் புக்கதோர் வடிவங்கொண்ட
தீர்த்தனில் விசும்பும் பாரும் திசைகளும் தெரியா வாகப்
பார்த்தகண் நுழையா வாகப் பரந்திருள் கான்ற வன்றே.

8. பைஞ்சுடர் எறிக்கும் பச்சை காரொளி பரப்பும் நீலம்
புஞ்சவாள் உடுக்கள் அன்ன நித்திலம் பொன்னங் குப்பை
செஞ்சுடர் மணிகள் துப்புச் சிதறுவ கணவ ரோடும்
விஞ்சையர் மகளிர் ஊடி வெறுத்தெறி கலன்கள் போல

9. கடியகால் உதைப்பப் பெய்யுங் கடுஞ்செல(வு) எழிலிமாடக்
கொடியநீள் நகரைச் சூழ்ந்து புதைத்தலும் கோலொன்(று)
[ஒச்சிப்
படியெலாம் புரக்குங் கோனும் நகருளார் பலரும் 'ஞாலம்
மடியுநாள் இதுவே' யென்னு மயங்கினர் உயங்கி னரே.

பாண்டியன் இறைவனிடம் முறையிடல்

10. 'கண்ணுதல் மூர்த்தி தானே இன்னமும் காக்கும்,' என்னுப்
புண்ணிய நகரா ரோடும் பொருக்கெனக் கோயில் எய்தி
விண்ணிழி விமான வாழ்க்கை விடையவன் அடிக்கீழ்
[வீழ்ந்தான்
அண்ணலார் ஆடல் முன்னு மறிந்துகை கண்ட வேந்தன்.

11. 'விடையினை, ஆல முண்ட மிடற்றினை, கங்கை தாங்கும்
சடையினை, கூற்றை வென்ற தாளினை, மேரு சாபப்
படையினை, அடியேம் துன்பப் பாட்டினை நீக்கி ஆளும்
நடையினை யாகி யெங்கள் நல்லுயிர் காத்தல் வேண்டும்.

இறைவன் நான்கு முகில்களை ஏவிக் காக்குமாறு கூறல்

12. என்னலுந் தென்னர்க்(கு) என்றும் எய்திய இடுக்கண்
[தீர்க்கும்
முன்னவன் முன்போல் நான்கு முகிலையும் நோக்கி, 'இன்ன
தொன்னகர் எல்லை நான்கும் சூழ்ந்துநான் மாடமாகி
இந்நெடு மாரி ஏழும் விலக்குமின்,' எனவி டுத்தான்.

முகில்கள் மதுரை நகரைக் காத்தல்

13. வந்துநான் மாடமாகி வளைந்துநால் திசையும் சூழ்ந்து
சந்துவாய் தெரியா(து) ஒன்றித் தாமொரு குடிலாய் மாடப்
பந்திகோ புரஞ்செய் குன்றம் கால்கள்போற் பரிப்பப்
[போர்த்த
இந்துவார் சடையோன் ஏய எழிலிமா நகர மெங்கும்.

14. அன்னநான் மாடத் துள்ளும் நகருளார் அமைச்சர் வேந்தன்
தன்னநாற் கருவித் தானை சராசரம் பிறவும் தாழ்ந்து
முன்னைநாள் தனினும் இன்பம் மூழ்கிநன் கிருந்தார் ஊழிற்
பொன்னனாள் பாகன் தாளிற் புக்(கு) அமர்ந் திருந்தார்
[ஒத்தார்.

## வருணன் வெள்கி நின்று இறைவனைப் பூசித்தல்

15. கழைகெழு வரையின் உச்சி கவிழ்கின்ற புயல்போல்
[கார்சூழ்ந்(து)
இழைமணி மாடத் தும்பர் எறிதுளி உடைந்து துள்ளத்
தழைகடல் வறப்ப வாங்கித் தம்முடல் வறப்பப் பெய்து
மழைகளும் வெள்கி நின்ற; வருணனும் வெள்கி நின்றான்.

16 நடுங்கினன் கழிந்த அச்சம் நாணம்மீ தூரமானம்
ஒடுங்கினன் உள்ளத் துள்ளோர் உவகைவந் தெய்தப்
[பொற்பூத்
தடங்கரை குறுகா முன்நோய் தணிந்துபின் தோய்ந்துபாசம்
மடங்கினன் மடங்கா அன்பின் வள்ளலைப் பூசைசெய்வான்

17. புனிதநீ(று) ஆடிக்கண்டி பூண்டுவான் கங்கை யாதி
வனிதையர் பசும்பொற் கும்ப வாசநீர் வடித்துநீட்டப்
பனிமலர் சந்தம் கந்தம் மணிக்கலன் பசும்பொன் ஆடை
இனையன பிறவும் ஈன்று கற்பகம் எடுத்துக் காட்ட

18. ஐங்கனி அமுத மைந்தும் கௌவியம் அமுது தூபம்
செங்கதிர் விளக்கம்இன்ன தேவரான் கொடுப்பச் சேற்கண்
நங்கைதன் பதியைப் பூசித்(து) ஆயிரம் நாமங் கூறிப்
பைங்கதிர் முத்தஞ் சாத்தித்தொழு(து)அடி பணிந்து
[நின்றான்.

## இறைவன் முன் வருணன் வருந்திக் கூறல்

19. அருச்சனை உவந்த ஆதி அமலன் 'நீ யாது வேண்டிற்(று)?
உரைத்தி'என்(று) ஓத நீர்க்கோன் ஒல்லைதாழ்ந்(து) ஒன்றி
[னாலும்
கரைத்திடஅரிய இந்தக் கடியஎன் வயிற்று நோய்நின்
திரைத்தடம் ஆடும் முன்னே தீர்ந்திடப்பெற்றேன் எந்தாய்!

20. 'வேதமுதற் கலைகாட்சி முதல் அளவை விரிஞ்சன் முதல் விண்ணோர் செய்யும்
சோதனையுள் அகப்படாச் சோதி! உனைச் சோதிக்கத் துணிந்தேன் அந்தோ!
பேதைமையேன் இடத்தென்ன குணங்கண்(டு) என் பிணி தீர்த்தென் பெற்றாய்? ஆசை
கோதமிலாய்! குற்றமே குணமாகக் கொள்வதுநின் குணமோ ஐயா!

21. 'பொன்நகரான் காலந்தாழ்த்(து) உனையருச்சித்(து அயர்ச்சியொடும் போன வாறும்,
என்னெனயான்வினவியதும் வலாரியிறை கொடுத்ததும்அவ் விறைக்கு நேர்யான்
பின்னைவினு யதுமவன்சொல் வழியுன்னைச் சோதித்த பெற்றி தானும்
முன்னவனே! உன்னருளால் என்பிணிக்கு மருந்தாகி முடிந்த வாறே.

22. 'ஆறுமதி முடியணிந்த வருட்கடலே! வயிற்றுநோய் அன்றி மேனாள்,
மாறுபாடும் இருவினையும் மலவலியும் கெடவீட்டின் வழியும் பெற்றேன்
வேறினிமந் திரமென்னை, மணியென்னை, மருந்தென்னை? மெய்ம்மை யாகத்
தேறுமவர்க்(கு) இப்புனித தீர்த்தமே பிணியனைத்தும் தீர்ப்ப தன்றோ?

23. 'அடியனேன் முன்னஞ் செய்த அபராதம் இரண்டும் தீரும்
படிபொறுத்(து) அருள்வாய்!' என்று பன்முறை பரவித் [தாழ்ந்து
மடிவிலா மகிழ்ச்சி பொங்க வரங்களும் சிறிது வேண்டிக்
கடியதன் நகரம் புக்கான் குடதிசைக் காவல் வேந்தன்.

### நான்மாடக்கூடல் எனும் பெயர் வந்தமை

24. வன்திறல் வருணன் விட்ட மாரியை விலக்க ஈசன்
மின்திகழ் சடையி னின்று நீங்கிய மேகம் நான்கும்
குன்றுபோல் நிவந்து நான்கு கூடமாக்கூட லாலே
அன்றுநான் மாடக்கூடல் ஆனதால் மதுரை மூதூர்.

### அருஞ்சொற்பொருள் :

1. மிலைந்த – சூடிய, வேணி - சடை, கண்ணுதல் - நெற்றியில் கண்ணையுடைய சிவபெருமான். ஏய - ஏவிய, வறப்ப - வற்றும்படி, ஆடல் ஈது - திருவிளையாடல் முன்னே சொன்னது, (மதுரைக் காண்டத்தில் கூறப்பட்ட இறுதி ஆடல் - வருணன்விட்ட கடலை வற்றச் செய்தது), அனையான் - வருணன், மழை - மேகம், முகில் - மேகம்.

2. எற்று - வீசுகின்ற, தெண்திரை-தெளிந்த அலை. சேர்ப்பன்-வருணன், இழுக்கி – தோற்று, சேப்ப - சிவப்ப, உடன்று - கோபித்து. ஆகம் - உடல், பரவை - கடல், வெகுண்டு - கோபித்து, குன்ருன் - குறையாமல்.

3. நளிர் – குளிர்ச்சி (பொருந்திய), பெய்யா - பெய்து, ஒளி - புகழ், ஒல்லென - விரைவில், களைமின் - அழியுங்கள்.

4. பொள்ளென - விரைவாக, பார் – நிலம், முந்நீர் - கடல், தெள்ளரு - தெளிதற்கரிய, பிலம் - கீழ் உலகம், விள்ள - பிளக்க,

5. ஊழிநாள் - உலக முடிவுக் காலத்தில், அண்ட கடாகம் - உலக உருண்டை, பாழி - பெரிய, உருமு - இடி, பணுடவி அரா – ஆதிசேடன் என்னும் பாம்பு, திக்கில் - எட்டுத் திசைகளில் உள்ள, சூழி – முகபடாம், துணுக்கம் – அச்சம்.

6. ஆலி மழைத் துளி, வெள்ளிய காய் - பூசனிக்காய் பளிக்கு (பளிங்கு) - கண்ணுடி, தாரை - அருவி, உம்பர் - வானம்; மீன் கணம் - நட்சத்திரக் கூட்டம்.

7. கொண்மூ-மேகம், தீர்த்தனில்-ஊழிக்கால உருத்திரனைப் போல, கான்ற-கக்கின.

8. புஞ்சவாள்-மிக்க ஒளியுடைய, உடுக்கள்-நட்சத்திரங்கள், நித்திலம்-முத்து, பொன்னங்குப்பை-பொன் குவியல், துப்பு-பவளம், விஞ்சையர்-வித்தியாதரர், ஊடி-சினந்து.

9. கடிய கால்-வேகமான காற்று, எழிலி-மேகம், கொடிய-கொடிகளையுடைய, கோல்-செங்கோல், ஓச்சி-செலுத்தி, படி-உலகம், என்னு-என்று, உயங்கினர்-வருந்தினர்.

10. பொருக்கென - விரைவாக, விண்ணிழி - தேவர் உலகத்திலிருந்து இறங்கி வந்த, விமானம்-கோபுரம், விடையவன்-எருதை ஊர்தியாக உடையவன் (சிவபெருமான்) கை கண்ட-தேறிய.

11. ஆலம்-ஆலகால விடம், மிடற்றினை-கழுத்தை யுடையவனே, கூற்று-எமன், சாபம்-வில், நடையினையாகி-நடையை யுடையவனாய்.

12. தென்னர்க்கு-பாண்டியர்களுக்கு, முன்னவன்-ஆதிக்கடவுள், சூழ்ந்து-சுற்றிக்கொண்டு, மாரி-மேகம்.

13. சந்துவாய்-பொருத்துவாய், குடிலாய்-குடிசைபோல மாறி, பந்தி - வரிசை, செய்குன்றம்-செயற்கைக் குன்று, பரிப்ப-தாங்க, இந்து வார் சடையோன்-சந்திரனை யணிந்த நீண்ட சடையையுடைய சிவபெருமான், போர்த்த-மூடிக்கொண்டன.

14. தன்ன - தன்னுடைய, தானை - சேனை, தாழ்ந்து-தங்கி; சராசரம்-அசையும் பொருள் அசையாப் பொருள், ஊழில்-நல்வினைப் பயனாய், பொன்னனாள் பாகன் - பொன்போன்ற பார்வதியை ஒரு பாகத்தில் உடையவன் (சிவபெருமான்).

முன்னை நாள்தனினும் - வருணன் விட்ட கடலை வற்றச் செய்த நாளைவிட.

15. கழை கெழு-மூங்கில் பொருந்திய, இழை மணி-இழைக்கப் பட்ட மணிகளையுடைய, உம்பர்-மேலே, தழை கடல்-செழித்த கடல், வெள்கி-வெட்கமுற்று, வெண்ணீறமாக மாறி.

16. பொன் பூத்தடம்-பொற்றாமரைக் குளத்தின், குறுகா முன்-அணுகுவதற்கு முன்பு, தோய்ந்து-நீரில் குளித்து, மடங்கினன்-நீங்கினான், மடங்கா-குறையாத, வள்ளல்-சிவபெருமான்.

17. நீருடி-விபூதியையணிந்து, கண்டி-உருத்திராட்சம், வான்-உயர்ந்த, ஆகாயம், வனிதையர் - பெண்கள், கும்பம் - குடம், கற்பகம் - தேவர் உலக மரம் (விரும்பியதை யெல்லாம் அளிக்க வல்லது),

18. ஐங்கனி - எலுமிச்சை, நாரத்தை, தமரத்தை, குளச்சி, மாதுளை, அமுதம் ஐந்து-பஞ்சாமிருதம் (பால், தயிர், நெய், தேன், சருக்கரை என்னும் ஐந்தும் கலந்தது), கௌவியம்-பஞ்ச கௌவியம் அல்லது ஆனைந்து (பால், தயிர், நெய், சாணம், கோமயம்), சேல் கண்-கயல் போன்ற கண்ணையுடைய, பதி-கணவன் (சிவன்), முத்தம்-முத்து.

19. அமலன் - பரிசுத்தமானவன், உரைத்தி - சொல்லுவாய், நீர்க்கோன்-வருணன், திரைத் தடம்-அலையையுடைய பொற்றாமரைக் குளத்தில், எந்தாய்-என் தந்தையே.

20. வேத முதல் கலை அளவை-வேதமென்னும் முதன்மையாகிய ஆகம (நூல்) பிரமாணம், காட்சி அளவு-பிரத்தியட்சப் பிரமாணம் (நேரில் கண்டு அறிதல்), முதல் அளவை-அனுமானப் பிரமாணம் (ஊகித்து அறிதல்), விரிஞ்சன் - பிரமன், கோதம் - குரோதம், பகைமை-

**21.** பொன் நகரான்–இந்திரன், வலாரி–இந்திரன், இறை–விடை.

**22.** ஆறு மதி–கங்கை யாறும் சந்திரனும், மல வலி–ஆணவ மலத்தின் வலிமை, என்னை – என்ன பயன், தேறுமவர்க்கு–தெளி பவர்க்கு, மணி–குளிகை (நோய் தீர்ப்பது).

**23.** அபராதம் இரண்டு – குற்றம் இரண்டு (மதுரையை அழிப்பதற்குக் கடலை ஏவியதும், ஏழு மேகங்களை ஏவியதும்), பரவி–துதித்து, தாழ்ந்து–வணங்கி, மடிவிலா–அழியாத, குடதிசை–மேற்கு

**24.** நிவந்து–உயர்ந்து, கூடம்–கட்டடவகை, அன்று–அன்று முதல், நான்மாடக்கூடல் என்பது மதுரையின் மற்றொரு பெயர்.

## இலக்கணக் குறிப்பு:

**1.** கதிர் மதி–இரண்டனுருபும் பயனும் உடன் தொக்க தொகை, கண்ணுதல், மாடக்கூடல்–வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைகள், அதிர்கடல், முதிர்மழை – வினைத் தொகைகள், அனையான்–குறிப்பு வினையாலணையும் பெயர், ஏய– தொகுத்தல் விகாரம், நான்மாடம்–பண்புத் தொகை, சொல்வாம்– தன்மைப் பன்மை வினைமுற்று.

**2.** தெண்டிரை – வினைத்தொகை; இரு கண்ணும் – உம்மை முற்றுப்பொருளில் வந்தது, எழுகோபம்–வினைத்தொகை, கோபச் செந்தீ–உருவகம், குன்றான்–முற்றெச்சம்.

**3.** மூதூர்–பண்புத் தொகை (முதுமை + ஊர்), குளிர் கடல்– வினைத்தொகை, பெய்யா – செய்யா என்னும் வாய் பாட்டு உடன் பாட்டு வினையெச்சம், களைமின் – முன்னிலைப் பன்மை ஏவல் வினை முற்று.

**4.** முந்நீர்–பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித் தொகை (மும்மை + நீர்), எட்டும்–உம்மை, முற்றும்மை.

5. பண + அடவி - பணுடவி (வடமொழித் தீர்க்கசந்தி) உடல் + நெளிய-உடனெளிய.

6. பளிங்கு + தூண் - பளிங்குத் தூண், மீன் கணம் - ஆரும் வேற்றுமைத்தொகை.

7. சர + அசரம் — சராசரம் (தீர்க்கசந்தி), போர்த்தன— முற்றெச்சம், கான்ற-பலவின்பால் இறந்த கால வினைமுற்று.

8. பைஞ்சுடர்-பண்புத்தொகை (பசுமை + சுடர்), காரொளி-பண்புத்தொகை (கருமை + ஒளி), சிதறுவ - பலவின்பால் வினைமுற்று.

9. நீள் + நகர் = நீணகர், என்னு-செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.

10. இழிவிமானம்-வினைத்தொகை.

11. விடையினை, மிடற்றினை, சடையினை, படையினை, நடையினை-முன்னிலை ஒருமைக் குறிப்பு முற்றுக்கள்.

12. தொன்னகர் – பண்புத்தொகை (தொன்மை + நகர்) இன்னெடு-இங்கெடு என்பது எதுகை நோக்கி மாறியது, விலக்குமின்-முன்னிலைப் பன்மை ஏவல் வினைமுற்று.

13. நாற்றிசையும்-பண்புத்தொகை (நான்கு + திசை), போர்த்த-பலவின்பால் வினைமுற்று.

14. நாற்கருவி - பண்புத்தொகை, அன்னுள் - அனுள் என வந்தது தொகுத்தல் விகாரம், குறிப்பு வினையாலணையும் பெயர், இருந்தார் - தெரிநிலை வினையாலணையும் பெயர்.

15. கார்-ஆகுபெயர், எறிதுளி, தழைகடல், இழை, மணி-வினைத்தொகைகள்.

16. நடுங்கினன், ஒடுங்கினன், மடங்கினன் - முற்றெச்சங்கள், அச்சம் நாணம் — உம்மைத்தொகை, பொற்பூ — மூன்ற

னுருபும் பயனும் உடன் தொக்க தொகை, மடங்கா- ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

**17.** பசும்பொன் - பண்புத்தொகை, பொற்கும்பம் - மூன்ற னுருபும் பயனும் உடன் தொக்க தொகை.

*18.* ஐங்கனி - பண்புத்தொகை, இன்ன குறிப்பு வினையாலணை யும் பெயர், சேற்கண் - உவமைத் தொகை.

**19.** உரைத்தி-முன்னிலை ஒருமை ஏவல் வினைமுற்று, நீர்க்கோன்-நான்காம் வேற்றுமைத் தொகை; எந்தாய் - எந்தை என்பதன் விளி.

**20.** இலாய் - முன்னிலை ஒருமை வினைமுற்று (விளி), குணமாக- வினையெச்சம்.

*21.* பொன்னகரான்-குறிப்பு வினையாலணையும் பெயர், வினயது- வினவியது என்பதன் மரூஉ.

**22.** ஆறுமதி - உம்மைத் தொகை, அருட்கடல் - உருவகம். மேல் + நாள் - மேனாள், இருவினை - பண்புத் தொகை, மலவலி - வேற்றுமைத் தொகை.

**23.** பன்முறை - பண்புத்தொகை (பன்மை + முறை), மடிவிலா- ஈறுகெட்ட எதிர்மறைப்-பெயரெச்சம்.

**24.** வன்றிறல் - பண்புத்தொகை (வன்மை + திறல்), கூடமா- ஈறு கெட்ட வினையெச்சம்.

## கேள்விகள்:

*1.* வருணன் மதுரையை அழிக்க முற்பட்டது ஏன்? அவன் எவ்வாறு அழிக்க முற்பட்டான்?

**2.** ஏழு முகில்களும் விளைத்த அழிவை விளக்குக.

**3.** 'விஞ்சையர் மகளி ரூடி வெறுத்தெறி கலன்கள் போல' - இதற்கு உவமேயம் யாது?

4. பாண்டியன் சோமசுந்தரக் கடவுளிடம் எங்ஙனம் முறையிட்டார்?

5. பாண்டியன் வேண்டுகோளுக்கு இணங்கச் சிவபெருமான் செய்தது யாது?

6. நான்கு முகில்களும் மதுரையைக் காப்பாற்றிய விதத்தைக் கூறுக.

7. வருணன் அதன் பிறகு யாது செய்தான்?

8. வருணன் சிவபெருமானை நோக்கி வருந்திக் கூறியது என்ன?

9. மதுரைக்கு நான்மாடக்கூடல் என்று பெயர் வரக் காரணம் என்ன?

## 4. அன்பின் வெற்றி

[இதன் ஆசிரியர் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை என்பவர். இவர் கன்னியாகுமரி மாவட்டத்தில் நாகர்கோவிலுக்குப் பக்கத்திலுள்ள தேரூரில் 1876ஆம் ஆண்டு பிறந்தார். தமிழாசிரியராகப் பல்லாண்டுகள் பணி செய்து, 1981இல் ஓய்வு பெற்றார், 1954ஆம் ஆண்டு இவ்வுலக வாழ்வை நீத்தார். இவர் கவிதைகள் மிக எளிமையும், இனிமையும், கருத்தாழமும் பொருந்தியவை.

பாடப்பகுதி, 'மலரும் மாலையும்' என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்டது. இதில் வடநாட்டிலிருந்த மீராபாய் என்னும் அம்மையார் செய்தி கூறப்படுகிறது. தமிழ் நாட்டில் வாழ்ந்த ஆண்டாள் என்னும் அம்மையார் போலவே இவரும் தாம் வழிபட்டு வந்த இறைவனையே மணக்க வேண்டுமென்று உறுதிகொண்டு அவ்விறைவனைப்பற்றிப் பல பாடல்களைப் பாடி, இறுதியில் அவனோடு இரண்டறக் கலந்தார். இவர் 1601ஆம்ஆண்டில் இராஜபுதனத்திலுள்ள ஒரு சிற்றரசனக்குப்புதல்வியாராய்ப் பிறந்து, குழந்தைப் பருவமுதலே கண்ணன் சிலை ஒன்றைத்

தம் கணவராகக் கருதி, அதனிடத்தில் அளவற்ற அன்பு செலுத்தி வந்தார். பல இடையூறுகளுக்குப் பின்னர் அவரது அன்பு வென்றது. மீராபாய், தம்மை இறைவன் மணந்ததாகக் கண்ட கனவு, ஆண்டாள் கண்ட கனவு போலவே இருப்பது அறிந்து இன்புறத் தக்கது.]

### மீராபாய் தாம் கண்ட கனவைத் தாயிடம் கூறல்

1. அன்னையே தாயே அழகன் ஜகதீசன்
என்னை மணக்க இரவில் கனக்கண்டேன்.
நென்னல் இரவு கண்ட கனமுழுதும்
உன்னை ஒளியாமல் உரைக்கின்றேன் கேளம்மா.

2. ஆல மரங்கள் அடர்ந்து வளர்ந்தஒரு
சோலையும் அந்தச் சோலை நடுவாக
நீல மணிநீர் நிறைந்த குளம்ஒன்றும்
காலை எழுமுன் கனக்கண்டேன் அம்மாநான்.

3. நங்கையர் கூடி நலங்க்னிந்(து) என்மீது
குங்குமம் பூசிக் குளிர்சந் தனம்பூசி
மங்கல மாக மஞ்சள் மிகப்பூசி
அங்குநீ ராட்டக் கனக்கண்டேன் அம்மாநான்.

4. தோரணம் நாட்டித் துழாய்மாலை தொங்கவிட்டுப்
பூரண கும்பம் பொலிவாக முன்வைத்துத்
தாரணி போற்றத் தகுமோர் புரோகிதர்வந்(து)
ஆரணம் ஓதக் கனக்கண்டேன் அம்மாநான்.

5. செய்தற்(கு) அரிதாம்அத் திருமணப் பந்தரின்கீழ்
வைய மளந்து வளர்ந்த வடிவழகன்
ஐம்பத் தறுகோடி ஆட்கள் நடுவேஎன்
கையைப் பிடிக்கக் கனக்கண்டேன் அம்மாநான்.

6. முந்துசெய் தவப்பயனல் முகுந்தன் கிரிதரனே
அன்பு நிறைந்திடுமென் அகமுடையா னுகவந்தான்;
இன்பமண மும்நேற்(று) இரவினிலே ஆனதம்மா
துன்பம் ஒழிந்ததம்மா சுகமும் பிறந்ததம்மா.

## அருஞ்சொற்பொருள் :

**ஜகதீசன்** - உலகிற்குத் தலைவன், நென்னல் - நேற்று (நெருநல் என்பதன் திரிபு), நலங்கனிந்து - நன்மை மிகுந்து, துழாய் - துளசி, பொலிவாக - அழகாக, பூரண கும்பம் - நீர் நிறைந்த குடம், தாரணி - உலகம், ஆரணம் - வேதம், வையம் - உலகம், வடிவு - உரு, மாவலியிடம் குட்டையானவாமனாக வந்து, மூவுலகையும் தன் ஈரடியால் அளப்பதற்கு நீண்ட திரிவிக்கிரமனாக உருவெடுத்த திருமால், அதனால் உலகளந்த பெருமாள் என்றும், நெடியோன் என்றும், நெடுமால் என்றும் பெயர்பெற்றவன், முகுந்தன் - திருமாலின் பெயர் கிரிதான் - ஆயர்பொருட்டுக் கோவர்த்தன கிரியைக் குடையாகத் தரிசித்தவன் அல்லது பிடித்தவன் (கண்ணன்), அகமுடையான்- கணவன், இன்பமணம் - இன்பமான மணம்,

## இலக்கணக் குறிப்பு:

**ஜகதீசன்** - நான்காம் வேற்றுமைத் தொகை, நீலமணி - பண்புத் தொகை, குளிர்சந்தனம் - வினைத்தொகை, துழாய் மாலை - மூன்றனுருபும் பயனும் உடன்தொக்க தொகை, தாரணீ - தரணீ என்பதன் நீட்டல் விகாரம், வடிவு + அழகன்—வடிவழகன் (வேற்றுமைத் தொகை), கிரிதரன் - இரண்டாம் வேற்றுமைத் தொகை.

## 5. ஆசிய ஜோதி

### "அருள் உரிமை"

[இதனை இயற்றுவரும் கவிமணி தேசிய விநாயகம் பிள்ளை அவர்களே, இந்நூல் புத்த பகவானது வரலாற்றைப் பற்றிக் கூறுவது. புத்த பகவானது இயற்பெயர் சித்தார்த்தர் என்பது. அவர் இளமையிலேயே இயல்பாக இரக்கமும், அன்புள்ளமும் படைத்தவர். அவரது இப்பண்பை விளக்குவதற்குப் பின்வரும் செய்தி தக்க சான்றாகும். ஒருகால், சித்தார்த்தரது உறவினனாகிய தேவதத்தன் என்பவன்

அரண்மனைப் பூங்காவின்மீது பறந்துகொண்டிருந்த அன்னப் பறவை ஒன்றைத் தன் அம்பால் வீழ்த்தினான்; வீழ்ந்த பறவை துடிப்பதைக் கண்ட சித்தார்த்தர், அதனை எடுத்துத் தம் மடிமீது வைத்துத் தடவித் தடவி அதன் தளர்ச்சியை நீக்கினார். அப்போது தேவதத்தனது சேவகன் ஒருவன் சித்தார்த்தரிடம் வந்து, அப்பறவை தன் அரசனுக்கு உரியது என்று அதனைக் கொடுக்குமாறு கேட்டான்.]

### சித்தார்த்தரின் மறுமொழி

1. 'எய்த அம்பினால்—பறவை
இறந்து வீழ்ந்திடுமேல்
எய்த வர்க்காகும்—உரிமை
யாதும் ஐயமில்லை.

2. 'நீண்ட சிறகினிலே—விசைதான்
நின்றி ருப்பதல்லால்
மாண்ட தில்லை அன்னம்—உயிர்த்து
வாழு கின்றதப்பா!'

3. சந்தே கம்வேண்டா—இதனைத்
தரமுடி யாதப்பா!
எந்த உயிரையும்—காப்ப(து)
என்கடமை யப்பா!

### தேவதத்தன் கூறல்

4. சாற்றும் உரைகேட்டுத்—தேவ
தத்தனும் ஓடிவந்து
சீற்றம் எழுந்தவனாய்—நின்று
செப்பும் மொழியிதுவாம்;

5. 'மடிய நேர்ந்தாலும்—உயிர்த்து
வாழ நேர்ந்தாலும்
படியில் வீழ்ந்திடுமேல்—பறவை
பாணம் எய்தவர்க்காம்.

6. 'என்கை அம்பினுல்—விழுந்த
இப்ப றவையினைச்
சங்கை இல்லாமல்—இங்கே
தந்திடு வாய்ஐயா !

## சித்தார்த்தன் மறுமொழி

7. சொன்ன மொழிகேட்டான்—ஐயன்
துன்பம் மிகஅடைந்தான்
அன்னப் பறவையினைக்—கன்னத்தோ(டு)
அணைத்து வைத்துக்கொண்டான்.

8. பாரில் உயிரையெல்லாம்—அருளால்
பாது காக்கவந்தோன்
சீரிய நன்மொழிகள்—உள்ளம்
தெளிந்து கூறுகின்றுன்;

9. 'இல்லை இல்லைஐயா!—பறவை
என்ப றவைஐயா !
வல்லடி வழக்கு—நீயும்
வளர்க்க வேண்டாமையா !

10. 'தொல்லு லகமெல்லாம்—அருளால்
சொந்த மாக்கவந்தேன்;
வெல்லும் பொருள்களில்—முதலில்
வென்ற பொருளிதுவாம்.

11. 'எம்ம னிதருமே—உளத்தில்
இரக்க முற்றிடயான்
செம்மை நெறியினை—நன்கு
தெரிந்து கூறிடுவேன்;

12. 'துன்பம் அண்டாமல்—அதனைத்
துரத்தி ஓட்டிடுவேன்;
இன்பம் இவ்வுலகில்—நிலைக்க
என்றும் வென்றிடுவேன்

13. ‘மனிதர் மட்டுமல்ல—உலகில்
வாழும் எவ்வுயிரும்
இனிய வாழ்வடையும்—வழியை
இனிது காட்டிடுவேன்.

14. ‘என்னு ரைகளைநீ—மறுக்கின்
இன்றே இப்போதே
மன்னும் நீதிமன்றம்—ஏறி
வழக்கு ரைப்போமையா!’

## நீதி மன்றம் அடைதல்
### (வேறு)

15. இருவரும் அப்பால் இசையா ராகி
அறநூல் கற்றோர் அறிவிற் பெரியோர்
நடுநிலை நீதி நன்கு கண்டோர்
கூடிய மன்றில் குறைகொண் டேகினர்.
ஏகவே,

வழுவற இருதலை வழக்கும் கேட்டு
மன்றுளோர் தம்முள் வாதம் செய்தனர் ;
‘இதுவே நீதி’ என் றியம்பினர் சிலரே ;
‘அதுவே நீதி’ என் றறைந்தனர் சிலரே ;
யாதும் துணியா திருந்தனர் சிலரே.
முடிவில்,

இந்நாள் வரையிலும் எவருமே அறியாப்
புலமை மிக்க புரோகித னொருவன்
எழுந்து நின்று, ‘யாவருங் கேட்க ;

## புரோகிதன் கூறுதல்
### (வேறு)

16. ‘உயிரைக் கொன்றிடவே—முயலும்
ஒருவ னுக்கந்த
உயிரின் மேலேதும்—உரிமை
உண்டோ கூறுமையா!

17. 'உயிரைக் காப்பவனே—என்றும்
உயிர்க்கு டையவனும்;
அயர்வு வேண்டாமையா!—இதுவே
அறநூல் விதிஐயா!

18. 'இன்னும் வீண்வாதம்—பேசி
இருப்ப தேனையா!
அன்னம் சித்தார்த்தன்—பொருளாம்!
ஐய மில்லையையா!'

(வேறு)

19. என்று நீதி எடுத்துரை செய்து
மன்றி விருந்து மாய மாக
மறைந்து போயினன்; மறையும்அந் நேரம்
பையர வொன்று பதுங்கி அவ்வழி
ஊர்ந்து செல்வதை ஒருவன் கண்டனன்;
சிற்சில காலைத் தேவரும் இந்த
வடிவந் தாங்கி வருவதுண் டென்பரால்
யாதோ உண்மை! யாவரே அறிவார்!

### அருஞ்சொற்பொருள் :

படியில் - பூமியில், சங்கை - ஐயம், வல்லடிவழக்கு - அழி வழக்கு, பை அரவு - படத்தையுடைய நாகம்.

### இலக்கணக் குறிப்பு :

கை அம்பு - ஏழாம் வேற்றுமைத் தொகை, நன்மொழி - பண்புத் தொகை, வல்லடி - பண்புத்தொகை (வன்மை + அடி), தொல்லுலகம் - பண்புத்தொகை (தொன்மை + உலகம்) அறநூல், பையரவு - இரண் டனுருபும் பயனும் உடன் தொக்க தொகைகள்.

கேள்விகள் :

1. எய்யப்பட்ட பறவையைத் தருமாறு கேட்ட சேவகனுக்குச் சித்தார்த்தர் உரைத்தது என்ன?

2. தான் எய்த பறவை தனக்கே உரியது என்பதற்குத் தேவதத்தன் கூறிய நியாயம் என்ன?

3. வழக்கின் போது புரோகிதன் கூறுய நியாயம் யாது?

4. தேவனே புரோகிதனாக வடிவெடுத்து வந்தனன் என்பதை எதுகொண்டு ஊகிக்கலாம்?

---

# IV. பல்சுவைப் பகுதி

## 1. வருணனை

[பரிபாடல் என்பது சங்க நூல்களுள் எட்டுத் தொகையைச் சார்ந்தது. இது ஒரு வகைப் பாட்டின் பெயர். இதுவே இந் நூலுக்கும் பெயராய் அமைந்தது. இதிலுள்ள பாடல்களுக்கு இசை வகுக்கப்பட்டுள்ளது. இப்பாடல்களைப் பாடியவர்கள் பலர். திருமால், முருகன், வையை என்னும் பொருள்களைப் பற்றி இவை கூறும்.]

### மதுரை

மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப்
பூவொடு புரையும் சீரூர் ; பூவின்
இதழகத் தனைய தெருவம் ; இதழகத்(து)
அரும்பொகுட் டணைத்தே அண்ணல் கோயில் ;
தாதின் அனையர் தண்டமிழ்க் குடிகள் ;
தாதுண், பறவை யனையர் பரிசில் வாழ்நர்,
பூவினுட் பிறந்தோன் நாவினுட் பிறந்த
நான்மறைக் கேள்வி நவில்குரல் எடுப்ப
ஏம இன்துயில் எழுதல் அல்லதை
வாழிய வஞ்சியும் கோழியும் போலக்
கோழியின் எழா(து)எம் பேரூர் துயிலே.

## அருஞ்சொற்பொருள் .

மாயோன்—திருமால், புரையும் - ஒத்துள்ள, சீரூர் – சிறப்பினை, யுடைய ஊர், அனைய போன்றவை. தெருவம் - தெருக்கள், பொகுட்டு—கொட்டை (பூவின் நடுவில் இருப்பது), அண்ணல் - பெரியோன் (திருமால்), தாது - மகரந்தம், பறவை - வண்டுகள், பரிசில் வாழ்நர் - பரிசில் பெற்று வாழ்பவர்கள், நவில் – சொல்லப் படுகின்ற, ஏமம் - பாதுகாவலாகிய, அல்லதை – அல்லாமல், வஞ்சி-வஞ்சி மாநகர் (சேரர் தலைநகர்), கோழி - உறையூர் (சோழர் தலைநகர்), துயில் – உறக்கம். வாழிய – அசை.

## இலக்கணக் குறிப்பு:

சீர் + ஊர் — சீரூர் (இரண்டனுருபும் பயனும் உடன் தொக்க தொகை), அனைய - பலவின் பால் குறிப்பு முற்று, அனையர் - பலர்பால் குறிப்பு முற்று, தண்டமிழ் - பண்புத் தொகை (தண்மை + தமிழ்), பிறந்தோன் - வினையாலணையும் பெயர், நவில்குரல் - வினைத்தொகை, கேள்வி – தொழிலாகுபெயர் (வேதங்களைக் குறித்தது), நான்மறை இன்துயில், பேரூர் – பண்புத் தொகைகள்.

## 2. சீட்டுக்கவி

[சீட்டுக்கவி என்பது, ஒரு புலவர் தம் ஆற்றலை அறியாத ஒரு வள்ளலிடம் அதனைப் புலப்படுத்தி தம் வரவை அவனுக்கு அறிவித்து, அவனிடம் பரிசில் பெற வந்திருப்பதாக ஒரு சீட்டில் எழுதியனுப்பும் செய்யுள். இக்கவி, சேலத்தின் தென்பகுதியை ஆண்டு வந்த குலசேகரன் என்னும் மன்னவனுக்கு அந்தக்கவி வீரராகவ முதலியார் எழுதி அனுப்பியது. இவரது காலம் 17ஆம் நூற்றூண்டு.

ஏடாயி ரங்கோடி எழுதாது தன்மனத்(து)
எழுதிப் படித்தவிரகன்
இமசேது பரியந்தம் எதிரிலாக் கவிவீர
ராகவன் விடுக்குமோலை

சேடாதி பன்சிரம் அசைத்திடும் புகழ்பெற்ற
திரிபதகை குலசேகரன்
தென்பாலே சேலம் புரந்துதா கந்தீர்த்த
செழியனெதிர் கொண்டுகாண்க:
பாடாத கந்தருவம் எறியாத கந்துகம்
பற்றிக்கொ லாதகோணம்
பறவாத கொக்கனல் பண்ணாத கோடைஐம்
படையில்தொ டாதகுந்தம்
சூடாத பாடலம் பூவாத மாவொடு
தொடுத்துமுடி யாதசடிலம்!
சொன்னசொல் சொல்லாத கிள்ளையொன் றெங்கும்
துதிக்கவர விடல்வேண்டுமே.

## அருஞ்சொற்பொருள் :

**விரகன்** - திறமைசாலி, இமசேதுபரியந்தம் - இமயம் முதல் சேது வரை, சேடாதிபன் - ஆதிசேடன், செழியன் - பாண்டியன், பாடாத கந்தருவம் முதலியன குதிரை. ஆசிரியர் குதிரை வேண்டுகின்றார்.

## இலக்கணக் குறிப்பு:

இமசேது பரியந்தம் - வடமொழிப் புணர்ச்சி, எதிரிலா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம், பாடாத-எதிர்மறைப் பெயரெச்சம்.

## 3. சிலேடை

[சிலேடை என்பது இரு பொருள் உண்டாகும்படி கவி பாடுவது. இப்பிரிவில் உள்ள மூன்று செய்யுட்களும் மூன்று வெவ்வேறு புலவர்களால் இவ்வாறு இரு பொருள்படுமாறு பாடப்பெற்றவை.]

### திருமாலுக்கும் கைக்கடிகாரத்திற்கும்

1. சக்கரத்தி னல்அரவம் தாங்குதலின் ஓடுமுள்ளெட்(டு)
அக்கரத்தி னல்வேலை ஆர்வதினல்—மிக்க அன்பர்
முக்கியமாய்க் கைக்கொளால் முத்துசுவா மித்துரையே
கைக்கடிகா ரம்திருமால் காண்.

—அழகிய சொக்கநாதர்

### கலைசைச் சிலேடை வெண்பா

2. ஆவலுடன் பாவலரும் ஆறுகால் வண்டினமும்
காவலரைச் சூழும் கலைசையே—மேவும்
அரிவைஅம்பா கத்தான் அரண்ஒருமூன்(று)எய்தோன்
அரிவைஅம்பா கத்தான் அகம்.

—தொட்டிமலைச் சுப்பிரமணிய முனிவர்

### முருகக்கடவுளைச் செட்டியாராகக் கருதிப் பாடியது

3. வெங்காயம் சுக்கானால் வெந்தயத்தால் ஆவதென்ன
இங்கார் சுமந்திருப்பார் இச்சரக்கை, —மங்காத
சீரகத்தைத் தந்தீரேல் தேடேன் பெருங்காயம்
ஏரகத்துச் செட்டியா ரே!

—சொக்கநாதப் புலவர்

### அருஞ்சொற்பொருள் :

1. சக்கரம்-திருமால் கையில் உள்ளது, கடிகாரத்தில் உள்ளது, அரவம் - ஆதிசேடன் என்னும் பாம்பு, கடிகாரத்தில் ஓசை, உன் எட்டு அக்கரம் - எண்ணுகின்ற எட்டெழுத்து (ஓம் நமோநாராயணாய என்பவை,) முள் எட்டு அக்கரம் - முள் எட்டுகின்ற எழுத்து (எண்கள்,) வேலை ஆர்வத்தினால் - திருப்பாற் கடலில் பொருந்தியிருப்ப தால், வேலைப்பாடு பொருந்தியிருப்பதால், கைக்கொளல் - பத்தி செய்தல், கையில் அணிதல்.

### இலக்கணக் குறிப்பு:

ஓடுமுள் - வினைத்தொகை, எட்டு அக்கரம் - எட்டாகிய அக்கரம் (பண்புத்தொகை), எட்டு(கின்ற) அக்கரம் (வினைத் தொகை.)

### அருஞ்சொற்பொருள் :

2. பாவலர் - பாக்களில் வல்லவர் (புலவர்), காவலர் - அரசர், சோலையில் உள்ள பூக்கள் (கா + அலர்), அரிவை அம்பாக- திருமாலைக் கூர்மையான அம்பாக (அரி + வை + அம்பு), அரிவை அம்பாகத்தான் - பார்வதியை அழகிய இடப்பாகத்தில் உடையவன் (அரிவை - பார்வதியாகிய பெண்), அகம் - இடம்,

## இலக்கணக் குறிப்பு :

எய்தோன் - தெரிநிலை வினையாலணையும் பெயர், பாகத்தான் - குறிப்பு வினையாலணையும் பெயர்.

## அருஞ்சொற்பொருள் :

**3.** வெங்காயம் - கொடிய உடல், சுக்காலுல் - சுக்குப்போல உலர்ந்துவிட்டால், வெந்தயம் - இரும்பு பஸ்மம் (வெந்த + அயம்), மங்காத - புகழ் குறையாத, சீரகம் - சிறப்பான வீடு (மோட்சம்), பெருங்காயம் - பெரிய இவ்வுடல், ஏரகம் - திருவேரகம் என்னும் தலம்.

## இலக்கணக் குறிப்பு :

வெம்மை + காயம் – வெங்காயம் (பண்புத் தொகை), வெந்த + அயம் - வெந்தயம் (தொகுத்தல் விகாரம்) பெருமை + காயம் - பெருங்காயம் (பண்புத் தொகை).

## 4. சிறு பிரபந்தம்

[பிரபந்தம் என்பது பிற்காலத்துச் சிறுநூல் வகையைக் குறிக்கும். தமிழ் மொழியில் மொத்தம் 96 வகைப் பிரபந்தங்கள் உண்டு, பரணி, உலா, கலம்பகம், பிள்ளைத் தமிழ், மாலை முதலியவை, அவற்றுள் சிலவாகும். பாடமாக வந்துள்ள நால்வர் நான்மணி மாலை என்பது அப்பர், சுந்தரர், சம்பந்தர், மாணிக்கவாசகர் என்னும் நான்கு சைவப் பெரியார்களைப் பற்றிச் சிவப்பிரகாச முனிவர் பாடியது. மாணிக்க வாசகர் இயற்றிய திருவாசகம் என்னும் நூலின் சிறப்பு இங்குக் கூறப்படுகிறது.

திருவள்ளுவ மாலை என்பது திருக்குறளைப் பற்றிக் கடைச் சங்கப் புலவர்கள் 49 பேரும் சிறப்பித்துப் பாடிய பாடல்களின் தொகுதி. அவற்றுள் உக்கிரப் பெருவழுதி என்னும் பாண்டியன் பாடிய செய்யுள் இங்குத் தரப்பட்டுள்ளது.)

### நால்வர் நான்மணி மாலை
### (திருவாசகத்தின் சிறப்பு)

திருவார் பெருந்துறைச் செழுமலர்க் குருந்தின்
நிழல்வாய் உண்ட நிகரில்ஆ நந்தத்

தேன்தேக் கெறியும் செய்யமா ணிக்க
வாசகன் புகன்ற மதுர வாசகம்
யாவரும் ஓதும் இயற்கைத்(து) ஆதலின்
பொற்கலம் நிகர்க்கும்; பூசுரர் நான்மறை
மட்கலம் நிகர்க்கும்; மதுர வாசகம்
ஓதின் முத்தி உறுபயன்;
வேதம் ஓதின் மெய்ப்பயன் அறமே. 1

## திருவள்ளுவமாலை
## (திருக்குறளின் சிறப்பு)

நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளாநான்முகத்
[தோன்
தான்மறைந்து வள்ளுவனாய்த் தந்துரைத்த—நூன்
[முறையை
வந்திக்க சென்னி; வாய் வாழ்த்துக; நன்னெஞ்சம்
சிந்திக்க; கேட்க செவி. 2

### அருஞ்சொற்பொருள் :

1. திரு ஆர் - அழகு பொருந்திய, பெருந்துறை - திருப்பெருந் துறை என்னும் தலம், குருந்து - ஒரு மரம், நிழல்வாய் - நிழலினிடத்து தேக்கெறியும் - தெவிட்டுகின்ற, செய்ய - செம்மையான, மதுர வாசகம் - இனிய திருவாசகம், பூசுரர் - அந்தணரது, உறுபயன் - நாம் அடையும் பயன்.

### இலக்கணக் குறிப்பு :

செழுமலர் - பண்புத்தொகை, வாய் - ஏழாம் வேற்றுமை உருபு, இயற்கைத்து - குறிப்பு வினைமுற்று, பொற்கலம், மட்கலம் - மூன்ற னுருபும் பயனும் உடன் தொக்க தொகைகள், மெய்ப்பயன் - பண்புத் தொகை.

### அருஞ்சொற்பொருள் :

2. முப்பொருளா - அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று பொருளாக, வந்திக்க சென்னி - தலை வணங்குக.

## இலக்கணக்குறிப்பு :

முப்பொருள் - பண்புத்தொகை, முப்பொருளா – ஈறு கெட்ட வினையெச்சம், நூன்முறை - வேற்றுமைத் தொகை, வந்திக்க, சிந்திக்க, கேட்க - வியங்கோள் வினைமுற்றுகள், நன்னெஞ்சம் - பண்புத்தொகை.

## 5. வழிபாடு

[வழிபாடு என்னும் பிரிவு, பல வகை வணக்கங்களைக் கூறுவது. தெய்வங்களையும், கோயிலையும், தொழிலையும் எந்த முறையில் வழிபட வேண்டுமென்பது இங்குக் கூறப்பட்டுள்ளது.]

### ( திருமால் )

1. காய்இலை தின்றும் கானில் உறைந்தும் கதிதேடித்
தீயிடை நின்றும் பூவலம் வந்தும் திரிவீர்காள்!
தாயினும் அன்பன் பூமகள் நண்பன் தடநாகப்
பாயல் முகுந்தன் கோயில் அரங்கம் பணிவீரே.

—பிள்ளைப் பெருமாளையங்கார், திருவரங்கக்கலம்பகம்

### ( சிவன் )

2. என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே!
இருங்கடல் வையத்து
முன்னம் நீபுரி நல்வினைப் பயனிடை
முழுமணித் தரளங்கள்
மன்னு காவிரி சூழ்திரு வலஞ்சுழி
வாணனை வாயாரப்
பன்னி ஆதரித்(து) ஏத்தியும் பாடியும்
வழிபடும் அதனாலே.

—திருஞானசம்பந்தர், தேவாரம்

### ( இயேசு )

3. நூல்வாய்ப் புகழ்மேல் அமர்ந்தோய்நீ
நோய்வாய் மருந்திற் கனிவோய்நீ
கோல்வாய் கோடா நீதிநெறி
கொண்டெவ் வுலகும் புரந்தோய்நீ

வேல்வாய் குருதி பாய்ந்(து) இறப்ப
மெய்கொண்டாயோ இதையறியாக்
கால்வாய் இலைபோல் தியங்கியஎன்
கருத்திற்(கு) உணர்வை உணர்த்தாயோ ?
—வீரமாமுனிவர், தேம்பாவணி

( கோவில் வழிபாடு )

4. கோவில் முழுவதும் கண்டேன்—உயர்
கோபுரம் ஏறிக்கண்டேன்
தேவாதி தேவனையான்—தோழி !
தேடியும் கண்டிலனே.
தெப்பக்குளம் கண்டேன்—நல்ல
தேரோடும் வீதிகண்டேன்.
எய்ப்பில்வைப் பாம்அவனைத்—தோழி !
ஏழையான் கண்டிலேனே.
சிற்பச் சிலைகண்டேன்—நல்ல
சித்திர வேலைகண்டேன்.
அற்புத மூர்த்தியினைத்—தோழி !
அங்கெங்கும் கண்டிலனே.
கண்ணுக் கினியகண்டு—மனத்தைக்
காட்டில் அலையவிட்டுப்
பண்ணிடும் பூசையாலே—தோழி !
பயன்ஒன்றில்லையடி.
உள்ளத்தில் உள்ளானடி—அதுநீ
உணர வேண்டுமடி.
உள்ளத்தில் காண்பாய்எனில்—கோயில்
உள்ளேயும் காண்பாயடி.
—கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

( தொழில் )

மண்ணெடுத்துக் குடங்கள்செய் வீரே
மரத்தை வெட்டி மனைசெய்கு வீரே
உண்ணக் காய்கனி தந்திடு வீரே
உழுது நன்செய்ப் பயிரிடு வீரே

எண்ணெய் பால்நெய் கொணர்ந்திடு வீரே
இழையை நூற்றுநல் ஆடைநெய் வீரே
விண்ணின் நின்றெமை வானவர் காப்பார்
மேவிப் பார்மிசை காப்பவர் நீரே.
பாட்டும் செய்யுளும் கோத்திடு வீரே
பரத நாட்டியக் கூத்திடு வீரே
காட்டும் வையப் பொருள்களின் உண்மை
கண்டு சாத்திரம் சேர்த்திடு வீரே
நாட்டி லேஅறம் கூட்டிவைப் பீரே
நாடும் இன்பங்கள் ஊட்டிவைப் பீரே
தேட்ட மின்றி விழிஎதிர் காணும்
தெய்வ மாக விளங்குவீர் நீரே.

—மகாகவி சுப்பிரமணிய பாரதியார்

அருஞ்சொற்பொருள் :

1. கதி - நற்கதி (மோட்சம்), பூ - பூமி, தடநாகம் - பெரிய பாம்பு (ஆதிசேடன்), பாயல் - படுக்கை, அரங்கம் - திருவரங்கம் (ஸ்ரீரங்கம்).

2. இரும் - பெரிய, தரளம் - முத்து, மன்னு - பொருந்திய, திருவலஞ்சுழி - ஒரு சிவதலம், வாணனை - வாழ்பவனை, பன்னி - பலகாலும் புகழ்ந்து, ஆதரித்து - அன்பு செய்து.

3. நூல் வாய் - நூல்களில், புகழ்மேல் - கூறப்படும் புகழுக்கு மேலாக, கோல் - செங்கோல், கோடா - தவறாத, புரந்தோய் - காத்தவனே, கால்வாய்-காற்றிடத்து (அகப்பட்ட), தியங்கிய-சுழன்ற.

4. எய்ப்பில் வைப்பு - சோர்விடத்துத் துணையாகிய, இனிய - இன்பமானவற்றை.

5. இழை - நூல், பார்மிசை மேவி - உலகில் பொருந்தி.

6. கோத்திடுவீர் - தொடுப்பீர், தேட்டம் - தேடுதல்.

## இலக்கணக் குறிப்பு :

1. காய் இலை - உம்மைத் தொகை, திரிவீர் - வினையாலணையும் பெயர், பூமகள் - வேற்றுமைத்தொகை, தடாகம் - உரிச்சொற்றொடர்.

2. செய்தனை - முன்னிலை ஒருமை வினைமுற்று, நல்வினை - பண்புத்தொகை.

3. வாய் - ஏழாம் வேற்றுமை உருபு, கோடா - ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

4. கண்டிலன் - தன்மை ஒருமை எதிர்மறை வினைமுற்று, இனிய - குறிப்பு வினையாலணையும் பெயர்.

5. காய் கனி - உம்மைத்தொகை, நன்செய் - பண்புத்தொகை, எண்ணெய் பால் நெய் - உம்மைத்தொகை.

6. வையப் பொருள்கள் - ஏழனுருபும் பயனும் உடன் தொக்க தொகை, தேட்டம் - தொழிற்பெயர்.

## கேள்விகள் :

1. பரிபாடலில் மதுரை எவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது?
2. சீட்டுக் கவியில் குதிரையைக் குறிக்க வந்துள்ள சொற்கள் எவை?
3. திருமாலும் கைக்கடிகாரமும் எவ்வாறு ஒக்கும்?
4. சொக்கநாதப் புலவர் முருகனை வேண்டுவது யாது?
5. திருவாசகம், நான்மறை — இவைகளுக்குள்ள வேற்றுமை என்ன?
6. பிள்ளைப்பெருமாளையங்கார், யோகியர் நற்கதி அடைவதற்குக் கூறும் எளிய வழி யாது?
7. வீரமாமுனிவர் இயேசுநாதரின் பெருமையை எங்ஙனம் குறிப்பிடுகின்றார்?
8. தேசிக விநாயகம் பிள்ளை, இறைவனை நாம் காணவேண்டிய வழியை எப்படிக் காட்டுகிறார்?
9. பாரதியார் தொழிலாளரைத் தெய்வமாகக் கூறுவது ஏன்?

# உரை நடை

## 1. காப்பும் அவையடக்கமும்

[ கா. ஆ. கிருஷ்ணன். எம், ஏ. ]

தமிழ் மொழியிலுள்ள பல்வகை நூல்களிலும் முதலில் அமைந்திருப்பது "பாயிரம்" என்னும் உறுப்பாம். இது நூலுக்கு முகம் போன்றிருத்தலால் "நூன்முகம்" என்றும் பெயர் பெறும். இப்பாயிரம் இல்லாத நூல்கள் சிறப்புடையன வாகா என்பது ஆன்றோர் துணிபு.

"ஆயிர முகத்தான் அகன்ற தாயினும்
பாயிர மில்லது பனுவ லன்றே."

என்பது இலக்கணச் சூத்திரம். ஒரு மாடத்திற்குச் சித்திரமும், மாநகர்க்குக் கோபுரமும், மங்கையர்க்கு அணிகலனும் போலப் பாயிரம் நூலுக்கு அழகு பயப்பதாகும். காப்பும் அவையடக்க மும் இப்பாயிரத்துள் முதற்கண் அமைந்து விளங்கும் பகுதி யாகும்.

காப்பாவது நூலாசிரியர்கள் தாம் பாடும் நூல்கள் இடை யூறின்றி இனிது முடியும்பொருட்டுக் கடவுளை வாழ்த்தித் துதிக் கும் முதற்பாடலாகும். இக்கடவுள் வாழ்த்து, **வழிபடு கடவுள் வாழ்த்து, ஏற்புடைக் கடவுள் வாழ்த்து** என இரு வகைப்படும். வழிபடு கடவுள் வாழ்த்தாவது, குலதெய்வத்தை வாழ்த்தி வணங்குதல். எடுத்துக்காட்டாக வைணவர் திருமாலையும், சைவர் சிவபெருமானையும், சைனர் அருக தேவனையும் வாழ்த்தி வணங்குதலாம். ஏற்புடைக் கடவுள் வாழ்த்தாவது, இயற்றப் படும் நூலுக்குத் தொடர்புடைய கடவுளை ஏத்தி வணங்குதலாம். அஃதாவது பாகவதத்தில் கண்ணபிரானையும், பெரியபுராணத்தில் சிவபெருமானையும், கந்தபுராணத்தில் முருகனையும் துதித்திருப் பது போல்வதாம். சில காப்புச்செய்யுட்கள், ஏற்புடைக் கடவுள் வாழ்த்தாகவும், வழிபடு கடவுள் வாழ்த்தாகவும் அமைந்து

விடுதலுமுண்டு. வைணவராகிய வில்லிபுத்தூரார், "மன்னு மாதவன் சரிதமும் இடையிடை வழங்கும்" மகாபாரதத்துள் சருக்கந்தோறும் கண்ண பிரானைப் பற்றிக் கூறியிருப்பது இதற்குச் சான்றாகும். கடவுள் வாழ்த்தாகிய காப்பு, நூலில் பாயிரத்துள் கூறப்படுவதன்றி, நூல்களின் காண்டந்தோறும் படலந்தோறும் கூறப்படுதலும் உண்டு. கவியரசராகிய கம்பர், இராமனை "ஆதியஞ்சோதியுருவை அங்கு வைத்து, இங்குச் சக்கரவர்த்தி திருமகனாய் அவதரித்தவன்," என்று கருதியவராதலால், அவ்வுத்தம நாயகனைப்பற்றிச் சொல்லப்புக்க இராமாயணமென்னும் மாபெருங்காப்பியத்தில் அவனையே வாழ்த்தக் கருதிப் பாலகாண்டத்தில், இறைவனது இயல்புகளைச் சொல்லுகிற முறையில் மூன்று செய்யுட்களால் துதித்து அயோத்தியா காண்டத்தில் காப்பியத் தலைவனாகிய இராம பிரானே பரம்பொருள் என்று கூறி, ஆரணிய காண்டத்தில் அவனை நான்மறை முதலிய நூல்களாலும் நான்முகன் முதலிய பெரியோர்களாலும் அறிதற்கரிய உயர்ந்த பொருள் என்று பகர்ந்து, கிட்கிந்தா காண்டத்தில் அப்பெருமான் எல்லா உலகங்களையும் தன் உடலாகக் கொண்டவன் என்று வெளியிட்டு, சுந்தர காண்டத்தில் பரம்பொருளே இராமனாக அவதாரம் செய்து, இராவணன் முதலிய அரக்கர்களை அழித்தவன் என்று புலப்படுத்தி, காப்பியத்தின் பண்புகள் பலவும் காப்புச் செய்யுட்கண் அடங்குமாறு கூறிச் சென்றிருப்பது ஈண்டுக் கருதத் தக்கதாகும்.

"உலகம் யாவையுந் தாமுள வாக்கலும்
நிலைபெ றுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவ ரன்னவர்க் கேசரண் நாங்களே."

இச்செய்யுள், கம்பர் தம் இராமாயணத்துப் பாலகாண்டத்தில் உரைத்த கடவுள் வாழ்த்துச் செய்யுட்கள் மூன்றில் முதலாவதாகும். பாட்டின் பொருளாவது :— எல்லா உலகங்களையும், அவ்வுலகத்து உயிர்க்கு ஆதாரமான பொருள்களையும் தாமே படைத்தலும், அவற்றைப் பாதுகாத்தலும், அழித்தலுமாகிய இம்முத்தொழில்களையும் இடையறாத கணக்கற்ற விளை

யாட்டாக உடையவரே இறைவர், நாங்கள் அவரைச் சரணுகப் புகுந்தோம் என்பதாம். அவதார மூர்த்தியாகக் கருதிய இராமனை யும், அவன் புரிந்த படைப்பு, அளிப்பு, அழிப்புக்களையும், சிறப் பாகச் சுக்கிரீவன், வீடணன் முதலியோர்க்கு அளித்தஅடைக்கலங் களையும், கம்பர் தம் இராமாயணத்துள் ஆங்காங்குக் குறித்துச் செல்வதனை இச்செய்யுளில் ஒலிக்கும்படி செய்திருப்பது உணரத் தக்கதாம். 'மன்னுயி ரெல்லாம்தானே வருவித்து வளர்க்கும் மாயன்' என வீடணன் அடைக்கலப் படலச் செய்யுளின் கருத்து இதனுள் அமைந்திருத்தலையுங் காண்க. உயிர்த்தொகை களும் அவற்றின் கருமப் பகுதிகளும் அளவிறந்தன ஆதலால், அவை பற்றி நிகழும் விளையாட்டும் கணக்கின்றும் என்பது தோன்ற 'அலகிலா விளையாட்டு' என்றுர். படைப்பு, அளிப்பு, அழிப்புக்களை எளிதில் புரிகின்றுர் என்பார், 'விளையாட்டு' என்றுர். இத்தொழில் இடையருது நிகழ்வன என்பார், 'நீங்கலா விளையாட்டு' என்றுர்.

கம்பர்க்கு முன்னரே பெருங்கவிஞராய்த் திகழ்ந்த சேக்கிழார் என்னும் செந்தமிழ்ப் புலவர், தாம் பாடிய பெரிய புராணமென்னும் திருத்தொண்டர் புராணத்தில், பாயிரத்தில் தில்லையிலுள்ள எல்லையி லானந்தக் கூத்தப்பெருமால் துதியாகக் கூறியிருப்பது,

"உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்."

என்னும் செய்யுளாகும். "எல்லா வுலகத்தவரும் இத்தன்மையின னென்றறிந்து, சொல்லுதற்கரியவனும், மதியுலாவுகின்ற கங்கை தாங்கி சடையினையுடையவனும், அளவில்லாத சோதி உருவ மானவனும், திருச்சிற்றம்பலத்தில் ஆனந்தக் கூத்துச் செய்தருளு கின்றவனுமாகிய நடராச வள்ளலது ஒளி விரியும் சிலம்பணிந்த திருவடிகளை யாம் துதித்து வணங்குகின்றேம்.' என்பது இதன் பொருளாம். இச்செய்யுளில் உலகெலாமுணர்

தற்கரியானாகிய இறைவன் உயிர்கள் மாட்டு இரங்கித் தன்னை அவர்கள் உணர்ந்து ஓதுமாறு தானே வலிந்து உண்மை வடிவோடு பொன்னம்பலத்தில் கூத்தாடி நிற்கும் பேரருட்டன்மை அழகுறச் சித்திரிக்கப்பெற்றுள்ளது. அன்றியும் ஆசிரியர் தாம் பாடும் நூலில் கூறுதற்கு எடுத்துக்கொண்ட பொருள் திருநெறிச் செல்வர்களாகிய சிவனடியார்களது சரிதமாகையால் அதற்கேற்ப அவ்வடியார்கள் அறியாமையினின்றுல் நீங்கி மெய்ஞ், ஞானிகளாய்ச் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நால்வகைத் தொண்டினையும் ஆற்றிச் சிவப்பேறெய்திய பெருமையும் உள்ளுறையாக இக்காப்புச் செய்யுளில் பொருந்துமாறு அமைந்திருப்பது குறிக்கத்தக்க சிறப்பாகும். இப்பாட்டில் 'உலகெலாம்' என்பது தில்லைக் கூத்தப் பெருமானது வாக்கு என்பர்.

இத்தகைய தத்துவங் கடந்த பரம்பொருளாகிய கடவுள் வாழ்த்தாம் காப்புச்செய்யுளோடு அந்தணரையும், தேவரையும், அரசர்களையும், மழையையும், உலகத்தையும் வாழ்த்தும் அறுமுறை வாழ்த்தும் பாயிரத்துள் அமைந்திருத்தலும் மரபாம்.

"வாழ்க அந்தணர் வானவ ரானினம்,
வீழ்க தண்புனல், வேந்தனு மோங்குக,
ஆழ்க தீய(து), எல் லாம்அரன் நாமமே
சூழ்க, வையக மும்துயர் தீர்கவே!"

என்ற திருஞான சம்பந்தரது தேவாரப்பதிகத்தில் மேற்கூறிய அறுமுறை வாழ்த்து அமைந்திருத்தலைக் காணலாம். ஞானசம்பந்தப் பிள்ளையாரது ஒரு பதிகத்தின் முதற்பாடலாகிய இவ் வாழ்த்துப்பாடலில், சைவசமயம் ஓங்குதற்குரிய நல்லறமும், அதன் சார்பான பொருள்களும், அவற்றையெல்லாம் காக்கும் அரசனும் ஓங்க வேண்டுமென்னும் பிள்ளையாரது உட்கிடை பொதிந்திருத்தலை உய்த்துணரலாம்.

இனி, நான்முகமாகிய பாயிரத்துள் இவ்வித வாழ்த்துக்களேயன்றித் திங்களையும் ஞாயிற்றையும் போற்றித் துதிப்பதும் மரபென்று தொல்காப்பியம் கூறுகின்றது.

"கொடிநிலை கந்தழி வள்ளி யென்ற
வடுநீங்கு சிறப்பின் மன்னிய மூன்றும்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே"

என்பது தொல்காப்பியச் சூத்திரம். இதில் 'கொடிநிலை' என்றது ஞாயிற்றை. 'வள்ளி' என்றது திங்களை.

ஆசிரியர் இளங்கோவடிகள் தாமியற்றிய சிலப்பதிகாரப் பெருங்காப்பியத்தில், பாயிரமாக அமைந்த மங்கல வாழ்த்துப் பாடல் என்னும் பகுதியில், கடவுள் பற்றிக் காப்புச் செய்யுள் ஒன்றும் கூருது, மேற்காட்டிய தொல்காப்பிய நூற்பாவிற் குறிப்பிட்டபடி திங்களையும் ஞாயிற்றையும் போற்றிப் புகழ் கின்றார். சிலப்பதிகாரம், அரசுமுறை தவறின் அறம் கூற்றாகு மென்பதனையும், கற்புக்கரசிகளை உயர்ந்தோர் ஏத்துவர் என்ப தனையும், ஊழ்வினை தவருது தன் பயனை ஊட்டும் என்பதனையும் சிலம்பு காரணமாக வெளியிட எழுந்த நூலாயினும், காப்பிய வர லாற்று நிகழ்ச்சிக்கு நிலைக்களனாகிய தமிழ் நாட்டு அரசர்களாகிய மூவேந்தர்களில், சோழ மன்னர்களைப் புகார்க் கண்டத்திலும், பாண்டிய அரசர்களை மதுரைக் காண்டத்திலும், சேர வேந்தர் களை வஞ்சிக் காண்டத்திலும் பாராட்டும் உட்கோளையும் உடை யது என்பது அந்நூலை நீள ஆராய்வார்க்கு நன்கு புலனாகும். இவ் வுண்மை "முடியுடை வேந்தர் மூவர்க்கு முரியது, அடிகள் நீரே அருளுக, "என்று சாத்தனார் இளங்கோவடிகளை நோக்கிக் கூறியதால் நண்குணரலாம். புகார்க் காண்டத்தில் மங்கல வாழ்த்துப் பாடலில் வந்துள்ள திங்களையும் ஞாயிற்றையும் பற்றிய வாழ்த்தில், "சோழ மன்னரது வெண்குடை போன்று உலகத்திற்கு அளி செய்ததால் திங்களைப் போற்றுதும்," என்ற கருத்துப்படத் திங்களைச் சோழன் குடையோடு உவமித்துத் "திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும், கொங்கலர் தார்ச்சென்னி குளிர்வெண் குடைபோன்றிவ் வங்கண் உல களித்தலான்," என்றும், பொன்னி நாட்டையுடைய சோழனது ஆணைச்சக்கரம்போல, பொற்கோட்டு மேருமலையை வலம் வருதலால், ஞாயிற்றைப் போற்றுவோம் என்ற கருத்துப்பட

ஞாயிற்றைச் சோழனது ஆணைச்சக்கரத்தோடு உவமித்து "ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும், காவிரி நாடன் திகிரிபோல் பொற்கோட்டு, மேரு வலம்திரித லான்," என்றும் வாழ்த்தியிருப்பது சீரிய காப்பியப் பண்பும் எதிர்நிலை உவமை என்னும் அணி நலமும் அமைந்து விளங்குகின்றது. இதில் சோழர் பெருமையைத் தெரிவிக்குமிடத்து எதிர்நிலை உவமை அமைந்திருப்பது குறிக்கத்தக்கதாம்.

இனி அவையடக்கமென்பது பற்றி ஆராய்வோம்; அவை யடக்கம் என்பது காப்புச்செய்யுளை அடுத்துத் தொன்று தொட்டுப் புலவர்களால் பாடப்பட்டு வருவது.

"அவையடக் கியலே அரில்தபத் தெரியின்
வல்லா கூறினும் வகுத்தனர் கொண் மினென்(று)
எல்லா மாந்தர்க்கும் வழிமொழிந் தன்றே."

என்று அவையடக்கத்தின் இலக்கணத்தைத் தொல்காப்பியம்கூறு கின்றது. தம் நூலுள் பிழைகளிருப்பினும் அவற்றை அவை யோர் பொறுத்துக்கொள்ளல் வேண்டுமென்று அவையை நோக்கிப் புலவர் தம் பணிந்த மொழிகளால் அடக்கிச் சொல்லுதலே அவையடக்கமாம். இத்தகைய வணங்கிய மொழி களால் அவையோரது நாவைக் குற்றம் சொல்ல எழவிடாது அடக்குவதால் அது அவையடக்கம் எனப் பெயர் பெற்றது என்று கொள்ளல் பொருந்தும். அவையடக்கமென்பது சில தமிழ் நூல்களில் காணப்படவில்லை. இங்ஙனமாகவும், பெருங் காப்பியம் புனைந்த திருத்தக்கதேவர், சேக்கிழார், கம்பர் முதலான தமிழுக்குக் கதியான பெரும்புலர்கள் அவையடக்கம் கூறுதலைத் தவறாது மேற்கொண்டிருக்கின்றனர்.

திருத்தக்கதேவர், தாம் பாடிய சிந்தாமணியில், "பவளமும் சங்கும், முத்தும் கடலிலே பிறந்தவை. அவை பிறந்த அக் கடல், உவப்புடையதென்று சொன்னாலும், அப்பவளம் முதலிய பொருள்களைக் கைவிடுவாரில்லை, அதுபோல, மெய்ப்பொருளாலே வீடு பெறுவோமென்று கருதுகின்றவர்

எனது உவர்க்கும் தன்மையுடைய சொல் தீதாயினும், அச் சொல்லில் பொதிந்துள்ள பொருளாலே என் சொல்லை ஏற்றுக் கொள்வர்,'' என்று தம் நூலுள் கூறும் பொருட்சிறப்பைக் கொண்டு அவையோர் ஏற்றுக்கொள்வரென்று துணிந்து அதனை எடுத்துக்காட்டுவமை அணி நயம்பட,

''மூந்நீர்ப் பிறந்த பவழத்தோடு சங்கு முத்தும்
அந்நீ ருவர்க்கும் எனின்யாரவை நீக்கு கிற்பார்?
இந்நீர வென்சொற் பழுதாயினுங் கொள்ப வன்றே
பொய்ந்நீர வல்லாப் பொருளால்விண் புகுது மென்பார்?:'

என்று அவையடக்கம் கூறுகின்றார்.

இக்கருத்தே பெறக் குன்றை நகர்க் குலக்கவியாகிய சேக்கிழார் பெருமானும் தமது பெரிய புராணத்துள்,

''செப்ப லுற்ற பொருளின் சிறப்பினால்
அப்பொ ருட்குரை யாவருங் கொள்வரால்,
இப்பொ ருட்கென் னுரைசிறி தாயினும்
மெய்ப்பொ ருட்குரி யார்கொள்வர் மேன்மையால்''.

என்று அவையடக்கம் கூறியுள்ளார்.

கல்வியிற்பெரிய கம்பரோ, தமது இராமாயணத்தில் அவை யடக்கமாக அமைந்திருக்கும் செய்யுட்கள் காவியப் பண்பு மிகுதி யும் அமைந்தவைகளாகத் திகழ்கின்றன. இராமகாதையை, ஓசை யால் மிக்க பாற்கடலாகவும், அதனைப் பாடுதற்கு முன் வந்த தம் மைப் பாற்கடலை முழுவதும் நக்கிப் பருகுவதற்கு வந்த பூனையாக வும் குறிப்பிடுகின்றார். பூனைக்குப் பாலில் விருப்பந்தான்; ஆனால், பூனை ஓசையுடைய பாற்கடலை அணுகவியலுமோ? அணுகினும் நாவினால் நக்கிப் பருகிட முடியுமா? முடியாதெனினும், பாற் கடலுக்கு எதிரில் உற்றது, பாலின்பாலுள்ள ஆசையினாலாகும். இராமகாதையை யான் ஓதுதல் இயலாதெனினும், அதனை ஓதி இன்புற வேண்டுமென்னும் ஆசையால், யான் பாடுகிறே னென்கிறார். வான்மீகத்தை முதனூலாகக் கொண்டு கம்பர் தாம் இராமாயணம் பாடுவதாகக் கூறினும், தமது இராமாயணத்துள்

இராமன் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழிலையும் செய்திருத்தலை வான்மீகத்தோடு இவர் தம் இராமாயணத்தை ஒப்பு நோக்கின் நன்கறியலாம். இத்தகைய கல்விப் பெருமிதம் வாய்ந்த கம்பர், ஆன்ற அறிவு படைத்த அவையோர்க்கெதிரில், பூனையாகத் தம்மைக் குறிப்பது அவருடைய அடக்கத்தின் சிறப்பினை நன்கு புலப்படுத்துகின்றது.

''ஓசை பெற்றுயர் பாற்கட லுற்றொரு
பூசை முற்றவு நக்குபு புக்கென
ஆசை பற்றிஅ றையலுற் றேன்மற்றிக்
காசில் கொற்றத்தி ராமன் கதையரோ.''

இது கம்பர் கூறிய அவையடக்கம். இராமாயணம் படிகொண்ட சீர்த்திப் பத்தி வெள்ளப் பெருங்காப்பியமாதலால் அதற்கு ஓசை பெற்றுயர் பாற்கடலையும், அதனைப் பாடி முடிக்க இயலாதெனினும், ஆசையினால் பாடுதற்கு முற்பட்ட தமக்கு, ஆசையினால் பாற்கடல் முழுவதையும் நக்கிப் பருகுவேன் என்று புகுந்த பூனையையும் உவமையாக அமைந்திருப்பதுமிக்க பொருத்தமும் சுவையுமுடையதாகும். பாற்கடலை 'ஓசை பெற்றுயர்' என்று சிறப்பித்ததனால், பூனை அதனை அணுகுதலும் அரிது என்பதாயிற்று. 'ஆசை பற்றி அறையலுற்றேன்' என்றதனால் இந்நூல் ஒருவர் பாடுவிக்கத் தாம் பாடியது அன்று என்பதனையும் உணர்த்தினார். இராமன் தன்னைப் பகைத்தார்க்கும் அருள் செய்யும் ஒப்பற்ற தனிவீரனாதலால் காசில் கொற்றத்து இராமன் எனப்பட்டான். இராமனது காசில் கொற்றத்தைக்கம்பர், யுத்த காண்டத்தில் முதல் நாள் போரில் இராவணன் தன் தேரையும் படையையுமிழந்து தரையில் தனியனாய் நின்ற போது, ''இன்று போய்ப் போர்க்கு நாளை வாவென நல்கினன் நாகிளங் கமுகின், வாளை தாவுறு கோசல நாடுடை வள்ளல்,'' என்று குறித்துள்ளமை ஈண்டுக் கருதத்தக்கது. ''பேராண்மை என்பதறுகண் ஒன்று உற்றக்கால், ஊராண்மைமற்றதன் எஃகு'' என்று நாயனார் கூறிய பேராண்மையின் இலக்கணத்தை விளக்க வந்த பரிமேலழகரும், இச்செய்தியையே எடுத்துக்காட்டாகக் கூறுகிறார்.

தமிழ் மொழியில் யாப்பருங்கலக்காரிகையில் கூறியிருக்கும் அவையடக்கச் செய்யுளொன்றும் ஈண்டுக் கருத்தத்தக்கதாகும். யாப்பிலக்கணம் செய்த அமிதசாகரர் என்னும் புலவர், அந்நூலில்

"சுருக்கமில் கேள்வித் துகள்தீர் புலவர்முன் யான் மொழிந்த
பருப்பொருள் தானும் விழுப்பொரு ளாம் : பனி மாலிமயப்
பொருப்பகஞ் சேர்ந்தபொல் லாக்கருங் காக்கையும் பொன்னிறமாய்
இருக்குமென் றிவ்வா றுரைக்குமன் றேவிவ் விருநிலமே?"

என்று அவையடக்கம் கூறுகிருர். "பரந்த நுண்ணறிவு வாய்ந்த குற்றமற்ற புலவர்களுக்கு முன்பாக யான் மொழிந்த தாழ்ந்த, பொருளும் மிகச்சிறந்த பொருளாக மாறிவிடும். எங்ஙனமெனில் குளிர்ந்த பனி சேர்ந்த பெரிய பொன் மயமான இமயமலையைச் சேர்ந்த பொல்லாத கரியகாக்கையும் பொன்னிறமாய்விடுமென்று இப்பெரிய உலகம் உரைக்குமல்லவா?" என்பது பாட்டின் பொருளாம். 'பனிமா லிமயப் பொருப்'பென்று புலவர்களைக் குறிப்பாக உருவகம் செய்தது மிகப் பொருத்தமானது. யாப்பருங் கலக்காரிகை ஆசிரியர்க்குப் புலவர் கூட்டம் பொற்கோட்டு இமய மலைத் தொடர்கள் போலக் காட்சியளிக்கின்றது. இமயமலை கங்கைபெரியாறு தோன்றுமிடமல்லவா? அதனுல் கவிப் பெருக் கிற்கு ஊற்றிடமாகிய புலவர் இமயம் ஒப்பது பொருத்தமே யாகும். அப்புலவர் முன்னிலையில் அடங்கி நின்று தம் இயல் பினைப் பணிவோடும் கூறுகின்ற ஆசிரியர், தம்மைப் 'பொல்லாக் கருங்காக்கை' என்கிருர். புலவர்கள் இமயமலையாகும் போது அமிதசாகரர் உள்ளம், கருங்காக்கையாகிறது. இவ்விரண்டிற்கு முள்ள ஏற்றத் தாழ்வு எத்துணையது?

இங்ஙனம் கற்பனை நயம் தோன்றுவாறு கவிஞர்கள் தம் பணியை வெளியிட்டு அவையடக்கம் கூறுவது தமிழ்மொழியில் தனிப்பட்ட ஒரு கலையாகவே திகழ்கிறது என்பது மேற்கூறிய எடுத்துக்காட்டுகளால் இனிது விளங்கும். இத்துணை நயமாக அவையடக்கம் கூறிய புலவர்களது நூலுட்புகுந்தால், இன்னும் எத்துணை அரும்பெருங் கருத்துக் கருவூலங்களைக் கண்டெடுக் கலாம் என்பது கூருமலே பெறப்படும்.

## அருஞ்சொற்பொருள் :

ஆயிரமுகத்தான்-ஆயிரம் விதங்களில், அகன்றது-விரிவுடையது, பனுவல் - நூல், வடு நீங்கு - குற்றமில்லாத, கண்ணிய - பொருந்துமாறு, நூற்பா - சூத்திரம், கொங்கு - தாது, சென்னி - சோழன், அரில் தப - குற்றமற்ற, வல்லா பொருந்தாதன, நக்குபு - நக்கிக் குடிப்பதற்கு, படி கொண்ட - உலகம் முழுவதும் பரவிய, கிரியை - சிவபூஜை, யோகம் - மூச்சை யடக்கி இறைவனோடு ஒன்றுபட்டிருத்தல்.

## கேள்விகள் :

1. ஒரு நூலுக்குப் பாயிரம் அல்லது நூன்முகம் ஏன் வேண்டும்?
2. கடவுள் வாழ்த்தின் இரு வகைகளை எடுத்துக்காட்டுகள் கூறிப் புலப்படுத்துக.
3. கம்பர் திருமாலைப் பரம்பொருளாகக் குறிப்பிட்டது எங்ஙனம்?
4. சேக்கிழார் கூறிய காப்புச் செய்யுளில் உணர்த்தப்படும் உண்மைகள் யாவை?
5. 'அறமுறை வாழ்த்து' என்பது என்ன? ஒருதாரணம் தருக.
6. இளங்கோவடிகள் கூறிய வாழ்த்து எத்தகையது? அது எதனை ஆதாரமாகக் கொண்டது?
7. அவையடக்கத்தின் கருத்து யாது?
8. திருத்தக்க தேவர், சேக்கிழார் - இவர்கள் கூறிய அவையடக்கத்தின் தன்மையைப் புலப்படுத்துக.
8. கம்பர் கூறிய அவையடக்கத்தின் நயத்தை விளக்குக.
10. அமிர்தசாகரர் தம்மைப் பொல்லாக் கருங்காக்கையாகக் கூறியதன் கருத்தைத் தெளிவாக்குக.

பயிற்சி :

1. பிரித்துக் காட்டுக :— ஆயிரமுகத்தான், இடையூறின்றி, அலகிலா, நிலவுலாவிய.

2. எதிர்ச்சொற்கள் கூறுக :— போற்றுதல், சீரிய, சுருக்கம், பருப்பொருள்.

---

# 2. கூலவாணிகன் சாத்தனுர்

( செந்நாப்புலவர் ஆ. கார்மேகக்கோனுர் )

கூலவாணிகன் சாத்தனுர் என்பவர் முத்தமிழ்ப் புலமையும் வித்தகக் கவித்திறனும் வாய்ந்த பண்டைக் கடைச்சங்க காலத்து நல்லிசைப் புலவர்கள் பல்லோருள் ஒருவராவர். இவரது இயற்பெயர் சாத்தனுர் என்பது. இவர் பெயர் மதுரைக் கூலவாணிகன் சாத்தனுர் எனவும், மதுரைச் சீத்தலைச் சாத்தனுர் எனவும் வழங்கும். இவர் மதுரை நகரில் கூலவாணிகம் (பல தானிய வியாபாரம்) செய்து வந்தது பற்றிக் கூலவாணிகன் சாத்தனுர் என்று கூறப்பெற்ருர். இவரைப் போன்றே, பண்டைப் புலவர் பலர் தம் புலமையை விலை செய்து பிழையாது. தத்தமக் கேற்ற தொழில்கள் புரிந்து தம் வாழ்க்கையை நடத்தி வந்தன ரென்பது பழைய தமிழ் நூல்களால் நன்கு அறியப்படுகின்றது.

இவர் சிறந்த தமிழ்ப்பற்று உடையவராதலாலும், தமிழ் மொழியில் சீரிய கலைகள் தோன்ற வேண்டுமென்ற வேட்கை யுடையவராதலாலும், தமிழ்ச் சங்கத்தில் அரங்கேற்றப்படும் நூல்களுள் பிழை காணப்படின், அந்நூலாசிரியர்களைக் குற்றம் கூறுது, 'இத்தகைய பிழைகளைக் கேட்கும்படி நேரிட்டதே!' என்று மனம் வருந்தித் தமது தலையைக் குத்திக்கொள்வாரென் றும், அதனுல் தலை புண்பட்டுச் சீயோடி இருந்தமையால் சீத்தலைச் சாத்தனுர் என்று பெயர் பெற்ருரென்றும், பின்னர்த் திருவள்ளுவர் திருக்குறளைச் சங்கத்தில் அரங்கேற்றும்போது,

அந்நூல் முழுவதையும் கேட்டு அதன் சிறப்பினை அறிந்து இன்புற இவரது தலைக்குத்து அன்றோடு தீர்ந்ததென்றும், ஒரு வரலாறு வழங்குகிறது. இவ்வரலாறு.

"சிந்திநீர்க் கண்டம் தெரிசுக்குத் தேனளாய்
மோந்தபின் யார்க்கும் தலைக்குத்தில் ;—காந்தும்
மலைக்குத்து மால்யானை வள்ளுவர்முப் பாலால்
தலைக்குத்துத் தீர்வுசாத் தற்கு"

என்ற திருவள்ளுவ மாலையிலுள்ள மருத்துவன் தாமோதரனர் பாட்டினை ஆதாரமாகக்கொண்டு எழுந்தது என்னலாம்.

மருத்துவன் தாமோதரனரது இப்பாட்டின் உண்மைக் கருத்தை ஆராய்ந்தால் சாத்தனர் திருக்குறளில் மிகுந்த ஈடுபாடுடையவர் என்பதும், அந்நூலின்பத்தால் நீண்ட நாளிருந்த அவரது தலைவலி அடியோடு மறைந்தது என்பதும் புலனுகும்.

மணிமேகலையில் "சிறைசெய் கதை"யில் மருதியென்னும் பெண்ணை நோக்கிச் சதுக்கப்பூதம் கூறும் கூற்றில் வைத்துச் சாத்தனர்,

"தெய்வம் தொழாஅள் கொழுநற் றெழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் பெருமழை யென்றவப்
பொய்யில் புலவன் பொருளுரை தேருய்."

என்று ஒரு குறட்பா முழுவதையுமே தம் பாட்டிடையில் வைத்துக் கூறியிருப்பதிலிருந்து இவ்வாசிரியருக்குத் திருவள்ளுவரிடத்தும், அவரியற்றிய திருக்குறளிடத்தும் உள்ள நன்மதிப்பு இத்தகையது என்பது நன்கு விளங்கும். இதனுள், திருவள்ளுவரைப் 'பொய்யில் புலவன்' எனவும், திருக்குறளைப் 'பொருளுரை' எனவும் ஆசிரியர் போற்றியிருக்கும் திறன் நம்மனோரால் மிகவும் போற்றற்பாலதாம்.

சங்ககாலத்து நூல்களாக உள்ளனவெல்லாம் பெரும்பாலும் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை முதலிய தனித்தனி பாடல்

களுள் தொகுப்பினுலாய தொகை நூல்களேயாகும். தமிழ்நாட்டில் காப்பியகாலத் தொடக்கமென்பது, கடைச்சங்க காலத்தின் இறுதிப்பகுதியாகிய கி. பி. 2ஆம் நூற்ருண்டு என்றே கருத வேண்டும். அக்காலத்தில் தோன்றிய பெருங்காப்பியங்கள் இளங்கோவடிகள் இயற்றிய சிலப்பதிகாரமும், நம் சாத்தனுர் இயற்றிய மணிமேகலையுமேயாம். ஐம்பெருங்காப்பியங்களுள் சிந்தாமணி, குண்டலகேசி, வளையாபதி என்பவெல்லாம் சங்க காலத்திற்குப் பிற்பட்டெழுந்த காப்பியங்களேயாம். இதனுல் சங்க காலத்தில் பெருங்காப்பிய ஆசிரியர்கள் என்ற புகழுக்குரியவர்கள் நம் சாத்தனுரும், இளங்கோவடிகளுமேயாவர்.

கண்ணகி, மதுரையில் தன் கணவன் கோவலன் கொலையுண்டு இறந்த பின்னர், வையைக்கரை வழியாகச் சென்று, செங்குன்று என்ற மலைமீதேறி, அவன் துறக்கம் புகுந்த பின்னர்ச் சேரனைக் காணுமாறு சேர நாடு சென்று, செங்குட்டுவனையும் அவன் இளவல் இளங்கோவடிகளையும் பேராற்றங்கரையில் கண்டு, கண்ணகியைப் பற்றிய வரலாற்றையெல்லாம் தாம் நேரில் கண்டபடி எடுத்துக் கூறி, இளங்கோவடிகளைச்சிலப்பதிகாரத்தை இயற்றுமாறு செய்தவரும் நம் தண்டமிழ்ப் புலவராம் சாத்தனுரேயாவர். ஆசிரியர் இளங்கோவடிகள், தாம் சிலப்பதிகாரம் இயற்றுவதற்குஇங்ஙனம் பேருதவி புரிந்த சாத்தனுரது நன்றியை மறவாது உளங்கொண்டு, சிலப்பதிகார வரலாற்ருேடு சாத்தனுரையும் இயைத்து, சிலப்பதிகார நாடக உறுப்பினருள் ஒருவராகவும் ஆக்கிவிட்டார். இளங்கோவடிகள் சாத்தனுரைத் 'தண்டமிழ்ச் சாத்தன்,' 'தண்டமிழ் ஆசான் சாத்தன்,' 'நன்னூற் புலவன்' என்றெல்லாம் அவர்பால் தமக்குள்ள நன்மதிப்புத் தோன்றத் தம் காப்பியத்துக் காட்சிக்காதையுள் புகழ்ந்துள்ளார். ஒரு காப்பிய ஆசிரியர், மற்ருெரு நாடகக் காப்பியத்தில் உயரிய நாடக உறுப்பினருள் ஒருவராய் இடம் பெறும் இத்தகைய பேறும் பெருமையும் பெற்ற புலவர் வேறு இலரென்றே சொல்லலாம்.

சாத்தனுர் இயற்றிய மணிமேகலையைஆராய்ந்தால் இவரைப் போல அக்காலத்து வட மொழிதென்மொழிகளிலுள்ள இலக்கண

இலக்கியங்களிலும் சமயம் தருக்கம் பௌதிகம் முதலாகிய கலைகளிலும், ஓவியம் முதலிய நுண்கலைகளிலும் தேர்ச்சியும், அவற்றில் ஆழ்ந்த பயிற்சியும் உடைய புலவர் ஒருவரும் இலர் என்றே சொல்லலாம். இது பற்றி இவரை நாம் பல்கலைக்குரிசில் என்றே பகரலாம்.

சாத்தனார் இயற்றிய இம்மணிமேகலை, அக்காலத்தில் உடன் எழுந்த சிலப்பதிகாரத்தோடு கதைப்போக்கில் தொடர்புடையதாகும். ஆசிரியர் இளங்கோவடிகள். சாத்தனாரைத் தலைமையாகக் கொண்ட அவையில் தம் சிலப்பதிகாரக் காப்பியத்தை அரங்கேற்றினாரென்றும், சாத்தனார் தாம் பாடிய மணிமேகலையை இளங்கோவடிகளைத் தலைமையாகக்கொண்ட அவையில் அரங்கேற்றினாரென்றும், இவ்விருகாப்பியங்களின் பதிகங்கள் வெளியிடுகின்றன. இம்மணிமேகலை முப்பது காதைகளைக் கொண்டது.

கதைபொதி பாட்டுக் கதையாகும் ஒவ்வொரு காதையும் ஆசிரியப்பாவால் இயன்றது; மணிமேகலை சொற்பொருள் நுட்பம் வாய்ந்தது என்பதனைப் பிற்காலத்து நூலாசிரியர் பலர், தம் பாடல்களுள் குறிப்பு வகையினாலும், சிலேடை முகத்தாலும் பாராட்டிச் சென்றுள்ளார்கள். சிவப்பிரகாச சுவாமிகள் தமது 'வெங்கைக் கோவை'யில்' 'எழுதலரிது' என்னும் துறையில் 'மந்தா கினியணி வேணிப்பிரான் வேங்கை மன்னவனே, கொந்தார், சூழல்மணி மேகலை நூல்நுட்பம் கொள்வதெங்ஙன்?'' எனவும், ''அம்பிகாபதி கோவை'', ஆசிரியர் ''மாதவி பெற்ற மணிமேகலை நம்மை வாழ்விப்பதே'' எனவும் இந்நூலைப் பாராட்டிக் கூறியுள்ளார்கள்.

இக்காப்பியம் மலை, கடல், தீவு, வனம், நாடு, நகர், ஆறு முதலியவற்றையும் பிறவற்றையும் நேரில் கண்டறிந்தாற்போலப் படிப்பவருடைய உள்ளத்தில் நன்கு பதிந்து புலப்படுமாறு, தன்மை நவிற்சி முதலிய அணிகளோடு, கற்போர் நெஞ்சம் காமுறும்படி வெளியிடுகின்றது. பண்டைத் தமிழ் மக்களது நடை, உடை, பாவனை, நாகரிகங்களையம். கலைப்பண்புகளையும், சில நகரங்கள், தீவுகள் மலைகள், வனங்கள், தோட்டங்கள்,

அறச்சாலைகள், மன்றங்கள் முதலியவற்றையும், அவை இன்ன இன்ன வடிவமாய் இருந்தனவென்பதையும், இன்ன இன்ன சமயங்கள் இன்ன இன்ன இடங்களில் பரவிருந்தனவென்பதையும், இச்சமயங்களின் இயல்புகளையும், சில அரசர், முனிவர் முதலியோரது வரலாறுகளையும், தமிழ் நாட்டோடு பிறநாடுகளுக்கிருந்த தொடர்பினையும் மணிமேகலை நூலால் நமக்கு நன்கு விளங்க வைத்துள்ளார் நம் தண்டமிழ்ப் புலவர். காவிரிப்பூம்பட்டினம், வஞ்சி மாநகர், காஞ்சிபுரம் என்னும் பெரிய நகரங்களைப்பற்றி, மணிமேகலையில் விரித்துக் கூறியுள்ள பகுதிகள், அக்காலத்துத் தமிழ் மக்களது நாகரிகச் சிறப்பையும், கைத்தொழில் மேம்பாட்டையும், வாழ்க்கையின் உயர்தரத்தையும், நகரங்களின் அமைப்பையும் நமக்கு நன்கு விளக்கத்தக்கவையாய் அமைந்துள்ளன.

இம்மணிமேகலையில் விரித்துணர்த்தப்படும் கதைச் சுருக்கமாவது:—

மதுரையில் கோவலன் கொலையுண்டு இறந்தபின், அவனது காதற்பரத்தை மாதவி துறவுபூண்டு, புத்த சங்கத்தைச் சார்ந்திருந்ததும், அவளுடன் இருந்த அவள் மகள் மணிமேகலை புத்த பீடிகையிலிடுவதற்கு மலர் கொய்யத் தோழி சுதமதியோடு உவவனம் சென்றதும், அவளைக் கவர்வதற்கு வந்த உதய குமாரனிடத்தினின்றும் தப்புவிக்க மணிமேகலையை மணிமேகலா தெய்வம் மணிபல்லவத் தீவிற்குக் கொண்டு சென்றதும், பின்பு அவள் அங்குள்ள புத்த பீடிகையைக் கண்டு தன் பழம்பிறப்புணர்ந்து அமுதசுரபி என்னும் அட்சயபாத்திரத்தைக் கோமுகிப்பொய்கையினின்றும் அடைந்து, காவிரிப்பூம்பட்டினம் வந்து பசித்த உயிர்க்கெல்லாம் உணவளித்ததும், காஞ்சி நகரம் புகுந்து அங்குப் புத்த சமயப் பெரியார் அறவணடிகளைக் கண்டு, அவரால் புத்த தரும உபதேசம் பெற்று, அக்காஞ்சி மாநகரிலேயே 'பவத்திறம் அறுக' என்று தவஞ் செய்து கொண்டிருந்ததும் ஆகிய பல செய்திகளேயாம்.

ஆசிரியர் கூலவாணிகன் சாத்தனுர். இம்மணிமேகலைக் காப்பியத்தை இயற்றியது மணிமேகலையின் சரிதத்தை மட்டுமே மக்களுக்குத் தெரிவிக்க வேண்டுமென்பது பற்றியன்று: அவளது வரலாறு தழுவிப் புத்த தருமத்தை விரித்துரைத்து அக் கொள்கைகளை நாட்டில் பரவச்செய்ய வேண்டும் என்பதே அவரது முதற்குறிக்கோளாகும். சாத்தனுர் புத்த பெருமானிடத்தும், அவரது கொள்கைகள் மீதும் சிறந்த பற்றுடையவர். இதனைக் காப்பியத்துள் அவர் ஆங்காங்குப் புத்த பீடிகையையும் அவர் அறிவுறுத்திய அறநெறிகளையும் காப்பிய உறுப்பினர்களின் கூற்றில் வைத்து மனங்கரைந்து கூறிச் செல்வதனுல் நாம் நன்கு தெளியலாம். அன்றியும், பௌத்த சமயக் கோட்பாடுகளும், பல அறங்களும் மணிமேகலையுள் அவ்வவ்விடங்களில் மிக நுணுக்கமாய் உரைக்கப்பெற்றுள்ளன. ஒருவன் மன மொழி மெய்களால் தூயனுகி, எல்லா உயிர்களிடத்தும் எப்பொழுதும் அன்பும் அருளும் உடையவனுய்த் தனக்கென வாழாது, பிறர்க்கென்றே வாழ வேண்டுமென்பதும், வறுமையால் வருந்தி உழலும் மக்களுக்கு உண்டியும் உடையும் உறையுளும் உதவுவதே உயர்ந்த அறம் என்பதும் இம்மணிமேகலையுள் முதற்பொருளாக ஆங்காங்கு வற்புறுத்தப்பட்டிருக்கின்றன. இதுவே புத்த தேவரது உயரிய அறிவுரையாகும். இக்கருத்துக்களையெல்லாம் ஆசிரியர் சாத்தனுர்.

''அரசர் தாமே அருளறம் பூண்டால்
பொருளும் உண்டோ பிறர்குறை தீர்த்தற்(கு)
அறனெனப் படுவது யாதெனக் கேட்பின்
மறவா(து)இதுகேள், மன்னுயிர்க் கெல்லாம்
உண்டியும் உடையும் உறையுளும் அல்லது
கண்ட(து) இல்''

எனவும்,

''மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே.''

எனவும் உரைத்துச் செல்லுகின்ருர்,

கௌதம புத்தருக்கு அவர் போதி மரத்தின் அடியி லிருக்குங்கால் பேரறிவு பிறந்த போது, அவர் கோட்பாட்டிற்கு அடிப்படையாகிய நான்கு வாய்மைகள் அவர் மனத்துள் புகுந்தனவென்றும், அவற்றின் மேலேதான் புத்த தருமமாகிய மாளிகை கட்டப்பெற்றது என்றும் கூறுவர். அந்நான்கு வாய்மைகளையும் ஐம்பேரொழுக்கங்களையும் சாத்தனுர் தம் காப்பியத்துள் பலவிடங்களிற் சுட்டிச் சொல்கின்றார்.

துன்பம் தோற்றம் பற்றே காரணம்
இன்பம் வீடே பற்றிலி காரணம்
ஒன்றிய உரையே வாய்மைநான் காவது.''

என்று நான்கு வாய்மைகளையும்,

''கள்ளும் பொய்யும் காமமுங் கொலையும்
உள்ளக் களவுமென்(று) உரவோர் துறந்தவை''

என்ற ஐவகை ஒழுக்கங்களையும் ஆசிரியர் அமைதியுறக் கூறி யுள்ளார். புத்த தேவரைப் பற்றிச் சாத்தனுர் குறிப்பிடும் செய்யுட்பகுதிகள், அவரது சிறந்த பௌத்த சமயப் பற்றினை நன்கு கட்டுவனவாய் அமைந்துள்ளன.

''அருளும் அன்பும் ஆருயிர் ஓம்பும்
ஒருபெரும் பூட்கையும் ஒழியா நோன்பின்
பகவன்''

எனவும்,

''ஆதி முதல்வன் அறவாழி ஆள்வோன்''

எனவும்,

''எங்கோன் இயல்குணன் ஏதமில் குணப்பொருள்
தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளன்
அறக்கதிர் ஆழி திறப்பட உருட்டிக்
காமற் கடந்த வாமன்''

எனவும் பலவாறு புத்த தேவரது தூய குணங்களையும், உயிர்க ளிடத்து அவருக்குள்ள அருள் நீர்மையையும், அவர் உலகிடை

உருட்டிய அறவாழியின் தகைமையையும் மிக மனங்கரைந்து வெளியிட்டுள்ளார்.

ஒரு சில கவிஞர்கள் இயற்கை வனப்புகளையே சிறப்பித்துப் பாடுவதில் வல்லுநராயிருக்க, ஒரு சில கவிஞர்கள் மாந்தர் தம் மனத்தியல்பினையே விரித்துரைக்கும் வன்மையுடையவர்களா யிருக்க, சாத்தனரோ இவ்விருவகைக் கவித்திறனும் படைத்தவ ராகக் காணப்படுகிருர். அவற்றுள் அவரது இயற்கை வருண னைக்கு எடுத்துக்காட்டாகப் 'பளிக்கறை புக்க காதை'யிலிருந்து சில காண்போம்:

சுதமதியும் மணிமேகலையும் மலர் கொய்யச் சென்ற போது சோலையின் இயல்பினையும், பொய்கையின் மாட்சியினை யும், சுதமதி மணிமேகலைக்கு எடுத்துக் கூறுவதாகச் சாத்தனர் வருணிக்கும் பகுதி மிகவும் இயற்கை இன்பம் பயப்பதாக அமைந் துள்ளது. சுதமதி கூறுகிருள்.

"மணிமேகலாய்! இச்சோலையைப்பார். உலகத்துள்ள இரு ளெல்லாம் கதிரவன் ஒளிக்கு அஞ்சி ஓடி வந்து இச்சோலையுள் புகுந்து ஒளிந்துகொண்டிருக்கின்றதோ? எவ்வளவு செறிவாக இருக்கின்றது இச்சோலை! தும்பிகள் இச்சோலையில் வேய்ங் குழல்போல இன்னிசையெழுப்ப, வண்டுகள் தேனையுண்டு யாழோசைபோல ஒலித்துக்கொண்டிருக்கின்றன. இச் சோலையை அரங்கமாகக்கொண்டு ஒரு மயில் தனது மணிக் கலாபத்தை விரித்து ஆடிக்கொண்டிருக்க, ஒரு மந்தி அதனைக் கண்டு கண்டு மகிழ்வுகொண்டு இருப்பதைப் பார்! இச்சோலை நடுவணுள்ள இந்தப் பொய்கையைக் கண்ணுறுவாம்! தாமரை மலர்கள் பல பூத்துத் தண்ணீர் அளவில் மலர்ந்திருக்க, ஒரு செந்தாமரை மலர் மாத்திரம் உயர்ந்து மலர்ந்து இருப்பதையும் அதை அரசிருக்கையாகக்கொண்டு ஓர் அரசவன்னம் வீற்றிருப்ப தையும் பார்! அதற்கு நேரே பொய்கைக் கரையில், ஒரு மயில் ஆடுவதையும், அவ்வாட்டத்திற்குத் தக' மரக் கொம்பிலே குயில் கள் இருந்து கூவிப் பாடுவதையும் பார். அப்பாடலுக்கும்

ஆடலுக்கும் பொருந்தச் சம்பங்கோழி முழவு ஓசை போல முழங்குவதையும் பார். என்னே இக்காட்சி! இதுவன்றோ இயற்கை நாடக மாட்சி!

"மேகலாய்! இதனைப் பார்த்தனையா? இப்பொய்கைக் கரையில் மலர்ந்திருக்கும் தாமரைப்பூவின் மேல் கரைமீதுள்ள ஒரு தாழை தன் மலரின் மகரந்தப்பொடியைக் காற்ருல் அசைந்து உதிர்த்து அதன் ஒளியை மழுங்கச் செய்திருப்பதைப் பார். இது நீ வீதி வழியாக வரும்போது தூசுபடிந்து ஒளி மழுங்கி இருக்கின்ற உன் முகம்போல இருக்கின்றதல்லவா? ஏ! மாதவி மகவே! உன் அகங்கை போல மலர்ந்திருக்கும் இச்செந்தாமரை மலரில், ஒரு கயல் மீன் துள்ளி விழுந்து பிறழ, அதைக்கண்டு ஒரு மீன் கொத்திப் பறவை பாய்ந்து தூக்கவும், அம்மீன் துள்ளி விழுந்து நீரிலே மூழ்கித் தப்பித்துக் கொண்டது. பாவம்! மணிச்சிரல் (மீன் கொத்தி) இரைபெருது வருந்திப் பறந்து போவதைப்பார்!"

இவ்வாறெல்லாம் இயற்கை வனப்பறியா மணிமேகலைக்குச் சுதமதி காட்டுவதாக நமக்கு இவ்வாசிரியர் ஆசிரியப்பாவில் வரைந்து காட்டும் இக்காவிய ஓவியம் எவ்வளவு இன்பம் பயப்பதாக இருக்கின்றது!

மலர் வனம் புக்க காதையுள் வரும் இவ்வியற்கை வருணனையில் தாமரை மலரிடை வீழ்ந்த கயல் மீன் தன்னைத் தூக்குதற்குப் பாய்ந்த மீன்கொத்தி வாய்ப்படாது, தண்ணீரில் புகுந்து ஒளித்துக்கொண்டது என்று ஆசிரியர் உரைக்கும் பகுதியில் இப்பளிக்கறை புக்க காதையிலேயே மேல் நிகழ்வதாகக் கூறியுள்ள உதயகுமாரன் மணிமேகலையைக் கவர்வதற்கு வந்தபோது அவன் வயப்படாது, மணிமேகலை பளிக்கறையில் புகுந்து ஒளித்துக்கொண்ட செய்தி உள்ளுறையாய் அமையுமாறு ஆசிரியர் அமைத்திருப்பது அவரது கவித் திறத்தை நன்கு காட்டுவதாகும்.




சாத்தனுர் தம் காப்பியத்துள் மணிமேகலை இராசமாதேவிக்கும், நாகநாட்டரசன் புண்ணிசராசனுக்கும் அறிவுறுத்தியதாகக்

கூறும் அறிவுரைகள் மணிமேகலையினது தூய துறவின் திண்மையையும், அவள் உலகத்திற்கே ஒரு மாபெரு ஞான ஆசிரியையாக விளங்கிய உண்மையையும் நன்கு காட்டா நிற்கும். மணிமேகலை உள்ளத்தழகிற் சிறந்தவள் போலவே உடல் எழில் நலத்திலும் மிகச் சிறந்தவள் என்பதனை வெளியிடு தற்கு மலர்வனம் புக்க காதையில் ஆசிரியர் மேற்கொண் டிருக்குந் திறன் மிகவும் பாராட்டற்குரியது.

மக்களுடைய அமைதியான வாழ்க்கைக்கும், இலக்கிய இன்பத்திற்கும் சிறந்த கருவியாகத் திகழும் இம்மாபெருங் காப்பியம் சில நூற்ருண்டுகள் (19ஆம் நூற்ருண்டுவரை) தமிழ கத்தில் விளக்கம் பெருது மறைந்து கிடந்தது மிகவும் வருந்துதற் குரியதாம். இவ்வாறு இந்நூல் வழக்கின்றி மறைந்து கிடந்த தற்குக் காரணம் சமயக் காழ்ப்புப் பூண்ட சில பெரியார்களது மனப்பான்மையே என்று சொன்னல் அது தவருகாது. எனினும் "சத்துடைய வித்து எப்படியும் முளைத்துத் தழைத்துச் செழிக் கும்" அன்றோ? இம்மணிமேகலை, மாபெரும்புலவர் உ. வே. சாமிநாதையரவர்களுடைய அரும்பெரு முயற்சியினல் அச்சு வாகனமேறித் தமிழ் உலக முழுவதும் உலவி வருகின்றது. அன்றியும், இன்று இஃது ஒளித் திரையிலும் நிலவி வருகின்றது. சாத்தனர் தம் மணிமேகலையுள் ஆங்காங்கு வரைந்து செல்லும் புத்தபிரானுடைய தருமசக்கரம் (அறவாழி) இப்போது நம் நாட் டுச் சுதந்தர மூவண்ணக் கொடியில் நடு நாயகமாய் அமைந்து திகழ்கின்றது. அதனை இப்போது நம் நாடு கண்டு மகிழ்கின்றது

## அருஞ்சொற்பொருள்:

வித்தகம் - ஞானம் சிந்திநீர்க்கண்டம் - ஒரு மருந்துப் பொருள் : தெறி - நசுக்கிய, அளாய் - கலந்து, காந்தும் - கோபிக்கும், துறக்கம் - இன்பவுலகம் (சுவர்க்கம்), மந்தாகினி - கங்கை, பவத்திறம் - பிறவித்தன்மை, மண்திணி - மண் நெருங்கி யுள்ள, பூட்கை - கொள்கை, இயல்குணன் - இயல்பான குணங் களையுடையவன், உவவனம் - பூஞ்சோலை.

கேள்விகள்:

1. சித்தலைச்சாத்தனார் என்று புலவருக்குப் பெயர் உண்டாகக் காரணம் என்ன?
2. சாத்தனார் எவ்வாறெல்லாம் சிறப்பிக்கப்படுகிறார்?
3. மணிமேகலை நூலைப்பற்றி யார் யார் எங்ஙனம் பாராட்டியுள்ளனர்?
4. இந்நூலை ஆசிரியர் இயற்றக் காரணம் என்ன?
5. ஆசிரியர் தம் நூலில் புத்தபிரானை எவ்வாறு புகழ்ந்து கூறியுள்ளார்?
6. மணிமேகலையில் வந்துள்ள ஓர் இயற்கைக் காட்சியை அழகுபட வருணிக்க.
7. மணிமேகலை செய்த அறச்செயல்கள் எவை?

பயிற்சி:

மணிமேகலை நூலின் பெருமையைப் பற்றி 25 வரிகளில் சுருக்கி ஒரு கட்டுரை வரைக.

---

# 3. புகழ்த்துறவு

(நாடகம்)

[டாக்டர் வ. சுப. மாணிக்கம், M. A., M. O. L., Ph. D.]

களம்: காடு

காலம்: நண்பகல்

கூற்று: வல்வில் ஓரி, வன்பரணர், பண்ணன் முதலாயவர்.

[தொலைவிலே மரச்செறிவுக்கிடையே வல்விலோரி வருகிறான். தலையில் திருமணி. முதுகின் வலப்புறத்தில் அம்புறுத் தூணி,

இடத் தோளில் வில், மார்பில் அரச சின்னங்கள், காலில் குருதி தோய்ந்த கழல் என்றின்ன கோலமுடையவனை வன்பரணர் காண்கிறார்.]

**வன்பரணர்:** (வாய் பொத்தி) ஆரவாரஞ் செய்யாதீர்கள்! அக்கொலைஞன் இவனேதான். (மூக்கில் சுட்டு விரல் சேர்த்தி) இவன் யாராய் இருக்கலாம்! முன்பின் அறிந்த முகமாகவுந் தெரியவில்லை! கொலைஞன் என்பதில் ஐயமில்லை. ஒருகால் ஊன் விலை வாணிகத்திற்குக் கொல்பவனாக இருக்கலாம். (சிறிது தயங்கி) அப்படியானால் யானையையும் புலியையும் ஏன் கொல்லுகின்றான்?

[ஓரி நெருங்கி வருகிறான். பல அணிகலன்களை வன்பரணர் பார்க்கிறார்.]

**பண்ணன்:** ஐயா, யானையின் ஊனைப் புலிக்கு விற்பதற்கும், துறவிகட்குப் புலித்தோலை விற்பதற்கும் கொன்றிருப்பான்.

**வன்பரணர்:** நான் நினைத்தது பிசகு. இவன் சொல்லியதும் அப்படியே. இவன் ஆயிர நரம்பியயாழ் போலும் பெருஞ் செல்வமுடையவன். மார்பிற்கிடக்கும் முத்தாரம் ஒன்றே இவன் திருமகள் நோக்குடையவன் என்று காட்டுகின்றதே கையில் மணிக்கடகங்கள் உடைய இவனோ இறைச்சி விற்கும் பாசவன்? (ஓரி அண்மையில் வர, அரச சின்னங்கள் விளங்குகின்றன.) யான் நினைத்த ஒவ்வொன்றும் பிழை, இவன் செல்வன் மட்டும் அல்லன்; ஓர் அரசன்; வேட்டுவ அரசன். வேட்டையாடி உயிர்களைக் கொல்லும் மறம் இவனுக்கு அறமேயாதலின், கொலைஞனும் அல்லன்; விலைஞனுமல்லன்; கொடியோனுமல்லன். விளங்காதன எல்லாம் விளங்கிவிட்டன. கொடையாளனோ அல்லனோ என்பது இன்னஞ்சிறிது போழ்தில் அறியலாம், (பாணர்களைப் பார்த்து) தவக்கம் வேண்டா; ஆகுளி தொடுமின்: பண்ணை யாழிற்பாடுமின், (விறலியரைப் பார்த்து) வண்ணம் பாடுதிர், (விரைவாக) நம் பாண் தொழிலுக்கு அடையாளமான அந்தக் கரிய கோல் எங்கே? என் கையிற் கொடுப்பீர்.

[வல்வில் ஓரி அண்மையில் வரவே, எல்லாருந் தொழுதெழுகிருர்கள். ஓரி இருந்து பாடும்படி கைகவித்து, ஒவ்வொருவரையும் இருக்கும்படி செய்கிருன்.]

**வன்பரணர்:** (கை கூப்பி) அரசரே, ஒன்று சொல்ல அருளல் வேண்டும்.

**ஓரி:** நீங்கள் சொல்ல விழைவது இதுவெனத் தெரிந்து கொண்டேன். மிகப்பசியாக இருக்கிறீர்கள், (மான் தசைத் துண்டை நெருப்பில் வாட்டிக் கொண்டு வந்து) பாணர் தலைவரே, எல்லோரும் இதைத் தின்று பசியாறுங்கள்.

**வன்பரணர்:** (தின்று கொண்டே) மன்னரே, யான் சொல்ல நினைத்திருப்பது வேறு.

**ஓரி:** உங்கள் உள்ளத்தை என்னுள்ளத்தால் அறிந்து கொண்டேன், நீடு பசித்திருப்பதால், மான் சூட்டினைத் தின்றவுடன் விக்குள் உண்டாகின்றது (ஆவின் நெய் போன்ற தேன் அடைத்த புட்டில்களை முன்னர் வைத்து) இந்நறவினைச் சிறிது சிறிது குடித்துக்கொண்டு, மான் குட்டிறைச்சியை அருந்துங்கள்; அழிபசி நீங்கும்.

**வன்பரணர்:** (நறவையும் இறைச்சியையும் மாறி மாறி உண்டு) கோவே, நாங்கள் நாடு நாடாக, ஊர் ஊராகப் போய் வரும் நாடோடிகள். ஓரிடத்திலாவது உங்களுக்கு ஒப்பாகச் சொல்லத் தக்க வேட்டுவரைக் கண்டதில்லை; உண்டென்று சொல்லக் கேட்டதுமில்லை. நீங்களே மற்றைய வேட்டுவர்களுக்கு உவமையாகத் தக்கவர்கள். சேர வேந்தன் தனக்குப் பொறியாக வைத்திருப்பது உங்கள் கை வல்வில் அன்ருே? (அம்பைக் கையில் எடுத்துக் கொண்டு) வரிசையாக நிறுத்தினல் சாய்கோணம் என்னும்படி, யானை செவி நுழைந்து, புலி வாய் பிளந்து, மானுடல் வழியாகப் பாய்ந்து, பன்றியின் குடர் சரித்து, உடும்புத் தலையில் செங்கோலாக நின்றது இவ்வம்பு என்ருல், புகழ்ச்சிக்குரியது முனை மழுங்கிய இவ்வம்போ, அன்றி எய்த பெரியவன் வலிமையோ?

**ஓரி:** ஐயப்படாத பொருளில் ஐயப்படுகின்றீர். உயிரில்லாப் பொருளாகிய அம்புக்குப் புகழ், பழி என்ற வினைப்பயன் உண்டோ? வினையில் பொருள்களைக் கருவியாகக் கொண்டு வினைசெய்தவனே அவற்றை உய்தற்குரியவன். பல்லுயிர்களைப் பதறக்கொன்றது அறநூல்கள் பழிக்குஞ் செயல்; ஆதலின், எய்தவன் பழியுடையவன் என்று சொல்ல ஏனோ தயக்கம்? அப்பழிச் சாவுகளை நேரிற்கண்டு, இறந்த உயிர்களிடம் இரக்கமும், இரவாத அவனிடம் கண்ணோட்டமும் கொள்ளும் நீங்களே புகழ்ச்சிக்குரியவர்கள். (எத்தனையோ உள்ளத்துக்கொண்டு இங்ஙனம் புறம்பே தன்னைப் புகழ்கிறார்கள் என்று எண்ணியவனாய்) பெரும்பாணரே, பிறரிடம் இரந்து இரந்து எவ்வளவு நாள்தான் காய்பசியைத் தீர்த்துக் கொள்வீர்கள்? வெயிலில் அலைந்து கால்களுஞ் செருப்புப்போலத் தேய்ந்து விட்டன! கண்களும்ஒளி மழுங்கின! இளமையிலேயே முதுமையடைந்து விட்டீர்கள்! எவ்வுயிரும் விரும்பும் இசைக் கல்வியுடைமையினாலே, உயிரில் வறுமையும் உங்களை விரும்பி உயிர் பெற்றிருக்கின்றது. நாங்கள் வறியராயினும், உங்களை வண்மைச் செல்வராக்குவதே எங்கள் தொழில்.

[மார்பிற்கிடந்த முத்தாரத்தைக்கழற்றி இவர்மார்பிற்போடுகிறான்; மற்றைப் பாணர்கள் அது தங்கள் கழுத்திடைக் கிடப்பதே போல மகிழ்கிறார்கள்.]

**வன்பரணர்:** வள்ளலே, இந்த அம்பை உடையவரிடஞ் சேர்ப்பிக்க வேண்டுமென்றுதான் எடுத்துக்கொண்டு வந்தோம். இதனை உடைய வல்வில் வேட்டுவர் நீவிரேயாவீர். உங்களைக் காணுமுன், இதனை எய்தாரை வேறு விதமாக எண்ணியிருந்தோம். இப்பொழுதோ, கொடையிற் சிறந்த உங்களைக் கண்டு, வேறு விதமாக எண்ணுகிறோம். ஆனால், இன்னும் ஓர் ஐயம்.

**ஓரி:** எம் புகழ்ச்சிக்கு உம் வறுமையே காரணம். ஐயம் நீர் கேட்பது இயல்புதானே! மனம் உவக்கும், முகம் மலரும் பொருள் தர நினைப்பினும், இவ்வமயம் காட்டில் உறைதலின்,

வேறு கலன்கள் கொடுத்தற்கில்லாத வறியவனுயிருக்கிறேன். (கையிலணிந்த இருமணிக்கடகங்களையும் கொடுத்து இன்னுந்தர விரும்பினன்.)

**வன்பரணர்:** (பெருமகிழ்வோடு) என் ஐயம் நீங்கியது. மறத்தினுங் கொடையே விஞ்சியது என்ற தெளிவு பிறந்தது. கொடையரசே, உங்கள் குடை நிழலிற்பட்ட நாடும், இரவலர் புரவலராகிய உங்கள் பெயரும் எங்கள் செவி குளிர, மனம் இனிப்பச் சொல்லியருள்க.

[இதனைச் செவி கைப்பக் கேட்ட ஓரி, தன் புகழ் கேட்க நாணி, ஒன்றுஞ் சொல்லாது மறைந்து விடுகிறான்.]

**வன்பரணர்:** (அவன் சென்ற திசை நோக்கித் தொழுது) என்னுள்ளம் நிறையக், கண்மறையச் சென்ற இந்நம்பி வாழிய! ஆஉராய்வதற்கு நடுங்கல்லினுந் தம் பெயர் பொறிக்கும் மக்களுடைய இவ்வுலகத்து, இக்குரிசில் போல்வார் அரியரோ அரியர்! புகழ் வாங்கப் பொருள் விற்கும் வாணிக வள்ளல் இவரல்லர். மறுமையில் நற்பிறவியை அல்லது பிறவாமையைத் தரவல்லது என்று இம்மையில் கொடை செய்யும் வினையுடையாருமல்லர். குடி காத்தல் கருதி மகனுக்குத் தன் பொருளை விடுந் தந்தையுமல்லர், முதுமையிற் காப்பான் மகனென வளர்க்குந் தாயுமல்லர். வெயிலிற் காய்ந்தும். மழையில் நனைந்தும், பனியில் நடுங்கியும், வாடையில் உலர்ந்தும், பசி தணிக்குமளவே கூழைக் குடித்து, மானங் காக்குமளவே கோவணம் அணிந்து, மர முதலா அரசனீரு எல்லா உயிர்க்கும் நினைப்பின்றி உழைக்கும் உழவனே இச்செம்மலுக்கு ஒப்பாவான். கல்லா மறவர் போலும் கல்லாக் கொடையாளி, (ஏதோ ஒரு நினைவு எழ, அவன் கொடுத்த முத்தாரத்தையும் கடகத்தையும் பார்க்கிறார்.) என்னே இவருள்ளத்தின் உயர்வு! இவற்றிற்கூடப் பெயரில்லையே! இவையெல்லாம் உடைமைப் பொருளல; பிறர் வைத்த அடைக் கலப் பொருள்கள் என்ற நினைவினர் போலும்! தம்மையே பிறருடைமை என்ற துறவிவிற்கு வந்த ஆண்டகை, இவற்றைத்

தவமாகக் கருதுஞ் சிறு செல்வரே! தெரிந்து கொண்டேன். அம்பிற் பெயர் பொறியாத காரணம் அறிந்துகொண்டேன். தம் பெயரை மறத்தினும் அறத்தினும் வெளிப்படுத்த விரும்பாத மறையோரிவர். பெயரும் நாடுங் கேட்டதும், நாங்கள் துணுக் குறப் பின் வாங்கினரே! அஃது இவர்க்கு ஒக்கும். போரில் நெடுமொழி கூறிப் பின் வாங்கப் பொருநர், புகழ் கேட்க நாணிப் பின் வாங்கல் ஒக்கும்! நடமாடத் தெரிந்த பிள்ளையை யாரே எடுத்துப் பாராட்டுவர்! தன் புகழ் பரபுவதைத் தனது தொழிலாகவும் கடனாகவும் கொண்டுவிட்டானுக்கும் துணையாக யாரும் வாரார்; துணை வேண்டுவதுமின்று; கைப் பிள்ளையை முத்தி ஆரத் தழுவி அணைத்துச் செல்ல எல்லாருங் காதலிப்பது போலத் தன்னைப் புகழாதான் புகழே ஞாலத்துப் பலரால் சொல்லப்படுமன்றோ? ஆதலின், இத்தோன்றலின் புகழை மண் தேயப் பாப்புவதேநமதுபிறப்பின் தொழிலாகும். இப்பெருமகனார் பெயரை யாழிற் பண்படுத்துவதே நம் கல்வியின் பயன்.

**வெளியன்:** பெயர் தெரிந்தாலும் போதும். நாடு இது வெனத் தெரிந்தாலும் போதும். இவற்றை ஏன் உடனே கேட்டீர்கள்? கேளாதிருந்தால் இவன் நெடிது தங்கியிருப்பார். கேட்டதால் கொடைஞர், கள்வன் போல மறைந்து விட்டனர். சிறிது போழ்திருந்தாலே, நாமும் இசை பாடியிருப்போம்; அவரும் பண்ணில் மயங்கியிருப்பார். பின்னர்ப் பெயரும் நாடுங் கேட்டக்காற் சொல்லியுமிருப்பார்.

**பண்ணன்:** அதனை முன்னர்த் தெரிந்துதான் புறப்பட்டுப் போயினர் போலும்!

**வன்பரணர்:** தம்மைப் பற்றிய முத்தமிழையும் முனிபவர் காண் அவர்: என்றாலும், முத்தமிழ் இத்தகையோரைப் பற்றாம லிருக்குமா? பண்ணிசைத்துக் கைம்மாறு காட்டுபவர் என்று கருதிச் சென்ற அவர் புகழே புகழ்! தம் புகழ் தம் முன்னர்க் கூறக்கேளா அவர் நாணமே நாணம்! செய்ந்நன்றி எனைத் துணையும் எண்ணா அவர் கொடையே கொடை!

[அப்பொழுது வில்லேந்திய கையினராய்ச் சிலர் விரைந்து நடந்துகொண்டே 'எம்மரசர் இவ்வழியாகச் சென்றதைக் கண்டதுண்டோ ?' என்று வினவுகின்றனர்.]

**வன்பரணர்** : (விரைந்து) அவ்வள்ளலின் புகழ்ப்பெயர் யாதோ ?

**வந்தவர்கள்** : (ஏளனமாக) அவர் பெயரை அறியாதிருக்கின்ற உம் பெயர் என்னவோ ?

**வெளியன்** : (சிரித்துக்கொண்டு) இசையுலகிற் பெயர் போகிய வன்பரணர் என்றிவரை அறியாத உமது பெயர் என்னவோ ?

**மூவன்** : (பரணர் மார்பின் ஆரத்தையுங் கைக் கடகத்தையுங் காட்டி) இக்கலன்கள் அவர் கையால் கழற்றி இவருக்கு எம் மனமார அணியப்பட்டவை.

**வந்தவர்கள்** : இவையுந் தருவார், இக்காடு கடந்து, உதுக்காண் தோன்றும் கொல்லிமலை நாட்டிற்கு நீவிர் வருக. எல்லாந் தருவார்.

**வன்பரணர்** : (மகிழ்ந்து) உண்மை உணர்த்திய நீங்கள் யாரோ ? உங்கட்கு என்ன கைம்மாறு செய்வோம் ? (என்று பாடத் தொடங்குகிறார்.)

**வந்தவர்கள்** : நாங்கள் அவரைப் பின் தொடருபவர்கள். அவர் சென்ற வழி காட்டிய உங்கட்கு ....[ஒருவன் மோதிரத்தைக் கழற்றி அவர் விரற்கண் போடுகிறான். வந்தவர் எல்லாரும் விரைந்து புறப்பட்டுவிடுகின்றனர். பாணர்கள் கொல்லி மலையையும் ஓரியையும் பாடிக்கொண்டு அம்பையும் எடுத்துக்கொண்டு வழி நடக்கின்றனர்.]

**உடைமை யெனப்படுவ தியாதெனின் யாதுங்**
**கொடைமை யிலாத குணமே;—கொடைமை**
**உடையான் தொகுத்த துலகமே யாக**
**உடையான் இரப்பவனென் றோது.**

## அருஞ்சொற்பொருள் :

பாசவன் - இறைச்சி விற்பவன்; தவக்கம் - தாமதம், ஆகுளி - ஒரு பறை, வண்ணம் - இசைப்பாட்டு. சூட்டு இறைச்சி - சுட்ட இறைச்சி, நறவு - தேன், பொறி - இலச்சினை, கைப்ப - வெறுக்க, நம்பி - சிறந்தோன். குரிசில் - சிறந்தோன், துணுக்குற - நடுங்க: நெடுமொழி - சபதம், சூளுரை, முத்தி - முத்தமிட்டு, மண் தேய - பூமி இடம் போதாதபடி, உதுக்காண் தோன்றும் - தொலைவில் தோன்றும்.

## கேள்விகள் :

1. வன்பரணர் ஓரியை இன்னுனென எவ்வாறு ஊகித்து அறிகின்றூர் ?
2. ஓரியின் வில்லாற்றல் ஒப்புயர்வற்றது என்பது எதனுல் விளங்கும்?
3. ஒரி வன்பரணரிடம், தன் நாடும் பெயரும் கூருது மறைந்தது ஏன் ?
4. வன்பரணர் ஓரியின் கொடைத்திறத்தை எவ்விதம் பாராட்டுகின்றூர் ?
5, 'புகழ்த்துறவு' என்னும் பெயர் இந்நாடகத்திற்கு எவ்வாறு பொருந்தும் ?

## பயிற்சி :

வன்பரணர் ஓரியைப் பாராட்டிக்கூறிய கருத்துக்களைத்தொகுத்து 25 வரிகளில் எழுதுக.

---

# 4. வேதநாயகம் பிள்ளை

(டாக்டர். ரா. பி. சேதுப்பிள்ளை. பி. ஏ., பி. எல்., டி. லிட்.)

தமிழ் நாட்டிலே தோன்றிய நல்லியற் கவிஞருள் ஒருவர் வேதநாயகர். அவர் நகைச்சுவை நிரம்பிய நூல்களால் தமிழ் மொழியை அழகு செய்தவர் ; இசைத் தமிழின் பெருமையைக் கீர்த்தனங்களால் நாட்டியவர்; தமிழில் நாவல் என்னும் நவீனக் கதை இயற்றுவார்க்கு நல்வழி காட்டியவர்.

இத்தகைய வித்தகர், திருச்சிராப்பள்ளிக்கு அண்மையில் உள்ள குளத்தூரிலே பிறந்தவர். அவர் பிறந்த குலமும், பெற்ற நலமும் ஒரு சிறப்புப் பாயிரத்தால் விளங்கும். "கொங்கு ராய கோத்திரம் அதனில் வந்தவ தரித்த செந்தமிழ்க் குரிசில்" என்றும் அவரைப்பாராட்டினர் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை.

இளமையிலேயே வேதநாயகரிடம் விளங்கிய ஆங்கிலப் பயிற்சியையும், ஆன்ற பண்பினையும் அறிந்த அரசியலார் அவரைத் திருச்சி மாவட்ட நீதிமன்றத்தில் மொழிபெயர்ப்பாள ராக அமைத்தனர். அப்பணியில் அவர் காட்டிய திறமை துரைத்தனத்தாரது கருத்தைக் கவர்ந்தது ; அதன் பயனாகத் தரங்கம்பாடியில் முனிசீபாக நியமிக்கப்பெற்றார். அப்பணியை ஏற்று நீதி வழங்கும் தொழிலைச் செய்யுங்கால், உற்றார் என்றும் மற்றார் என்றும் அவர் உணர்ந்ததில்லை; கீழோர் என்றும், மேலோர் என்றும் கருதியதில்லை; இச்சகம் பேசும் கொச்சை மாக்களுக்கு இடங்கொடுத்ததில்லை. வழக்கின் தன்மையை உள்ளவாறுணர்ந்து தீர்ப்புச் செய்வதே அவர் வழக்கம். இத்தன்மை வாய்ந்த வேதநாயகரை நீதி நாயகர் என்று எல்லோரும் புகழ்வாராயினர்.

தரங்கம்பாடியிலிருந்து வேதநாயகர் சீர்காழிக்கு முனிசீபாக மாற்றப்பட்டார், அப்போது நற்றாமரைக் கயத்தில் நல்லன்னம்

சேர்ந்தாற்போல மகாவித்துவான்மீனுட்சிசுந்தரம்பிள்ளை அங்குப் போந்து சில காலம் தங்கியிருந்தார். உணர்ச்சியொத்த அறிஞர் இருவரும் சில நாளில் சிறந்த நண்பர் ஆயினர். அவ்வூர்ப் பெரியோர் விரும்பிய வண்ணம் மகாவித்துவான்சீர்காழிக்கோவை என்னும் பிரபந்தம் இயற்றினர். அக்கோவை சீர்காழிச் சிவன் கோயிலில் உள்ள வலம்புரிமண்டபத்தில் வாசித்து அரங்கேற்றப் பட்டது. வேதநாயகர் நாள்தோறும் வந்து கேட்டு இன்புற்று அக்கோவை நயங்களையும், பிள்ளையவர்களின் புலமைத் திறத்தையும் பாராட்டிப் பல கவிகள் பாடினர்.

நன்னெறியில் நாட்டம் உடைய வேதநாயகர் அவ்வப்போது தம் மனத்தில் அரும்பிய கருத்துக்களைப் பாட்டாகப் பாடி வைத்திருந்தார்; அப்பாடல்களை மகாவித்துவானிடம் படித்துக்காட்டி அவர் அளித்த சிறப்புப் பாயிரத்தோடு **நீதி நூல்** என்னும் பெயரால் வெளியிட்டார். அந்நூலில் வேதநாயகர் ஒப்புரவு முதலிய அறங்களைப் பாராட்டுகின்றார்; ஐம்பெருங் கொடுமைகளைக் கடிந்துரைக்கின்றார்; கைக்கூலி பெறுவோரையும் பன்றுள்ளம்உடையோரையும் எள்ளுகின்றார்; நல்லரசின் தன்மையையும் வல்லரசின் தன்மையையும் அவர் நீதி நூலில் விளக்கிக் காட்டும் பான்மை நன்கு அறியத் தக்கதாகும். ''நன்னெறி வழுவாத மன்னர்க்கு நாடெல்லாம் அரண்மனை; மன்னுயிர் எல்லாம் அவர் நற்படை; அன்னார் மனமெல்லாம் அவர் வீற்றிருக்கும் அரியணை. ஆனல், கொடுங்கோல் மன்னர்க்குக் குடிகளே பகைவர்; அவர் அடி வைக்கும் இடமெல்லாம் படுகுழி; மாளிகையே மயானம்,'' என்னும் பொருள்பட வேதநாயகர் பாடியுள்ளார்.

சீர்காழியில் வாழ்ந்த காலத்தில் வேதநாயகர் இசைப் பாட்டிலே விருப்பம் உற்றார். தென்னாட்டு இசைத்தமிழன் வரலாற்றில் சிறந்ததோர் இடம்பெற்று விளங்குவது சீர்காழிப்பதியாகும். ''நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தர் பிறந்தவூர் சீர்காழியே. கம்பர் அருளிய இராமாயணத்தை அழகிய கீர்த்தனங்களாகப் பாடி அழியாப் புகழ் பெற்ற அருணாசலக்

கவிராயர் வாழ்ந்ததும் அப்பதியே. தில்லை மன்றத்தில் திருநடம் புரியும் இறைவனைத் தெள்ளிய தமிழ்ப் பாட்டாற் போற்றிய முத்துத்தாண்டவரை ஈன்றதும் அவ்வூரே. இத்தகைய சீர்காழி யின் மருங்கே அமைந்த ஊர்களும் இசை மணம் வாய்ந்தன வாகும். ''பண்ணோடு இசைபாடும் அடியார்க்கு இம்மை யின்ப மும் மறுமை இன்பமும் தரும் மணிகண்டன் மருவும் இடம்'' என்று திருஞான சம்பந்தர் போற்றிப் புகழ்ந்த புள்ளிருக்கும் வேளூர், சீர்காழிக்கு அண்மையில் அமைந்துள்ளது. இன்னும் தமிழ்ப் பாடல்களை ஒற்றறுத்துப் பாடும் வண்ணம் திருஞான சம்பந்தருக்கு ஈசன் பொற்றாளம் ஈந்தருளிய கோலக்காவும் சீர்காழியை அடுத்துள்ள சிவப்பதியாகும்.

இத்தகைய சீர்காழியிலிருந்து மாயூரத்திற்கு முனிசீபாக மாற்றப்பட்டார் வேதநாயகர். பழம் நழுவிப் பாலில் விழுந்தாற் போல் இசைப்பாட்டில் ஆசையுற்றிருந்த வேதநாயகருக்கு மாயூரத்தில் சிறந்த இசைவாணர் பழக்கம் ஏற்பட்டது. '' நந்தனார் கீர்த்தனம் '' பாடிப் புகழ் பெற்ற கோபாலகிருஷ்ண பாரதியார் அப்போது அவ்வூரில் இருந்தார். அவர் பாடிய கீர்த்தனம் வேதநாயகர் உள்ளத்தைக் கவர்ந்தது. இசைப் பாட்டில் ஈடுபட்ட இருவரும் நாளடைவில் நண்பராயினர்.

மாயூரத்தில் வேதநாயகர் நீதிபதியாய் இருந்த போது வல் வழக்குகள் நீதி மன்றத்திலே வரக்கண்டு மனம் வருந்தினர். அவ்வழக்குகளின் தன்மைக்கு அவரே ஒரு சான்று காட்டியுள் ளார். ''கரமிலான் ஒருவன் வாதியைப் பிடித்தான்; காலிலான் அவனை உதைத்தான்; வாயிலான் அவனைக்கடித்தான்''. இப்படிப் பிடித்து, உதைத்துக், கடித்தவர்கள்மீது வாதிவழக்குத்தொடுத் தான். அவனுக்காகவிறுவிறுப்புடன் வாதாடி வம்பு செய்தார்கள் வழக்குரைஞர்கள். இவ்வாறு,

''தொண்டை கிழித்துக்கொண்டு
சண்டைசெய் யும்வக்கீல்கள்
அண்டையில் இருந்துநம்
மண்டையை உடைத்தால்—

ஆண்டவனை நினைப்ப தெப்போது

ஐயன் பதத்தை நினைப்ப தெப்போது நெஞ்சே!''

என்று அவர் பாடுகின்றார்.

தெய்வஞ் சான்றாக நீதி வழங்கி வந்த வேதநாயகர் அடைந்த பெரும்புகழைக் கண்டு பொறாமைகொண்ட சிறியோர் சிலர், மேலதுவலர்களிடம் கோளும் பொய்யும் சொல்லிக் குழப்பம்விளைவித்தார்கள். அன்னார் சிறுமையை ஒரு பாட்டாகப் பாடி ஆண்டவனிடம் முறையிட்டார் வேதநாயகர். ''நல்லவர்களெல்லாம் நாட்டைவிட்டு அகன்றார்; ஞான சூனியரெல்லாம் நமக்கு அதிபதி என்றார்; ஆகாத காலம் இது; அசடர் தலையெடுத்தார்; பூவிற்ற கடையிலே புல் விற்கத் தொடங்கி விட்டார். என்ன வந்தாலும் மனமே—ஐயன் இருக்கையில் என்னவிசனமே?'' என்னும்கீர்த்தனம்பாடிக் கவலையற்றிருந்தார் இறுதியில் அறம் வென்றது; அழுக்காறு வேரற்று வீழ்ந்தது.

அப்பொழுது தஞ்சை நாட்டில் கடும் பஞ்சம் வந்துற்றது அதன் கொடுமையைக் கண்ட வேதநாயகர் நெஞ்சுருகிப் பாடினார். ''ஐயோ! மண்ணில் அநேகர் என் கண் முன்னே மாய்ந்தார்;எண்ணிறந்தவர்சருகுபோல்காய்ந்தார்; கண்ணிருண்டு களைத்து உடல் ஓய்ந்தார். ஆண்டவனே, உன்னையன்றி யாரே துணையாவார்? என்று முறையிட்டார். ஒல்லும் வகையால் பசியின் கொடுமையைத் தணிப்பதற்குத் தம் செல்வத்தையும் செல்வாக்கையும் செலவிட்டு மாயூர நகரின் பல பாகங்களில் அவர் கஞ்சிச் சாலைகள் அமைத்தார். அங்கு வார்த்த கஞ்சியைப் பருகி மனங்குளிர்ந்து அவரை வாயார வாழ்த்திய ஏழை மாந்தர் பல்லாயிரவர். அவ்வறப் பணியைக் கண் குளிரக் கண்ட கோபாலகிருஷ்ண பாரதியார், வேதநாயகரை வியந்து 'நீயே புருஷமேரு' எனத் தொடங்கும் கீர்த்தனம் பாடினார். பாரதியார் இயற்றிய கீர்த்தனங்களுள் இது வொன்றே நரத்துதி என்றால், வேதநாயகர் பெருமைக்கு வேறு சான்றும் வேண்டுமா?

அக்காலத்தில் மாயூரத்துக்கு அண்மையிலுள்ள திருவாவடுதுறை ஆதீனத்தில் சுப்பிரமணிய தேசிகர் என்னும் சீலர்

தலைவராய் விளங்கினர். கற்றவரும் பொருளற்றவரும் அவர் ஆதரவை நிரம்பப் பெற்றனர். கலையின் கோயிலாகவும், கருணையின் நிலையமாகவும் திகழ்ந்த தேசிக மூர்த்தியிடம் வேதநாயகர் மிகவும் ஈடுபட்டார்.

"ஏனென்று கேட்பவர் இல்லாத் தமிழை இனிதளிக்க
நானென்று கங்கணம் கட்டிக்கொண் டாய்இந்த நானிலத்தே"

என்று அப் பெரியாரைப் பாராட்டினர்.

பஞ்ச காலத்தும் அத் தேசிகமூர்த்தி, பசித்தோர் முகம் பார்த்துப் பரிவுடன் உணவளித்தார். இவ்வாறு வருந்தி வந்தவர் அரும்பசி தீர்த்து 'உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே' என்னும் தொடர்ப் பொருளை மெய்ப்பித்த பெரியாரை வேதநாயகர் மனமாரப் போற்றினர்.

கிருத்துவ மதத்தில் வேதநாயகர் சிறந்த பற்றுடையவராயினும்; தெய்வத்தின் பெயரால் சமயவாதிகள் சண்டையிட்டுக் கொள்ளுதல் தவறு என்பது அவர் கொள்கை. பாரத நாட்டிலுள்ள பல சமயவாதிகளும் சமரச உணர்ச்சியோடு பணி செய்தல் வேண்டும் என்பது அவர் ஆவல். இக்கருத்துக்கொண்டு அவர் பாடிய கீர்த்தனங்கள் பலவாகும். அவற்றைத் தொகுத்துச் 'சர்வ சமய சமரசக் கீர்த்தனைகள்' என்னும் பெயரால் அவர் வெளியிட்டார்.

பிற சமயத்தாருடன் வேதநாயகர் வேற்றுமையின்றிப் பழகினர். சைவ சமயத்தைப் போற்றி வளர்ப்பதற்காகத் தோன்றிய திருவாவடுதுறை மடத்திற்கு வேதநாயகர் அடிக்கடி சென்று வந்தார், இன்னும் சைவ சமயத்தில் சிறந்த ஆர்வமுடையவரும், திருவாவடுதுறை ஆதீன மகாவித்துவானும் ஆகிய மீனாட்சிசுந்தரம் பிள்ளை வேதநாயகரின் ஆருயிர் நண்பர். வேதநாயகரைப்பாட்டுடைத்தலைவராகஅமைத்துஅம்மகாவித்துவான் ஒரு கோவை பாடினர். குளத்தூர் வேதநாயகர்மீது பாடப்பட்ட கோவையாதலால், அது 'குளத்தூர்க் கோவை' என்று

வழங்குகின்றது. அக்கோவையில் 'தன்னே ரிலாத தமிழ்வேத நாயகன்' என்றும், 'நூல் ஆய நோற்ற மதிவேத நாயகன் என்றும் அவர் பெருமையை மகாவித்துவான் பாடியுள்ளார்.

தமிழ்நாட்டுப் பெண்களின் முன்னேற்றத்தில் மிகுந்த ஆர்வமுடையவர் வேதநாயகர். நல்ல எண்ணங்கள் இளமை யிலே நங்கையர் மனத்திற் பதிதல் வெண்டும் என்பது அவரது கொள்கை. அக்கருத்துக்கொண்டு எழுந்தது 'பெண்மதி மாலை என்னும் நூல், வேதநாயகர் தம் பெண் குழந்தைகள் படிப்ப தற்காக அதனை எழுதினர் என்பது தெரிகின்றது. பிறந்த மனையிலும் புகுந்த மனையிலும் பெண்கள் சோம்பலின்றி வேலை செய்தல் வேண்டும் என்றும், வாழ்க்கைப்பட்ட பெண் ''இல்லாள்'' என்று சொல்லப்படுவதால், அவளே வீட்டுக்குத் தலைவி என்றும், இல்லறம் நடத்தும் பெண்கள் நாள்தோறும் அறஞ்செய்தல் வெண்டுமென்றும், தாய், தந்தை, ஆசிரியர், கடவுள் ஆகியவர்களிடம் அன்பும் பணிவும் உடையவர்களாய் இருத்தல் வேண்டும் என்றும் பெண்மதி மாலை கூறுகின்றது.

பெண்களுக்குக் கல்வி இன்றியமையாதது என்பதைப் பல கட்டுரைகளாலும் எடுத்துரைத்தார் வேதநாயகர். பெண் கல்வி, பெண் மானம் முதலிய கட்டுரைகள் பெண்மதி மாலையிற் சேர்க்கப்பட்டுள்ளன. பெண்களை மரியாதையாக நடத்த வேண்டும் என்பதற்கான உண்மைகளைப் பெண்மானம் என்னும் கட்டுரை விளக்குகின்றது.

வேதநாயகர் உரைநடை நூல்களும் சில இயற்றினர். அவற்றுள் தலைசிறந்தது 'பிரதாபமுதலியார் சரித்திரம்' என்னும் கற்பனைக் கதையேயாகும். அதுவே தமிழில் எழுந்த முதல் நவீனக் கதை (நாவல்) என்று சொல்லப்படுகின்றது. பிரதாபன் கதை நகைச் சுவை நிரம்பியது; படிப்போர் மனத்தைப் பற்றி இழுத்துச் செல்லும் பண்புடையது; மூடப் பழக்க வழக் கங்களைக் கடிவது; நல்ல பழக்கங்கள் பரவ வழி காட்டுவது; கதைத்தலைவனாகிய பிரதாபனது கள்ளங் கபடமற்ற உள்ளம் நம்

கருத்தை அள்ளுகிறது. அவன் தாயாகிய சுந்தரமும், மனையாளாகிய ஞானம்பாளும் மதிநலம் வாய்ந்த மங்கையர் குலத்திற்கு அணிகலன்களாய் விளங்குகின்றார்கள். சுருங்கச் சொல்லின், அந்நவீனம் கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பருளும் கதையாகும்; அக்கதை ஆங்கிலத்திலும் மொழி பெயர்க்கப்பட்டிருப்பதாகத் தெரிகின்றது.

பதினைந்து ஆண்டுகள் வேதநாயகர் முனிசீபாக வேலை பார்த்தார்; அவ்வேலையின் கடுமையால் உடல் தளர்ந்தார்; அரசியலார் இணக்கம் பெற்று வேலையினின்று விலகினார்; பின்பு தமிழ்க் கலைகளிலே பொழுது போக்கினார்; மாயூரம் நகரமன்றத் தலைவராய் அமர்ந்து நற்பணிகள் பல செய்தார்; சுகுண சுந்தரி என்னும் நாவலும் இயற்றி வெளியிட்டார்; கடைசியாகச் "சத்திய வேத கீர்த்தனை," என்னும் இசைப் பாட்டியற்றி அறுபத்தைந்தாம் வயதில் ஆண்டவன் அருளிலே கலந்தார்.

## அருஞ்சொற்பொருள் :

**வித்தகர்**—கல்வியில் சிறந்தோர்; **குரிசில்**—உயர்ந்தோன்; **இச்சகம்**—முகத்துதி; **கொச்சை மாக்கள்**–கீழோர்—; **போந்து**–வந்து; **கைக்கூலி**—இலஞ்சம்; **ஒற்று அறுத்து**—தாளம் போட்டு; **ஒல்லும் வகை**—இயன்ற மட்டும்; **வல்வழக்கு**—அழிவழக்கு.

## கேள்விகள் :

1. வேதநாயகம் பிள்ளை, மாவட்ட நீதி மன்ற மொழி பெயர்ப்பாளராகப் பணியாற்றியபோது நடந்துகொண்ட விதம் யாது?

2. வேதநாயகம் பிள்ளை இயற்றிய 'நீதி நூல்' நுவலும் கருத்து யாது?

3. சீர்காழிப் பதியின் சிறப்பு யாது?

4. வேதநாயகம் பிள்ளை தம்மிடம் வரும் பொய் வழக்குகட்குக் காட்டிய சான்று என்ன?

5. வேதநாயகம் பிள்ளை, தம்மிடம் பொறுமைகொண்டோ ரது சிறுமை கண்டு ஆண்டவரிடம் எங்ஙனம் முறை யிட்டார்?

6. கோபாலகிருஷ்ண பாரதியார் வேதநாயகம் பிள்ளையை எவ்விதம் பாராட்டியுள்ளார்?

7. வேதநாயகர் தமது நூல்களில் பெண்களைப்பற்றிக் கூறி யிருப்பதென்ன?

8. 'பிரதாப முதலியார் சரித்திரம்' என்ற நூலைப்பற்றிச் சிறு குறிப்பு வரைக.

பயிற்சி :

வேதநாயகம் பிள்ளையின் பண்புகளைப் பற்றி 15 வரிகள் எழுதுக.

---

# 5. பழந்தமிழ் நாடும் நகரமும்

(டாக்டர், அ. சிதம்பரநாதன் செட்டியார், எம். ஏ., பி. எச். டி.)

பழங்காலத் தமிழகம் என்றவுடனே, ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம் என்பது அறியப்படும். அக் காலத் தமிழ் நாட்டைப் பற்றிய செய்திகள், கடைச்சங்க கால இலக்கியம் எனக் கூறப்படுவனவற்றுள் குறிக்கப்பட்டுள்ளன: சிறப்பாகப் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, சிலப்பதிகாரம் ஆகியவற்றுள் சொல்லப்பட்டுள்ளன. அவற்றுள் சிலவற்றைக் காண்போம்.

பழைய தமிழ் நாடு, சேர சோழ பாண்டியர்களால் ஆளப் பட்டது என்பது யாவரும் அறிந்ததே. சேரர்களுடைய தலை நகரம் வஞ்சி; சோழருடையது காவிரிபுகும்பட்டினம்; பாண்டிய ருடையது மதுரை.

இந்த நகரங்களில் காவிரிபுகும்பட்டினத்தைப்பற்றி அறிவன வற்றை முதலிற்காண்போம். அங்கே பல திறப்பட்ட மக்கள்

வாழ்ந்தனர்; தட்ப வெப்பநிலை நன்ருய் அமைந்திருந்தது; கடற் காற்று இனிமையாக வீசிக்கொண்டிருந்தது; மண் நல்ல வளம் பொருந்தியதாக இருந்தது. அந்நகர மக்களின் சிறந்த தொழில் உழவே. காவிரியாறு கடலொடு கலந்த அவ்விடத்தில் வாழ்ந்த மக்கள், வேளாண்மைக்காக வானத்தை நோக்கி வாழ்ந்தவர் அல்லர். அங்கு நெல்லும் கரும்பும் நிறைய விளைவிக்கப்பட்டன. அடுத்தசிறப்புடைய கைத்தொழிலாய் அமைந்திருந்தது நெசவே. அந்நகரத்திற் பஞ்சமும் தொழு நோயும் ஏற்பட்டதில்லை. அந் நகரத்தைச் சோழ அரசன் ஆண்டுவந்தான். மக்கள் அவ்வரசனை நாட்டின்முதற்குடியாக மதித்தனர். இது 'பெருநிலம் முழுதாளும் பெருமகன் தலைவைத்த ...... குடிகள்,' என்ற சிலப்பதிகாரப் பகுதியால் அறியப்படும். அவ்வரசன் செங்கோலினனாக ஆண்டு வந்தான். அமைச்சர், புரோகிதர். சேனாபதியர், தூதுவர், சாரணர் என்பவர்கள் அவனுக்கு உற்ற துணைவராய் இருந்து உதவி வந்தார்கள், அவர்களை ''ஐம்பெருங்குழுவினர்'' என்றூர்கள். அவரையல்லாமல் ''எண்பேர் ஆயத்தார்'' என்பாரும் அரசனுக்கு உறுதுணையாய் அமைந்திருந்தனர். அவர்கள் கரணத்தியலவர், கருமகாரர், கனகச்சுற்றம், கடைகாப் பாளர், நகர மாந்தர், படைத்தலைவர், யானை வீரர், குதிரை வீரர் என்பவர்கள்.

அரசன் தக்க ஆட்களை அமைத்து, வரிகளை உரிய முறையில் வாங்கிக் குடிமக்களின் நன்மைக்குப் பயன்படுத்தி வந்தான். எடுத்துக்காட்டாகக் கரிகால் வளவன் என்ற சோழன் தன் நகர எல்லையை அடைந்த பண்டங்கட்குச் சுங்கம் வாங்கும்படி பணித் திருந்தான். அவ்வாறு சுங்கம் வசூலிக்கப்பட்டுவிட்ட பொருள் களின்மீது அவனுடைய ஏவலர்கள் அவனது புலிப்பொறியை இடுவது வழக்கம். இங்ஙனம் அவனது நகரத்தில் இறக்குமதி செய்து குவிக்கப்பட்ட பண்டங்கள் பல குன்றுகளைப் போலக் காட்சிஅளித்தன. இதனைப்பட்டினப்பாலை என்னும்பழையநூல்

''உல்குசெயக் குறைபடாது

......................................................

அளந்தறியாப் பலபண்டம்

......................................................

புலிபொறித்துப் புறம்போக்கி
மதிநிறைந்த மலிபண்டம்
பொதிமூடைப் போரேறி''

எனச் சொல்லியிருக்கிறது.

அந்நகரத்தில் இறக்குமதி செய்யப்பட்ட பண்டங்கள் இன்ன என்ற விளக்கமும் அறிகிறோம். அரேபியாவிலிருந்து கப்பல்களிற் குதிரைகளும், மேற்குக் கடற்பக்கத்திலிருந்து படகுகளில் மிளகுப் பொதிகளும், மேருவிலிருந்து மாணிக்கமும், பொதிய மலையிலிருந்து சந்தன மரமும், பாண்டி நாட்டிலிருந்து முத்துக்களும், கீழ்க்கடற்பகுதியிலிருந்து பவளங்களும் வந்திறங்கின என அறிகிறோம்; ஈழநாட்டிலிருந்து பனைவெல்லாம் முதலிய சில உணவுப் பொருள்களும், பர்மாவிலிருந்து சில மணப்பொருள்களும், சீன நாட்டிலிருந்து கற்பூரம், குங்குமம் முதலிய பொருள்களும் வந்திறங்கின.

காவிரிபுகுபட்டினத்தில் வாழ்ந்த மக்களிற்சிலர் பகற்பொழுதில் ஓய்வு நேரத்தைஎவ்வாறு கழித்தனர் எனஉருத்திரங் கண்ணனார் கூறியுள்ளார். நன்றாக உண்டுடுத்து வாழ்ந்த அவர்கள் சில வேளைகளில், ஊர்நடுவே கூடி, ஆட்டுக்கிடாயையும், சிவல் என்னும் பறவையையும் முட்டவிட்டு விளையாட்டுப் பார்ப்பது வழக்கம். இன்னும் சில வேளைகளில் களரியிற்புகுந்து குத்துச்சண்டை, வெட்டுச்சண்டை, கவண் கல் எறிதல் முதலியவற்றில் ஈடுபடுவர்; பகல் வேளைகளில், கடலாடியும், புனம் படிந்தும், நண்டுகளைப் பிடித்து ஆட்டியும், அலைகளோடு போட்டியிட்டும் பொழுதுபோக்குவர்; இரவில் பட்டாடைகளை நீக்கி மெல்லிய பருத்தியாடைகளை உடுப்பர்; பாடல்கள் கேட்பர்; வெண்ணிலவின் பயனையும் துய்ப்பர்.

இவ்வாறு இனிமையாகப் பொழுது போக்கினர் என்றால், அம்மக்கள் மிக்கசெல்வம் படைத்தவராகவும், உழைத்துழைத்து ஊதியம் திரட்டினராகவும் இருந்தனர் என்பது சொல்லாமலே விளங்கும் அன்றோ? அவரெல்லாம் பகலிலே சாயுங்காலம்

வரையும், பொழுது போன பின்னரும் தொழில் ஆற்றினவர். அவர்களிற் சிலர் பூவும் புகையும்விற்றவர்கள்; சிலர் வண்ணமும் சுண்ணமும் விலை பகர்ந்தவர்கள்; சில பட்டாலும், எலி மயிராலும், பருத்தி நூலாலும் ஆன ஆடைகளை இயற்றி விலைக்கு விற்றவர்கள்; இன்னும் சிலர் அவரை, துவரை முதலிய எண்வகைத் தானியங்கள் விற்று, ஊதியம் தேடின வர்கள்; சிலர் பிட்டும் அப்பமும் விற்றவர்கள்; மீன் விற்றவரும், உப்பு விற்றவரும் உண்டு: வெண்கலக் கன்னாரும்; செம்புக் கொட்டிகளும், மரவேலை செய்த தச்சரும், உழைத்துழைத்துக் களைத்துப்போன கொல்லரும், நாடகம் நயந்தும் ஆடல்கள் ஓர்ந் தும் வந்தார்கள் என அறிகிறோம். காவிரிபுகும்பட்டினத்திலே உருக்குத்தட்டாரும், பணித்தட்டாரும், சிற்பாசிரியர்களும், சித்திரக்காரர்களும். தையற்காரர்களும் விரும்பித் தொழில் புரிந்தனர் என அறிகிறோம். துணியினாலும் நெட்டியினாலும், பூ, வாடாமலை, பொய்க்கொண்டை முதலிய பொருள்களை அமைக்கும் கைத்தொழில் வல்லவர்கள் இருந்தார்கள். இவர் களைப் பற்றிச் சிலப்பதிகாரம் புகார்க்காண்டத்திற் செய்திகள் சொல்லப்பட்டிருக்கின்றன. புகாரின் கடற்கரைப் பக்கம் மரு வூர்ப்பாக்கம் என ஒரு பிரிவாகவும், உட்பக்கம் பட்டினப் பாக்கம் என ஒரு பிரிவாகவும் பிரிக்கப்பட்டிருந்தன. மருவூர்ப் பாக்கத்தில் தொழிலாளரும், பட்டினப்பாக்கத்தில் அரசரும் செல்வரும் வாழ்ந்திருந்தனர்,

மதுரை ஆகிய பாண்டிய நகரத்தைக் குறித்து மாங்குடி மருதனார் "மதுரைக் காஞ்சி"யிற் கூறியுள்ளார். மதுரை ஆறு கிடந்தாற்போன்ற தெருக்களை உடையது. தெரு ஆறு போலவும் இரு பக்கத்து வீடுகள் ஆற்றின் கரை போலவும் அமைந்திருந்தன. இனி மதுரையின்கண் உள்ள கடைகளில் இரவிலும் பகலிலும் எவ்வாறு வாணிகம் நடந்தது என்பதை அறிவோம். அந்திக்கடையை அல்லங்காடி என்றும் பகற் கடையை நாளங்காடி என்றும் கூறுவது அக்கால மரபு.

சிலர் அறுத்த சங்கினை வளையல் முதலியனவாகக் கடைந்து தருவர்; சிலர் அழகிய மணிகளுக்குத் துளையிடுவர்; சிலர்

பொன்னை உரைத்து மாற்றுக் காண்பர்; சிலர் பொன் வேலை செய்வர்; சிலர் புடவை விற்பர்; சிலர் அருமையான ஓவியம் வரைவர். சிலர் சிற்றுடையும், பெரும்புடவைகளும் கொண்டு வந்து தத்தம் சிறுவரோடும், நான்கு தெருக்கள் கூடும் இடங் களில் கால் கடுக்க நின்று விற்பர். பலாப்பழம், வாழைப்பழம், மாம்பழம், பாகற்காய், வழுதுணங்காய், வாழைக்காய், கிழங்குகள், கீரை முதலியவற்றை விற்கும் பல இரவுக் கடைகள் உண்டு.

இவ்விரவுக் கடைகளெல்லாம் முதல் யாமத்திலேயே மூடப் பட்டுவிடும். பிறகு, இரண்டாம் மூன்றும் யாமங்களிலே ஊர்க் காவலர்கள்உறுதியுடன்நகரில்உலாப்போவார்கள். மழைபெய்து தெருவில் நிறைய நீரோடிக் கொண்டிருக்கிற பொழுதிலும், தம் கடமையில் வழுவாராய்க் கையில் வில்லும் அம்புமாக இவர்கள் திரிவார்கள் என மதுரைக்காஞ்சி சொல்கிறது.

மதுரை நகரத்தில்அக்காலத்தில் தொழில்புரிந்தார் இவரிவர் எனச் சிலப்பதிகாரம் கூறுவதை நோக்குவோம். சிலர் செம்பாலும் வெண்கலத்தாலும் பற்பல பாத்திரங்கள் செய்வர். சிலர் ஆனைக்கொம்பு முதலியவற்றைக் கடையும் தொழிலில் ஈடுபடுவர். வண்டியும், தேர் வட்டையும், தேர்க்கொடிஞ்சியும் செய்வோர் பற்பலர் உண்டு. கையில் துலாக்கோலொடும். மரக் காலொடும் நின்று பண்டங்களை நின்றவிடத்திலேயெ அளந்து கொடுப்போர் பலர். சிலகடைகளில் “இங்கேஆடகப்பசும்பொன் விற்கப்படும்”, “இங்கே சாம்பூநதம் விற்கப்படும்”, “இங்கே சாதரூபம், கிளிச்சிறை விற்கப்படும்” என்ற குறிப்புப்பட எழுதப்பட்ட கொடிகள் திகழும். அதனால், சாமான் வாங்கு வோர் ஒவ்வொரு கடையிலும் புகுந்து திரும்பாமல் வேண்டிய கடையில் புகக்கூடிய வசதி செய்யப்பட்டிருந்தது என அறிகிறோம்.

சேரர் பேரூர், ஒரூரின் தனிநிலை பெறுததாய் நானிலத்தின் பான்மையும்பொருந்தப் பெற்றிருந்தது என்பது சிலப்பதிகாரத் தால் அறியப்படுகிறது. அந்நகரத்தில்மலையும், கடலும், கானும்,

வயலுமுண்டு என்று சொல்லத்தக்கபடி ஒரு வருணனை காணப் படுகிறது. "குறத்தியர் பாடிய குறிஞ்சிப் பாட்டினையும், உழவர் பாடிய ஓசைப் பாணியையும், இடையர் பாடிய குழலின் பாணியையும், நுளைச்சியர் பாடிய நெய்தற் பாணியையும் செங்குட்டுவன் மனைவி கேட்டனளாய்ப் படுக்கையில் இருந்தாள்" எனக் கூறப்பட்டிருப்பதால், அந்நகரத்தின் தட்ப வெப்ப நிலை கலப்பு வாய்ந்தது என்பது பெறப்படும்; அங்கு வாழ்ந்த மக்கள் வேட்டுவரும், உழவரும், இடையரும், பரதவரும் ஆகிய பல திறத்தவர் என்பதும் பெறப்படும். அந்த நகரத்தில் சிவனுக்கும் திருமாலுக்கும் சிறந்த கோயில் அமைந்திருந்தன.

அக்காலத் தமிழரசர்களுடைய தலைநகரங்களிற் பிற நாட்டு வேந்தருடைய ஒற்றர்கள் வாழ்ந்து வந்தார்கள் என்பதற்குரிய சான்று சிலப்பதிகார வஞ்சிக் காண்டத்திற் காண்கிறோம். செங் குட்டுவன் வடநாடு புகுந்து வெற்றி கொள்ள வேண்டும், எனத் தன் அமைச்சனிடம் சொல்லவும், அவன், "கண்ணகிக்குக் கோயில் எடுக்க ஒரு கல்லிற்காகத்தானே போகவேண்டும்? வட நாட்டு மன்னர்க்கு முடங்கல் அனுப்பினால் அது வந்துவிடும்." என்றான். அப்பொழுது அழும்பில் வேள் என்பான், "முடங்கல் வரைய வேண்டா; இந்த ஊரிற் பறையறைந்தாற் போதும் இவ்வூரின்கண் வடநாட்டு மன்னரின் ஒற்றராய் வந்திருப்போர் அறிவித்துவிடுவர்," எனச் செங்குட்டுவனுக்குச் சொன்னான் எனப் படிக்கின்றோம். இதனால், சேரனுடைய தலைநகரத்திற் பிறவேந்தரின் ஒற்றர்கள் வந்து தங்கியிருந்தனர் என்பதும், அவ்வாறே ஏனைய நாடுகளில் தமிழ் வேந்தரின் ஒற்றர்கள் போய்த் தங்கியிருந்தனர் என்பதும் அறியப்படும்.

### அருஞ்சொற்பொருள் :

தட்பம் – குளிர்ச்சி; கரணத்தியலவர் – கணக்கர்; கருமகாரர்—செயலாளர்; கனகச் சற்றம்—கருவூலகாப்பாளர்; உல்கு—சுங்கவரி; களரி—அரங்கம்; வண்ணம்—கலவை; சுண்ணம்—வாசனைப் பொடி;

அங்காடி — கடை; வழுதுணங்காய் — கத்தரிக்காய்; கொடிஞ்சி— தாமரைப்பூ வடிவாய்த் தேர்த்தட்டின்முன் நடும் உறுப்பு; நுளைச்சியர்— பரதவப் பெண்கள்; முடங்கல்—கடிதம்.

## கேள்விகள் :

1. காவிரிபுகும் பட்டினத்தில் அரசனது ஆட்சி எங்ஙனம் அமைந்திருந்தது?
2. காவிரிபுகும் பட்டினத்தில் ஏற்றுமதி இறக்குமதியான பொருள்கள் எவை?
3. இந்நகர மக்கள் ஓய்வு நேரத்தை எங்ஙனம் கழித்தனர்?
4. தமிழரசர்களுடைய தலைநகரங்களில் வேற்று நாட்டு ஒற்றர் இருந்து வந்தனர் என்பதற்குச் சான்று தருக.

## பயிற்சி :

காவிரிபுகும்பட்டினம்—காவிரிப்பூம்பட்டினம் ( மரூஉச் சொல். ) இதுபோலவே கோயமான்புத்தூர்–கோயம்புத்தூர்; பெருங்கோழியூர்– பெங்களூர்; மகிஷாசுரபுரி—மைசூர்; சென்னப்பப்பட்டினம்– சென்னப்பட்டினம் முதலியவை மருவி வந்தவை அல்லது சிதைந்து வந்தவை.

உங்களுக்குத் தெரிந்த வேறு சில மரூஉச் சொற்களை எழுது.

---

# 6. திருவிளையாடற் புராணத்தில் வைகை

(டாக்டர். மா. இராசமாணிக்கனார், எம். ஏ., எல். டி,
எம். ஓ. எல்., பி. எச். டி.)

**வைகையின் வரலாறு:**

மதுரையைத் தலைநகராகக் கொண்டு பாண்டி நாட்டை ஆண்டு வந்த மலையத்துவச பாண்டியனால் வளர்க்கப்பட்ட உமா தேவியாரான தடாதகைப் பிராட்டியார், சிவபெருமானை மணக்க விரும்பினார்; சிவபெருமான் மனித உருவில் சுந்தரபாண்டியனாக வந்து பிராட்டியாரை மணந்துகொண்டார். அத்திருமணத்திற்கு வந்தவர் அனைவரும் திருமண விருந்தினை விலாப்புடைக்க உண்டு மகிழ்ந்தனர். ஆனால், சமைத்த உணவுப் பொருள்களுள் பெரும் பகுதி எஞ்சி விட்டது. பூத கணத்தவருள் ஒருவனான குண்டோதரன் பசி நோய் மிக்கவன். எஞ்சிய உணவுப் பொருள்களைத் தின்று பசியாறும்படி சிவபெருமான் அவனை ஏவினார். அவன் எல்லாவற்றையும் உண்டான். நீர் வேட்கை மிகுந்தவனாய் மதுரையைச் சுற்றியிருந்த கிணறுகள், ஓடைகள், குளங்கள் இவை வறளும்படி நீரைக் குடித்தான்; ஆயினும், வேட்கை தணியவில்லை. அவனது வேட்கையைத் தணிக்க விரும்பிய சிவபெருமான் கங்கை ஆற்றை மதுரையின் மதிற்புறத்தில் ஓடும்படி கட்டளையிட்டார்.

கங்கை சிவபெருமானை நோக்கி, "நான் முன்னொரு காலத்தில் உனது ஆணைப்படி பகீரதன் பொருட்டுக் கங்கை என்னும் பெயருடன் பாய்ந்து வந்தேன்; அதில் நீராடுவோர் களங்கத்தைப் போக்கினேன். இன்று என்னைப் புதிய ஆறாக உருவெடுக்கும்படி கூறினை. யான் உருவெடுக்கும் புதிய ஆற்றைக் கண்ணாற் கண்டவர், மூழ்கி நீராடியவர், நீரைக் கையால் தொட்டவர் ஆகியோருக்கும் பிறவித் தொடர்பற்றுநீங்க உள்ளத்தில் மகிழ்ச்சி உண்டாதல் வேண்டும்; அன்பும், மெய்ஞ்ஞானமும், உன்னை உணரும் அறிவும் அவர்கட்கு உண்டாதல் வேண்டும், இவற்றை

அவர்களுக்கு யான் தருமாறு நீ அருள் புரிவாய்,'' என்று வேண்டினாள். சிவபெருமானும் அவ்வாறே அருள் புரிந்தார்.

வரம் பெற்ற கங்கை அளவற்ற வேகத்துடன் எழுந்து பெரிய ஆற்று வடிவாய் வானத்திலிருந்து இறங்குபவள் போல வரலானாள். அவள் ஆற்றின் வடிவமாக வந்த பொழுதும் அவளது பெண் வடிவம் மாறவில்லை. அலைகள் வளையணிந்த கைகளைப் போல இருந்தன. வெள்ளத்தில் வந்த முத்துக்கள் அவளுக்கு அமைந்த முத்து மாலைகளாகக் காணப்பட்டன. வெள்ளத்தில் தோன்றிய நுரைகள் அவளுடைய ஆடைகளாகக் காட்சியளித்தன. ஆற்றில் மிதந்து வந்த பூங்கொடிகள் கங்கா தேவியின் இடையைப் போலக் காட்சியளித்தன. ஆற்றில் தோன்றிய கருமணல் அவளது கூந்தலை ஒத்திருந்தது. வெள்ளத்தில் பிறழ்ந்து சென்ற வாளை மீன்கள் அவள் கண்களை ஒத்திருந்தன.

இங்ஙனம் வந்த புதிய ஆறே வையை என்பது. அது மிக்க விரைவினை உடைய பெருங்காற்றைப் போல வந்துகொண்டிருந்தது. அப்பேராறு மணம் பொருந்திய அகிலையும், வேங்கை மரத்தையும் வேரோடு பறித்தது; வேட்டுவர்களின் சிற்றூர்களை அடியோடு பெயர்த்தது. பெண் மானோடு ஆண் மானையும், குரங்குகளையும், அக்குரங்குகள் உலாவி வந்த மரங்களையும், தினைப்புனப் பரண்களையும் வெள்ளம் இழுத்துச் சென்றது. பேரியாற்று அலைகள் பெரிய மலைகளை மோதின; பள்ளங்களை மேடாக்கின. வெள்ள நீர், மேகத்தை ஊடுருவிய கிளைகளைக் கொண்ட மரங்களைக் கரை இடிந்த இடந்தோறும் தலைகீழாக நட்டுக்கொண்டே சென்றது.

மிக்க வேகத்தையுடைய அப்பேரியாறு மண்ணைத் தோண்டிச் சென்றதால் வராகமூர்த்தியை ஒத்திருந்தது; தயிர்ச் சட்டிகளையும் வெண்ணெய்ச்சட்டிகளையும் வாரிக்கொண்டு வந்ததால், அவ்விரண்டின் மீதும் பெருவிருப்பம் கொண்ட கண்ணபிரானை ஒத்திருந்தது. இங்ஙனம் பெருக்கெடுத்து வந்த வையை

யாற்றில் யானைகள், குதிரைகள், சாமரைகள், முத்துக்கள் என்பன மிதந்து வந்தன. இக்காட்சி, பகையரசரை வென்று அவர் தம் பொருள்களோடு தன் மதுரையம்பதிக்கு மீண்டு வந்த பாண்டிய வேந்தனை ஒத்திருந்தது. அவ்யாற்றில் ஆத்தி மாலைகளும், பனம்பூ மாலைகளும் மிதந்து வந்தன. அவற்றோடு புலிகளும் வேடர்களுடைய விற்களும் வந்தன, ஆங்காங்குக் கயல் மீன்களும் துள்ளிக் குதித்தன. இக்காட்சி, புகழ் மிகுந்த தமிழ் வேந்தராகிய சேர, சோழ, பாண்டியர் மூவரும் கூடிப் பல செல்வங்களோடு வந்ததனை ஒத்திருந்தது. நூல்களை முறைப்படி கல்லாதவர் இயற்றிய செய்யுள்கள் தெளிவின்றிக் கலங்கி நிற்றல் போல, வையை யாற்று நீர் முதலிற் கலங்கியிருந்தது. பல கலைகளிலும் வல்ல புலவர் இயற்றிய செய்யுள் நுட்பமான பொருளை உடையதாய்த் தெளிந்து அனைவரும் விரும்பிப் பயன் பெறுமாறு திகழ்வது போலப் பெரிய நீர்த்துறைகள் காணப் பொருந்திச் சென்ற இடந்தோறும் மணி பொன் முதலிய பொருள்களை உடையதாய், ஆழம் உடையதாகிப் பின் தெளிவடைந்து, எல்லோரும் விரும்பிப் பயன் பெறுமாறு நிலைபெற்றது.

இங்ஙனம் மிக்க விரைவுடனும் சிறப்புடனும் வந்த வையை ஆற்று நீரைக் குண்டோதரன் தனது நீர் வேட்கை தணியும்படி குடித்து மகிழ்ந்தான்.

**வையையில் வெள்ளப் பெருக்கு :**

அரிமர்த்தனபாண்டியன் மதுரையை ஆண்டுவந்தபொழுது மாணிக்கவாசகர் அவனிடம் முதலமைச்சராய் இருந்துவந்தார். அவர் பாண்டியன் ஏவலால் குதிரைகள் வாங்கத் திருப்பெருந் துறைக்குச் சென்றார். அங்குச் சிவபெருமான் குரு வடிவில் வந்து அவருக்கு உண்மை ஞானத்தை உபதேசித்தார். சிவ பத்தியில் ஈடுபட்ட மாணிக்கவாசகர் குதிரை வாங்கக் கொண்டு சென்ற பொருளைக் கொண்டு பெரியதொரு கோயில் கட்டிச் சிவ பெருமானை வழிபடத் தொடங்கினார். இதனை உணர்ந்த பாண்டி

யன் அவர்மீது சீற்றம் கொண்டான். சிவபெருமான் காட்டில் இருந்த நரிகளைப் பரிகளாக்கித் தாம் குதிரைச் சேவகனுகப் பாண்டியனிடம் சென்ருர்; 'மாணிக்கவாசகர் வாங்கிய குதிரைகள் இவை,' என்று பரிகளைக் காட்டி மறைந்தார். அப்பரிகள் இரவில் நரிகளாகி ஊளையிடத் தொடங்கின. பாண்டியன் மிக்க சீற்றம் அடைந்து, மாணிக்கவாசகரைத் தண்டிக்கலானுன். தண்டனையைப் பொறுக்க முடியாத மாணிக்கவாசகர் சிவபெருமானை நோக்கி முறையிட்டார். சிவபெருமான் மாணிக்கவாசகரது பெருமையை அரசனுச்குஉணர்த்த விரும்பி வெள்ளப் பெருக்கெடுத்து வருமாறு வையையை ஏவினுர். உடனே வையை யாறு வெள்ளப் பெருக்குடன் வந்தது.

முன்னெரு காலத்தில் காஞ்சிப் பதியில் மணலால் சிவலிங்கத்தை அமைத்து உமாதேவி வழிபட்ட போது, அவ்வழிபாட்டை அழிக்கச் சிவபெருமானுல் ஏவப்பட்ட கம்பை ஆறு பெருகி வந்தாற்போல, வையை ஆறுமிக்க செலவுடன் வந்தது. வெள்ளப் பெருக்கம், வரிசையாய் இருந்த பாக்கு மரங்களின் பழக்குலைகள் அறும்படி விரைந்து சென்றது; கரைகள் உடையும்படி குத்திச் சென்றது; பழங்கள் சிதறும்படி மரக்கிளைகளைக் கீழே வீழ்த்திச் சென்றது; கரும்புகளையும், தாழை மரங்களையும், முற்றி விளைந்த நெற்கதிர்களையும் வேருடன் வீழ்த்திச் சென்றது. அவ்வெவ்ளம் ஆயிரம் செந்தாமரை மலர்களைப் பரப்பிக்கொண்டு வந்தது! மணிகளையும் மலர்களையும் உடைந்த கரையின்கண் சிதறச் செய்தது; காஞ்சி மரங்களையும், சங்குகளையும், பக்கங்களில் வீசியது.

அவ்வாற்றில் குறிஞ்சி நிலத்து மதுவும், முல்லை நிலத்து நெய்யும், பாலும், தயிரும், மருத நிலத்துக் கருப்பஞ்சாறும், நெய்தல் நிலத்து உப்பாறும் கலந்த, வெள்ள நீர் 'கல்' என்றுஒலித்தது; காவலையுடைய வானளாவிய மதிலின் புறத்தே சென்றுபல இல்லங்களையும் சிறியகுடிசைகளையும் கீழ் மேலாகத் தள்ளி, அவற்றைச் சுமந்து சென்றது. அங்ஙனம் வீடுகளும் குடிசைகளும்மிதந்து சென்றமை, கடலில் நாவாய்களும் தோணி

களும் செல்வது போன்ற காட்சியை அளித்தது. வெள்ள நீர் சில இடங்களில் மதிலேயும் தள்ளி உள்ளே சென்றது. அங்ஙனம் சென்ற நீர் கடைத் தெருவிலும், பிற தெருக்களிலும், அம்பலங்களிலும் தாவிச்சென்றது. அதைக் கண்டு மதுரைக் குடிகள் அஞ்சினர்கள். அவருட்சிலர் தம் பிள்ளைகளை எடுத்துக்கொண்டு ஓடினர்; சிலர் தம் குழந்தைகளைக் காணுமல் அழுதனர்; சிலர் தம் மனைவியரை அழைத்துக்கொண்டு உயிர் தப்ப ஓடினர். வேறு சிலர் புகலிடம் காணுது தவித்தனர். சிலர் தம் உடமைகளை அப்படியே விட்டு ஓடினர்: சிலர் உயர்ந்த மாடங்கள் மீதும், மாளிகைகள் மீதும் ஏறிக்கொண்டனர்.

இங்ஙனம் வந்துகொண்டிருந்த பெரிய வெள்ளத்தினைத் தடுக்க விரும்பிய பாண்டியன் குடிகளைக்கொண்டு கரைகளை உயர்த்தும்படி அமைச்சர்களுக்கு ஆணையிட்டான். அவ் வமைச்சர் குடிகளை ஆராய்ந்து எடுத்து அவர்கள் பெயர்களை எழுதித் தொகை முடிவு கட்டினர்; ஆற்றங்கரையை அளவு கோல் போட்டு அளந்து, கோடு கிழித்து வரையறுத்தனர்; குடிகள் அமர்த்தின கூலியாட்களை அவரவர்க்கு அளந்து வரையறுத்தபடி கரையை உயர்த்துமாறு ஆணையிட்டனர். உடனே கரையின்கண் வேலையாட்கள் மொய்த்தனர். சிலர் மண் வெட்டும் கருவியுடன் கூடையும் கொண்டு வந்தனர்; சிலர் மரங்களைச் சுமந்து வந்தனர்; சிலர் பச்சைத் தழையையும், வைக்கோலேயும் சுமந்துகொண்டு வந்தனர். இவ்வாறு தண்ணீரை முகந்து குடிப்பதற்கு வரும் மேகக் கூட்டம் போலக் கூலியாட் கள் வையைக் கரையில் கூடினர். வேலையாட்கள் மரங்களைக் குதிரைப் பாய்ச்சலாக நிறுத்தினர்; வைக்கோல் முதலியவற்றைப் பாம்பு போல நீட்டி. உருட்டி, நிறுத்திய மரங்களின் அடியிற் கிடத்தினர்; நீண்ட தழைகளை இட்டு நிரப்பினர்; மணலை வெட்டி எடுத்துச் சென்று கரைமீது கொட்டிப் பரப்பினர்.

இங்ஙனம் ஒருவாறு கட்டி முடித்த கரையை உடைப்ப தற்கு வெள்ள நீர் விரைந்து வந்ததைக் கண்டு வேலையாட்கள் உள்ளம் கலங்கினர். அவருட்சிலர், 'வையைத் தாயே, எங்கள்

மீது எல்லையில்லாத கோபம் எதற்கு? நின் கோபம் தணிவதாக,' என்று கூறி வணங்கி, மேலும் மணலைக் கொட்டினர்; உடைப்பு அடங்கியதைக் கண்டு மகிழ்ச்சிப் பெருக்கால் குரவை ஆடினர். இவர் தம் வேலைகளை மேற்பார்க்கக் கோலைக்கொண்ட கையின ராய்ப் பலர் இருந்தனர். அவர்கள், நீண்ட அலைகள் ஒதுங்கி ஓடும்படி மலைபோல உயர்த்திக் கட்டிய கரையின் பகுதிகளைப் பார்த்துக் கணக்குடன் ஒத்திருத்தலைக் கண்டு மகிழ்ந்து சென்றனர்; தம் வேலையைச் செய்யாது சோம்பி இருந்த கூலி யாட்களை ஒறுத்து வேலை வாங்கினர்.

**வையையில் புனல் வாதம் :**

மதுரையை ஆண்ட பாண்டிய மன்னருள் நெடுமாறன் என்பவன் ஒருவன். இவனுக்கு முதுகு கூனாய் இருந்த காரணத்தால், 'கூன்பாண்டியன்' என்ற பெயரும் வழங்கி வந்தது. இவன் மனைவியார்பெயர் மங்கையர்க்கரசியார் என்பது. அவர் சோழர் மரபில் வந்தவர். நெடுமாறன் சமண சமயத்தைத் தழுவியிருந்தான். மங்கையர்க்கரசியாரோ, சிறந்த சிவபத்தராக இருந்தார். தம் கணவரை எவ்வாறேனும் சைவராக்க வேண்டும் என்று அம்மையார் இறைவனை நாளும் வேண்டினார்.

ஒரு நாள் திடீரென மன்னனுக்குக் கடுமையான காய்ச்சல் வந்துற்றது. சிறந்த பல மருத்துவர்கள் முயன்றும் மன்னனின் காய்ச்சலைப் போக்க முடியவில்லை. இந்நிலையில் சைவ சமய குரவருள் ஒருவரான திருஞானசம்பந்தர் மதுரைக்குச் சென்றார். ஞானசம்பந்தர் மன்னனின் நோயை மட்டும் போக்கியதோடு அமையாது, அவன் கூனையும் போக்கினார். சமணருள் எவரா லும் செய்தற்கரிய செயலை ஞானசம்பந்தர் செய்து முடித்தமையின், மன்னன் அவர்பால் பேரன்பு கொண்டான்; சைவ சமயத்தைத் தழுவினான். இந்நிகழ்ச்சி நகரில் பரபரப்பை உண்டு பண்ணியது. 'சமணம்—சைவம் இரண்டனுள் சிறந்தது எது?' என்ற கேள்வி எழுந்தது. இரு சமயத்தாரும் தம் மதங் களின் சிறந்த கருத்துக்களைத் தனித்தனியே பனையோலைகளில் எழுதித் தீயிலிடின் வெந்து போவது தாழ்ந்தது என்றும், தீயினால்

சுடப்படாது இருப்பதுதான் உயர்ந்தது என்றும் முடிவு செய்து கொண்டனர்; அவ்வாறே ஓலைகளைத் தீயிலிட்டனர். சமண சமயக் கருத்துக்கள் அடங்கிய ஓலைகள் வெந்து சாம்பலாயின. சைவ சமயக் கருத்துக்கள் அடங்கிய ஓலைகள் இட்டவாறே இருந்தன. இந்நிகழ்ச்சியாலும் சமணர் அமைதியுறவில்லை; முன்னர்ச் செய்தபடியே இரண்டு சமயங்களின் கருத்துக்களையும் தனித்தனியே ஓலைகளில் எழுதி வையையாற்றில் போட்டவுடன் ஆற்றின் போக்கை எதிர்த்து இருப்பதுதான் உயர்ந்தது என்றும், ஆற்றின் போக்கோடு இயைந்து செல்வது உயர்ந்ததாகாது என்றும் கூறினர். இரு சமயத்தாரும் ஆற்றில் ஓலைகளை இட்டனர். சைவ சமய ஏடுகள் ஆற்றின் போக்கை எதிர்த்துச் சென்றதைக் கண்டு சமணர் வெட்கினர். பின்னர் ஏடுகளைத் தேடும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது. வில்வ மரங்கள் அடர்ந்த சூழலில் ஏடுகள் காணப்பட்டன. புதிதாக ஓர் இலிங்கமும் அங்கு இருந்தது. மன்னன் ஏடுகளையும் இலிங்கத்தையும் கண்டு மகிழ்ந்தான்; இலிங்கத்தை உள்ளடக்கி அழகிய ஒரு கோவிலைக் கட்டி முடித்தான். இக்கோவிலே **திருவேடகம்** ( திரு + ஏடு + அகம் ) எனப்பட்டது. இத்திருக்கோவிலுக்குப் பின் புறமாக வையை யாறு செல்கின்றது. சம்பந்தர் பாடிய பதிகம் ஒன்று இத்தலத்திற்கு உண்டு.

## அருஞ்சொற்பொருள் :

வேட்கை—தாகம்; களங்கம்—மாசு, பாவம்; சீற்றம்—கோபம்; ஒறுத்து—தண்டித்து; பதிகம்—பத்துச் செய்யுட்கள்; சூழல்—இடம் புனல் வாதம்—வெள்ளத்தில் இட்டுச் சோதிப்பது.

## கேள்விகள் :

1. கங்கை சிவபெருமானிடம் வேண்டியது என்ன?

2. கங்கை வையையாக மாறிய போது அளித்த காட்சியை வருணிக்க.

3. வையை யார் யாருக்கு ஒப்பிடப்பட்டுளது? ஏன்?

4. அரிமர்த்தனபாண்டியன் காலத்தில் வைகை பெருக்கெடுத்து வந்தது ஏன்?

5. இப்போது அது செய்த அழிவினை விளக்குக.

6. வைகையின் வெள்ளம் எவ்வாறு தடுத்து நிறுத்தப்பட்டதென்பதை விளக்குக.

7. வைகை சமணர்களை வெல்வதில் சம்பந்தருக்கு எங்ஙனம் உதவியது?

பயிற்சி :

நீங்கள் கண்ட ஒரு வெள்ளப் பெருக்கினை 25 வரிகளில் விரித்தெழுதுக.

# 7. தலைக்கொடையாளி

(ரா. கிருஷ்ணமூர்த்தி, எம். ஏ., எல். டி., பி. ஓ. எல்.)

இற்றைக்கு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர்த் தமிழ் நாட்டில் ஒரு பகுதியாக உள்ள கொங்கு நாட்டில் கொழுமம் என்னும் நகரில் குமணன் என்னும் வண்மையாளன் ஒருவன் வாழ்ந்திருந்தான். அவன் முதிரம் என்னும் இயற்கை வளமிக்க மலையையும், அதனைச் சூழ்ந்த நாட்டையும் தனக்கு உரிமையாகக் கொண்டு சிற்றரசு செலுத்தி வந்தான். அவன் பொருட் செல்வத்தோடு கல்விச் செல்வமும் வைகரப் பெற்றவன் ஆதலின், கலைவாணர்களை வறுமைப் பிணியினின்றும் அகற்றி அவர்களைப் பாதுகாப்பதில் பெரிதும் நாட்டமுடையவனாக விளங்கினான், தன்னைப் பாடிவரும் புலவர்கட்குப் பொன்னும் களிறும் பரிசாக வரையாது வழங்கினான்.

இத்தகைய குமணனுக்குத் தம்பி ஒருவன் இருந்தான். அவன் இளங்குமணன் என்று கூறப்படுவான். குமணன் அரசுரிமையோடு பெருஞ் செல்வத்தையும் உடையவனாய்ப் பெரும்புகழ் பெற்று விளங்குவதைக் கண்ட இளக்குமணனுக்குப் பொறாமை வளர்ந்தது. அதனால் நாட்டினையும் செல்வத்தையும் கவர வேண்டுமென்ற தீய எண்ணமும் அவனிடம் மிகுந்தது; எப்படியும் குமணனைக் கொன்று செல்வத்தைக் கைப்பற்றுவதென்று தனக்குள்ளே முடிவு செய்தான். இங்ஙனம் அவன் செய்துள்ள வஞ்சகக் கருத்து எப்படியோ குமணனுக்குத் தெரிந்து விட்டது. குமணன் தன் தம்பியின் வஞ்சகச் சூழ்ச்சி பற்றி மிகவும் இரங்கினான்; "இந்நாட்டின் ஆட்சி தனக்கு வேண்டுமெனத் தெரிவிப்பின் யாதொரு தடையுமின்றி அளித்திருப்பேனே! இவனது இச்செயல் எங்கள் குடிக்குப் பெரும்பழி தருவதாகவன்றோ இருக்கிறது? அந்தோ!" என்று பலவாறாக எண்ணித் துன்பமுற்றான். "இந்தத் தீய எண்ணம் இவனுக்கு இந்நாட்டாட்சியில் உள்ள

வேட்கையாலன்றோ விளைந்தது? இந்நாட்டினையும் செல்வத்தையும் இளங்குமணன் எடுத்துக் கொள்வானாக. இதோ நான் இந்நாட்டை விட்டுக் காட்டை இருப்பிடமாகக் கொள்வேன்,'' என்று தனக்குள் கருதி முடிவிட்டு நள்ளிரவில் யாரும் அறியாது கரந்து கானகத்துள் புகுந்துவிட்டான்.

குமணன் காடு சென்றதும், இளங்குமணன் ஆட்சியைக் கைப்பற்றியதும் நகரமெங்கும் பரவின. நகர மக்கள், அரிய குணச் செம்மலாகிய குமணன் பிரிவினால் பெரிதும் வருந்திக் கவலையுள் மூழ்கினர். இராமன் வனவாசம் சென்ற அன்று அயோத்திமா நகரம் பொலிவிழந்து காணப்பட்ட காட்சி போலிருந்தது, கொழும நகரத்தின் காட்சி.

ஆட்சியைக் கவர்ந்த இளங்குமணன், நகர மக்கள் குமணன் பிரிவினால் வருந்துவதை அறிந்து, "இவர்கள் மீண்டும் குமணனைக் கொணர்ந்து ஆட்சியில் அமரும்படி செய்தலும் கூடும். ஆதலால், குமணனைக் காட்டிலும் விட்டுவைத்தல் கூடாது. அவனை அறவே தொலைத்துவிட வேண்டும்,'' என்று துணிந்து கொண்டான்; குமணன் மீது பரிவு காட்டுகின்றவர்கட்குக் கடுந்தண்டனை விதிக்கப்படுமென்றும் அறிவித்தான்; குமணன் தலையைக் கொய்து கொண்டு வருகின்றவர்கட்குக் கோடிப்பொன் பரிசில் தருவதாகவும் பறையறைந்து யாவருக்கும் தெரிவித்தான். நாடு நகரங்களில் வாழும் மக்கள் எல்லாரும் இளங்குமணனது இக்கொடுஞ்செயலை அறிந்து எல்லை இல்லாத துன்பக் கடலுள் மூழ்கினர்.

இஃது இங்ஙனமாக, சோழ நாட்டில் ஆவூர் என்னும் ஊரில் பெருந்தலைச் சாத்தனார் என்னும் புலவர் ஒருவர் இருந்தார். அவர் தமிழ்க் கடலைக் கடந்து கரைகண்டிருந்தும் வறுமைக் கடல் கடக்க முடியாது வருந்தினார். ஆதலால், தம் வறுமையைப் போக்க வள்ளல்களாக உள்ளவர்களைப் பழுமரம் தேரும் பறவைகள் போலத் தேடிச்சென்று, அவர்களைப் பாடி அவ்வண்மையாளர்கள் தரும் பரிசிற்பொருளால் வாழ்க்கையை நடத்தி வந்தார். அப்புலவர் வழக்கம் போலக் கொடைக் குண

மிக்கவர்களைக் கண்டு பாடுவதற்காகப் புறப்பட்டுக் காட்டு வழியாக வந்து கொண்டிருந்தார்.

அப்போது **பெருஞ்சித்திரனார்** என்னும்புலவர் குமணனிடம் சென்று பெரும் பரிசில் பெற்றுத் திரும்பி வந்து கொண்டிருந்தார். அவர், எதிர்ப்பட்ட புலவரை நோக்கி, "புலவீர்! நீர் வறுமையால் நலிந்து, உடல் மெலிந்து காணப்படுகின்றீர்; குமணன் என்னும் வள்ளல் ஒருவன் இருக்கின்றான். அவனைக் கண்டு, பாடிப் பரிசில் பெற்று நான் வருகின்றேன். அவனிடம் நீரும் செல்லுவீராயின், உமது வறுமை நோய் முழுவதும் அகலும். அவன் வளமிக்க முதிர மலைக்குரியவன்; முதிர்ந்த கல்வி யறிவினன்; பாவாணர் வறுமைக்குப் பகைவன்; அவனிடம் விரைந்து செல்லுமின்," என்று சாத்தனாரைக் குமணனிடம் வழிப்படுத்தினர். அதனைக்கேட்ட சாத்தனார் மன மகிழ்ச்சி யுடன் புலவரிடம் விடை பெற்றுக்கொண்டு, குமணனது நாடு நோக்கி விரைந்து வந்து அடைந்தார். புலவர், குமணனது கொழுமம் என்னும் நகரத்துக்குள் புகுந்த போது குமணன் நாட்டை விட்டுக் காடு சென்றுவிட்ட செய்தியைக் கேள்வி யுற்றார்; கேள்வியுறலும் அவரடைந்த துன்பமோ அளவிடற்கரி யதாயிற்று! இளங்குமணன் அப்போது அரசனாக விளங்கினாலும் தன் அண்ணனாகிய குமணனுக்குத் தீங்கிழைத்த கொடியோன் என்பது பற்றி அவனைக் காண்பதற்கும் புலவர் விரும்பவில்லை; காடு பற்றி இருந்த அருங்குணச் செம்மலாகிய குமணனையே காண்பதற்கு விரும்பினார்.

புலவர் காடு நோக்கிச் சென்று ஆங்கு அலைந்து திரிந்தார். பின்னர்ப் புலவர் குமணனைக் காட்டில் ஓர் இடத்தில் கண்டு, மிகவும் களிப்புற்றார். அவனை அணுகி, "புலவர் பசி தொலைக்கும் வள்ளலே! வாழிய! வாழிய!" என வாழ்த்தினார். வாழ்த்தொலி கேட்ட குமணன், புலவரைக் கண்ணுற்று! "செந்தமிழ்ச் செல்வீர்! வருக! உம் வரவு நல்வரவாகுக உங்களைக் காண நான் பண்ணிய புண்ணியம் எத்தகையதோ!" என்று பலவாறு அன்பு கனிய முகமனுரைத்துப் புலவரைத்

தழுவி அமரச்செய்தான். பின்னர்க் குமணன் புலவரை நோக்கி "நாட்டில் பல செல்வர்கள் இருப்பவும், நாடு இழந்து கானில் வாழும் என்னைக் காணத் தாங்கள் வந்தது எதுபற்றி?" எனப் புலவரை நோக்கி வினவினன். அதற்குப் புலவர் குமணனை நோக்கி "ஐய, எட்டி மரம் அகத்தருகில் பழுத்திருப்பினும் அதனை அணுகுவார் யார்? இனிமை மிக்க தேன், கானகத்தில் மிக உயர்ந்த கொம்பில் இருப்பினும், அதனை எடுத்து உண்பதற்கு விரும்புவர் உலகோர்," என்று எடுத்துரைத்தார். பின்னர்த் தாம் வந்த கருத்தையும் குமணனுக்கு உணர்த்த நினைத்துத் தாமும் தம் மனைவி மக்களும் வறுமையால் வாடி வருந்துவதை ஓர் ஓவியத்தில் வரைந்து காட்டுவது போல ஒரு பாட்டின் மூலம் குமணன் மனம் கரைந்துருகுமாறு தெரிவித்தார், மேலும், "ஆறு பெருக்கற்று அடிசுடும் நாளிலும் தனது ஊற்றுப் பெருக்கினல் உலகத்தை ஊட்டும். அது போல, நீயும் வறுமையுற்ற இந்நிலையிலும் ஏதேனும் எனக்களித்து என் வறுமையைக் களைவாய் என்பது உறுதியே," என்றும் எடுத்துரைத்தார். இதனைக் கேட்ட குமணன், "அந்தோ! என் செய்வது! இப்புலவர் வறுமைத் துன்பம், நான் நாடிழந்ததைக் காட்டிலும் மிகப் பெரியதாயிருக்கின்றதே! இப்புலவர் பெருமானின் வறுமைநோய் நீக்கும் வலிமையின்றி, நான் வீணுக உலகில் இருக்கின்றேனே! இது மிகவும் இழிவானதன்றோ! ஈவது இயலாதாயின்சாவது இனிது என்பதுஅறிவுரையன்றோ?" என்றுபல கூறிவருந்தினன். அங்ஙனம் வருந்திய குமணனுக்குத் தன் தம்பி தன் தலைகொணர்வார்க்கு விலையாகக் கோடிப்பொன் தருவதாகப் பறையறைந்திருக்கும் செய்தி நினைவிற்கு வந்தது. வரலும் குமணன் வறியோர் புதையற்பொருள் கண்டது போலக் களிப்பென்னும் கடலுள் ஆழ்ந்தான். "இத்தகைய எளிமையான நிலையிலும் இரப்பவர்க்கு இல்லை என்று சொல்லாத பெரும் பேற்றை நான் பெறுமாறு செய்த என் தம்பியினும் எனக்கு இனியார் இனி யார் உளர்? என் தலைக்குக் கோடிப் பொன் தருவதாகப் பறைசாற்றியது எனக்கு எவ்வளவு நலம் பயப்பதாகப் உள்ளது!" என்று தனக்குள் கருதித் தன் தலையைப்

புலவருக்குக் கொய்து கொடுத்துத் தன் தம்பியிடம் கோடிப் பொன் பெறுமாறு செய்ய நினைத்தான். பின்பு குமணன் புலவரை நோக்கி,

"அந்தநாள் வந்திலீர் அருந்தமிழ்ப் புலவீர்!
இந்தநாள் வந்துநீர் நொந்தனிர் அடைந்தீர்!
தலைதனைக் கொடுபோய்த் தம்பிகைக் கொடுத்ததன்
விலைதனைப் பெற்றும் வெறுமைநோய் களைமின்."

என்று தலையைக் கொய்து புலவருக்குக் கொடுக்க முற்பட்டான், புலவர் இதனைக் கேட்டலும் துணுக்குற்றார்; துடிதுடித்தார்; அவனது கைவாளைக்கைப்பற்றினர்; பின்னர், குமணனை நோக்கி, "வள்ளலே, 'தலைக்கொடையாளி' என்னும் பெயர் இப்போது உண்மையேயாயிற்று. இவ்வமயம் நீ உன் தலையைக் கொடுத்தலால் உனக்குப் பெரும்புகழும், எனக்கு அழியாப் பழியுமன்றோ உண்டாகும்? ஒருவன் பழிதரும் செயலைச் செய்து பெறும் செல்வத்தைவிடமிகுந்த வறுமையே மேலானது என்பது தமிழ் மறை கூறும் அறிவுரையன்றோ? நிலையாத செல்வத்தின் பொருட்டு உலகம் உள்ளளவும் நீங்காத வசையை நான் அடைதல் நெறியாகுமோ?" என்று புலவர் எடுத்துரைத்தார். உரைத்த புலவர், பின்னர்யாரேனும் புலவர்கள் வரின், குமணன் தன் தலையைக் கொய்து கொடுத்தலும் கூடும் என்று நினைத்துக் குமணனை நோக்கி, "உன் தலை இனிமேல் என் தலையாயிற்று. வேறு பரிசிலர் எவருக்கும் இதனைக் கொடுக்கும் உரிமை உனக்கில்லை. நான் வேண்டும் போது பெற்றுக்கொள்வேன்; அது வரை நீ கவனமாக இதனைக் காத்துக்கொள்ள வேண்டும். இந்த எனது வேண்டுகோளை நீ ஏற்றுக்கொள்வாயாயின், இதுவே நான் உன்னிடமிருந்து பெறும் பெரும்பரிசிலாகும்," என்று கூறி அவனது கொடைச்சிறப்பைப்பலவாறு புகழ்ந்துரைத்தார்.

பின்பு புலவர், "இவ்வாளுடன் இளங்குமணனிடம் சென்று, குமணனது பெருங்குணங்களை அவனுக்கு எடுத்துரைத்து, எவ்விதத்திலும் இருவரையும் அன்பர்களாக்குவேன்; குமணனை மீண்டும் அரசிருக்கையில் அமரச் செய்வேன்,"

என்று தம் உள்ளத்தில் நினைந்து அச்செயலை மேற்கொண்டார்; தம் வறுமைத் துன்பத்தை எல்லாம் மறந்தார்; குமணனை நோக்கி, "அரசே! சில நாட்களுள் மீண்டும் வந்து உன்னைக் காண்பேன்," என்று கூறி விடை பெற்றுச் சென்றார். சென்றவர், கொழுமநகரில் புகுந்து வாளோடு இளங் குமணன் அவைக்களம் அடைந்தார்.

இளங்குமணன் செல்வக் களிப்பில் மூழ்கி இறுமாந்த தோற்றத்தோடு குமணன் தலை கொணர்வாரை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். புலவர் தம் வரவை வாயில் காவலாளரைக் கொண்டு இளங்குமணனுக்குத் தெரிவித்தார். இளங்குமணன், 'வாளுங்கையுமாக நிற்கின்ற புலவரைத் தடைசெய்யாது உள்ளே வரவிடுக." எனக் கட்டளையிட்டான். புலவர் பின்பு உள்ளே சென்று அவையில் கொடுமையே ஒருரு எடுத்தாற்போல வீற்றிருக்கும் இளங்குமணனைக்கண்டார். அவனும் புலவர்க்கு இருக்கை அளித்துத் "தாங்கள் வந்தது யாது கருதியோ?" என்றான். புலவர் உடனே, "அரசே, ஒன்றும் நிலையாத இவ்வுலகத்தில் நிலைத்திருப்பது புகழ் ஒன்றே. இந்த உண்மையை அறிந்து தன் செல்வமெல்லாவற்றையும் இரந்தோர்க்கெல்லாம் இல்லையென்று சொல்லாது அளித்து, இவ்வுலகில் தன் புகழை நிலை நிறுத்திய உன் அண்ணனாகிய குமண வள்ளலைக் காட்டில் கண்டு பாடி நின்றேன். அவன் 'வறுமையால் வாடிய புலவன் பரிசில் பெறாது வாட்டத்துடன் செல்வது நான் என் நாட்டை இழந்ததினும் இன்னாதது' என்று நினைந்தான். கொடுக்கப் பொருள் இல்லாமையால் தன்னையே எனக்குப் பரிசிற்பொருளாகக் கொடுக்கத் துணிந்து, தன் தலையைக் கொய்து உன்னிடம் காட்டிக் கோடிப் பொன் பெற்றுக்கொள்க என்று சொல்லித் தன் தலையைத் துணிக்கத் துணிந்து வாளைக் கழுத்தில் வைத்தான்; உடனே நான் தடுத்து வாளைக் கைப்பற்றினேன்; அந்த வாள் இந்த வாள்தான்; பார்ப்பாயாக," என்று காண்பித்தார். அன்றியும், புலவர் இளங்குமணனை நோக்கி, "இந்த வையமும் அரச வாழ்வும் அடைய வேண்டுமென்பது உன் கருத்தானால் அதனை

நீ சிறிதுதெரிவித்திருப்பினும் அவன்அவற்றைஉனக்குக்கொடுக்க ஒரு சிறிதும் மறுத்திரான். பிறர் துன்பம் தொலைக்கத்தன்னையே கொடுத்துவிடத் துணியும் வள்ளலன்றோ உன் தமையன்? நீ இந்த அழியும் செல்வத்தின் பொருட்டு உடன் பிறப்பின் தொடர்பான அன்பினை அழித்துவிட்டாயே! நீங்கள் இருவரும் ஒற்றுமையுடனிருப்பின் உங்கள் பகையரசரெல்லாம் உங்கட்கு அடங்கி நடப்பார்களன்றோ?'' என்று சிறந்த அறிவுரைகளை இளங்குமணனுக்கு எடுத்துரைத்தார். இவ்வுரைகளைக் கேட்ட இளங்குமணன் தன் தவறுகளை உணர்ந்தான்; தான் தமையனுக்கு இழைத்த தீங்கினை நினைந்து நினைந்து இரங்கினான்; உடன் பிறப்பாகிய பாசத்தில் கட்டுண்டான்; தன் அண்ணனை அழைத்து வந்து அரியணையில் அமரச் செய்து அரசு புரியுமாறு செய்யத் தன் உள்ளத்தில் முடிவிட்டான்.

பின்பு அவன் புலவரை நோக்கி வணங்கி, ''ஐய, நான் செய்த பிழைகளைப் பொறுத்து, எனதண்ணலை அழைத்துவந்து ஆட்சி புரியச் செய்வது தங்கள் கடமையாகும்; அதனை இன்றே செய்யவும் வேண்டும்,'' என்று பணிந்துரைத்தான். புலவர் தமதெண்ணம் கைகூடியது பற்றி அளவற்ற மகிழ்ச்சியுற்றார்; அப்படியே செய்வதாக உடன்பட்டு இளங்குமணனுடன் காட்டிற்கு விரைந்து சென்றார். குமணனைக் கண்டதும் தம்பி விரைந்தோடி அவனது அடி தன்முடிமீதுபட வணங்கினான்; ''சிறியேன் தெரியாது செய்த பிழைகளை யெல்லாம் பொறுத்தருளி ஒளியாரும் மணிமுடி சூடி உலகைப் புரந்திடுக; இதற்கு உடன்பட்டு வாராவிடின் நான் உன் அடியின் கீழ் வீழ்ந்து உயிர்விடுவேன்; இஃது உறுதி,'' என்று கழிவிரக்கங் கொண்டு வேண்டினான். அதனைக் கேட்ட குமணன் தம்பியை நோக்கி, '' எனக்குக் காடுறை வாழ்க்கையே இனிமை யாக இருக்கிறது; இதனை நுகர்ந்த என் மனம் நகர வாழ்க்கையை இனி விரும்புமோ? நீயே அரசாள்வாயாக இதுகாறும் நீ எனக்கு ஒரு சிறிதும் இன்னல் விளைவித்ததாக என் மனம் எண்ணியதில்லையே! நீ பிழை பொறுக்க வேண்டுமென்று

என்னை வேண்டியது ஏன்? இப்போது நீ என்னை நாட்டிற்கு அழைப்பதுதான் பெருந்துன்பம் தருவதாக உள்ளது'' என்று மறுத்துரைத்தான்.

இச் சொற்களைப் புலவர் கேட்டதும் குமணனை நோக்கி ''தலைக் கொடையாளியே! இத்தலையில் உனக்கு யாது உரிமை இருக்கிறது? இது எனக்கு நீ முன்னமே அளித்த தலையாயிற்றே! என் தலையில் முடிசூட்ட நான் நினைந்தால் அதற்குத் தடை யாதுளது?'' என்று குமணன் மறுக்க முடியாதபடி திறம்பட எடுத்துரைத்தார்.

பின்னர்க் குமணன் புலவர் வாய்மொழியை மறுப்பதற்கு அஞ்சி இருவரது வேண்டுகோட்கும் இணங்கினான். கவியரச ராகிய சாத்தனாரும், இளங்குமணனும் குமண வள்ளலை அழைத்துக்கொண்டு வந்தனர். நகர மக்கள் யாவரும் எல்லை இல்லா இன்பக் கடலில் மூழ்கி எதிர் சென்றழைத்தனர். புலவர், அரசவைக்குக் குமணனை அழைத்துச் சென்று அரியணையில் அமரச் செய்து தம் திருக் கரத்தால் மணிமுடியை எடுத்து அவன் தலையில் அணிந்தார். ஊரெல்லாம்ஒல்லென்றுமகிழ்ச்சிஆரவாரம் ஒலித்தது. இளங்குமணன் குமணனது மனக் குறிப்பின்படி தவறாது ஒழுகி வந்தான். நாடு பண்டு போல மழை வளம் மிகுந்து பசிப்பிணியின்றிச் செல்வத்தால் சிறந்து விளங்கிற்று.

பின்னர்க் குமணன்புலவரது அளக்க முடியாத அறிவாற்றல் களையும், நற்பண்புகளையும் வியந்தான்; அவர் கரங்களைப் பற்றி அழைத்துக்கொண்டு போய்த் தன் கருவூலத்தைத் திறக்கச் செய்து, 'புலவர் போதும் போதும்,' என மறுக்கும்படியாய்ப் பொன்னும் மணியும் அணியும்வழங்கினான்; பல நிலபுலங்களையும் அளித்தான். புலவரும் குமணனது கொடையைப் புகழ்ந்து பாடல்கள் பல பாடி அவனிடம் விடை பெற்றுக்கொண்டு, தம்மூர் சென்று வறுமை என்பதனை அறவே அறியாது மகிழ்ந்து வாழ்ந்தார்.

## அருஞ்சொற்பொருள் :

வண்மையாளன்—கொடையாளி; கைவரப் பெற்று—அடையப் பெற்று; நாட்டம்—விருப்பம்; வரையாது—யாவருக்கும் இல்லை என்னாது; களிறு—யானை; இளவல்—தம்பி; ஈட்டிய—தேடிய; புழுங்கினர் — வருந்தினர்; வேட்கை — ஆசை; கொடுபோய்—கொண்டுபோய்; களைவாய்—நீக்குவாய்; தமிழ்மறை—திருக்குறள்; வசை — பழி; கரந்து — மறைந்து; இரந்தோர் — யாசித்தோர்; பாவாணர்—புலவர்.

## கேள்விகள் :

1. தலைக் கொடையாளி யார்? அவனது மலையும், நாடும், ஊரும் எவை?
2. இளங்குமணன் தன் அண்ணனுக்குரிய நாட்டை எப்படிக் கைப்பற்றினான்?
3. காட்டில் வசிக்கும் குமணனைக் கொல்ல இளங்குமணன் கருதியது ஏன்?
4. குமணனைக் கொல்லுமாறு இளங்குமணன் மேற்கொண்ட சூழ்ச்சி யாது?
5. பெருந்தலைச் சாத்தனார் காட்டில் குமணனிடம் யாது வேண்டினர்?
6. குமணன் புலவருக்கு அளித்த பரிசில் யாது?
7. பெருந்தலைச்சாத்தனார் இளங்குமணனது மனத்தை எங்ஙனம் மாற்றினார்?
8. குமணன் தான் இழந்த நாட்டை மீண்டும் அடைந்தது எப்படி?

## பயிற்சி :

### இடைச்சொல்

பெயருமாகாமல், வினையுமாகாமல் அவற்றின் இடையே பொருந்திச் சிற்சில பொருள்களைத் தெரிவித்து வரும் சொற்கள்

இடைச் சொற்களாம். அவை வேற்றுமை உருபுகளும்; அன், ஆன் முதலிய விகுதிகளும்; சாரியைகளும்; போல, புரைய முதலிய உவம உருபுகளும் ஆகும்.

(உ-ம்) இராமனைக் கண்டான்.

(இராமன் + ஐ-இதில் 'ஐ' என்னும் இரண்டாம் வேற்றுமை உருபு இடைச்சொல். படித்தனன் (படி + த் + த் + அன் + ) படி—பகுதி; த்—சந்தி; த்—இடைநிலை; அன்—சாரியை; அன்—விகுதி; இதில் சாரியையாகவும் விகுதியாகவும் வந்துள்ள அன் இடைச் சொல். புலி போலப் பாய்ந்தான்—இதில் போல என்பது இடைச் சொல்.

கீழ் வரும் தொடர்களிலுள்ள இடைச் சொற்களை எடுத்து எழுதுக.

1. குமணனும் வந்தான்; 2. தாமரை போன்ற முகம்; 3. சென்னைக்குச் சென்றான்; 4. நாட்டை இழந்ததின் இன்னாதது.

---

# 8. மாதவி நடனம்

(புலவர், அ. நடராசனர்)

நந்தமிழ்நாட்டில் இன்கலையாம் நுண்கலைகள் பலவும் பண்டு தொட்டே மிகவும் பயின்று வந்தன என்பதற்கு நமது பழம் பேரிலக்கியங்களுள் சான்றுகள் பலவுள. நடனம், இசை, ஓவியம், சிற்பம் என்பன அத்தகைய நுண்கலைகளுள் சிலவாகும். இக்கலைகளைக் கடைபோகக் கற்ற கலைஞர்கள் மக்களை இவற்றால் களிப்பித்து வந்தனர். அவர்களைப் போற்றிப் புறந்தருதற்குப் பெருநில மன்னரும், குறுநில மன்னரும் பெருமகிழ்வுடன் காத்துக்கொண்டிருந்தனர். பாணர், பொருநர், விறலியர், கூத்தர் கண்ணுள் வினைஞர் (ஓவியர்) என்போர் இக்கலைகளில் வல்லவர் களாய் இவற்றையே தம் தொழிலாகக் கொண்டு வாழ்ந்து வந்தனர். தம் புரவலருடைய அவைக்களங்களில் அவர்கள் தம் கலைச்சிறப்பைக் காட்டிப் பெரும்பரிசில்கள் பெற்றனர்.

இங்ஙனம் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பு நடனக் கலையில் தலைசிறந்திருந்த மாதவியின் நுண்கலைத்திறனை இளங்கோ வடிகள் என்னும் முனிவர் எழுதிய சிலப்பதிகாரம் என்னும் சீர்மிகு காப்பியம் நன்கு எடுத்தியம்புகின்றது. அதனை ஈண்டுச் சிறிதே காண்போம்.

ஒருகால் இந்திரனது அவைக்குச் செந்தமிழ் முனிவர் அகத்தியர் சென்றார். அவ்வமயம் நாரத முனிவர் யாழிசைக்கத் (ஆடலில் மூத்தவளான) தோரிய மடந்தை வாரம் (பின்னணி இசை) பாட, உருப்பசி என்னும் நடனமாது விருப்புறு நடன மொன்று ஆட விருந்தாள். ஆனால், அவள் ஆங்கிருந்த இந்திரன் மகனான சயந்தனைக் கண்டு காதலால் மயங்கி ஆடாது நின்று விட்டாள். சயந்தனும் அவள் அழகிலும், கலை எழிலிலும் ஈடு பட்டு மெய்ம்மறந்து நின்றான். இருவருடைய நிலையையும் கண்டு வெகுண்ட அகத்தியர், "நீவிர் இருவீரும் புனிதமான நாட்டியக்

கலையை இழிவு படுத்திவிட்டீர்கள்; ஆதலால், உலகில் பிறக்கக் கடவீர்கள்!'' என்று சாபமிட்டார். அவ்வாறே உருப்பசி மாதவி யாகவும், சயந்தன் மூங்கிலாகவும் உலகில் பிறந்தார்கள். அந்த மாதவியின் மரபில் வந்தவளே சிலப்பதிகாரத்தில் கூறப்படும் மாதவி என்ற நாடகக் கணிகை. அவள் தாய் சித்திராபதி என்பாள். இச்செய்தியை இளங்கோவடிகள்,

"தெய்வ மாம்வரைத் திருமுனி அருள,
எய்திய சாபத்(து) இந்திர சிறுவனொடு
தலைக்கோல் தானத்துச் சாபம் நீங்கிய
மலைப்பருஞ் சிறப்பின் வானவர் மகளிர்
சிறப்பிற் குன்றாச் செய்கையோடு பொருந்திய
பிறப்பிற் குன்றாப் பெருந்தோள் மடந்தை
தாதவிழ் புரிகுழல் மாதவி''

என்ற அடிகளில் குறிப்பிடுகின்றார். மாதவியும் சயந்தனும் உலகில் பிறந்து நாடக அரங்கில் ஒன்று சேர்ந்து சாபம் நீங்கப் பெற்றனர் என்பதே கதை. சாபம் நீங்கி வானுலகடைந்த மாதவியின் வழித் தோன்றலாகிய நம் மாதவி ஐந்தாம் அகவையில் அக்கலையில் நிறைவு பெற்றாள். அவளிடம் ஆடல், பாடல், அழகு முதலியன வெல்லாம் ஒருங்கே அமைந்திருந்தன. இளமை யெழில், அகன்ற கருவிழிகள், மலர்ந்த முகம், மென்மையான தோள்கள் முதலியவற்றால் அவள் காண்போர் கருத்தைக் கவரும் தன்மை உடையவளானாள்; அத்தகைய ஆடலணங்கினைக் கரிகால் வளவன் முன்னிலையில் ஒரு நாள் அக்கால மரபுக்கேற்ப அரங்கேற்ற விரும்பினர் அவள் தாயும் ஆசிரியர்களும்.

அவளது நடனத்திற்காகச் சிற்பநூல் இலக்கணப்படி அரங்கு மிக அழகாக அமைந்திருந்தது. ஊருக்கு நடுவில் தேரோடும் தெருக்களை நோக்கி அதற்கு நிலம் தேர்ந்தெடுக்கப்பட்டது. பொதியத்தினின்று கொணரப்பெற்ற பருத்தி மூங்கில் ஒன்றில் இருபத்து நான்கு விரலளவு நீளமுள்ள ஒரு கோலை நறுக்கி, அதனால் எட்டுக் கோல் நீளம், ஏழு கோல் அகலம், ஒரு கோல்

உயரம் அளந்து செய்யப்பட்ட மேடையொன்று அமைக்கப் பட்டது. அதன்மேல் தூண்களை நிறுத்தி நான்கு கோல் உயர மாகச் சித்திர விதானம் பொருத்தப் பெற்றது. தூண்களின் நிழல் ஆடுமிடத்தில் விழாதவாறு பல இடங்களில் ஒளிமிகுந்த விளக்கு கள் வைக்கப்பட்டன. அரங்கின்மேல் பலவகை ஓவியங்கள் அழகாகத் தீட்டப் பெற்றிருந்தன. இடத்தூண், வலத்தூண், மேற்கட்டு ஆகிய மூன்றிடங்களில் முறையே, ஒரு முக எழினி, பொருமுக எழினி, கரந்து வரல் எழினி என்ற மூவகைத்திரைகள் தொங்கவிடப்பட்டிருந்தன.

இத்தகைய கவின் பெறு அரங்கில், மாதவி சயந்தனது உருவாகக் கருதப்பட்ட தலைக்கோல் என்பதைப் பெற்று வலக் காலை எடுத்து வைத்து ஏறினாள். அக்கோல் நாடக மகளிர்க்குச் சிறப்புச் செய்வதற்காக அளிக்கப்படுவதாகும். அதுவே அக் கலையில் சிறந்தவர்களுக்குப் பட்டமாகவும் அளிக்கப்படும். அது மலையத்தினின்றும் கொணரப்பட்ட மூங்கில், அல்லது பகை யரசரை வென்று பெற்ற குடைக் காம்பு, அல்லது பகைவர் நாட்டிலிருந்து வெட்டிக் கொணரப்பட்ட மூங்கில் ஆகிய ஒன்றினால் ஏழு சாண் அளவாகச் செய்யப்பட்டிருக்கும். அதன் கணுக்களில் நவமணிகளும், இடையில் சாம்புநதம் என்னும் உயர்ந்த பொன்னாலாகிய தகடும் பதிக்கப்பெற்றிருக்கும். அதனை நன்னாள் ஒன்றில் புண்ணிய நீராட்டி, மாலை சூட்டி, அரச யானையின் கையிற்கொடுத்து, வீர முரசு முழங்க, அரசனும் பரிவாரங்களும் உடன்வர, ஊர்வலமாகக் கொணர்ந்து, முதலில் இயற்றமிழாசான் கையிற்கொடுப்பர். பின்னர் அவன் அதனை அணங்கின் கையிற்கொடுப்ப, அவள் அதனைப் பெற்று அரங்கில் அடியெடுத்து வைப்பாள்.

இங்ஙனம் அரங்கேறிய மாதவி, அரசன், அமைச்சர், அறிஞர், கலைஞர், நகர மாந்தர் ஆகிய பல்லோர் முன்னிலையில், பாடலும், கருவியிசையும் துணை செய்யப் பழுதற்ற முறையில் பலவகை நடனங்களையாடி அவர்களைக் களிபேருவகையில் ஆழ்த்தி மெய்மறக்குமாறு செய்தாள்.

அவர்களுக்குத் துணையாக முதலில் தோரிய மடந்தை தெய்வ வணக்கப் பாடலைப் பாட, பின்னர்க் குழல், யாழ், முழவு, மத்தளம், இடக்கை முதலிய பல்லியம் முழங்கின. அவளது ஆடலாசிரியன் அழகும், அறிவும், திறமையும், கற்பனையும் இன் குரலும் பெற்று, நடனம், பாட்டு, கருவி, ஆகியவற்றில் வல்லவனாய் அருகே அமர்ந்து அவளுக்கு உறுதுணையாய் இருந்தான். கவிஞன், குழலோன், முழவோன், யாழோன் முதலியோர்களும் தத்தம் கலைகளில் கற்றுத் தேர்ந்து இலக்கண முணர்ந்தவர்களாய் நல்லாற்றான் நாடி அவளை நடனத்தில் ஊக்கினர். அவ்வமயம் மாதவி தேசி-மார்க்கம்; ஆரியம்-தமிழ்; அகம்-புறம்; வேத்தியல்-பொதுவியல்; சாந்தி-விநோதம்; வசை-புகழ் என்று இரண்டிரண்டாகச் சொல்லப்படும் கூத்து வகைகளையும், அல்லியம், கொட்டி, குடை, குடம், பாண்டரங்கம், மல், துடி, கடையம், பேடு, மரக்கால், பாவை எனப்படும் பதினொரு வித நடனங்களையும் நூலோர் முறைப்படி ஆடிக் காட்டி அனைவரையும் அளவற்ற மகிழ்ச்சியில் ஆழ்த்தினாள்.

"பாடிய வாரத்(து) ஈற்றினின் றிசைக்கும்
கூடிய குயிலுவக் கருவிகள் எல்லாம்;
குழல்வழி நின்றது யாழே; யாழ்வழித்
தண்ணுமை நின்றது தகவே; தண்ணுமைப்
பின்வழி நின்றது முழவே; முழவோடு
கூடிநின் றிசைத்த(து) ஆமந் திரிகை."

என்று அடிகள், மிடற்றுப் பாடலொடு கருவியிசையெல்லாம் ஒத்திசைக்க, அதற்கேற்ப அவள் நடனமாடிய திறத்தை நன்கனம் விளக்குகின்றார்.

அவ்வமயம் அவள், பாடப்படும் பாடல்களின் பொருளுக்கேற்ப வீரம், அச்சம், இழிப்பு, விழிப்பு, காமம், அவலம், உருத்திரம், நகை, நடுவுநிலை என்னும் ஒன்பான் வகை மெய்ப்பாடுகளும் தோன்றக் கைக்குறிகளும், (முத்திரைகளும்) முகத் தோற்றங்களும், (பாவங்களும்) கண் அசைவுகளும், உடல்

நெளிவுகளும் காட்டிப் பல்வகைத் தாளத்தோடு பொருந்தி அழகுற ஆடினள். கம்பநாடர் கூறியாங்குக் "கைவழி நயனம் செல்லக் கண்வழி மனமும் செல்ல" ஐயநுண் ணிடையாள் அமைதியுடனடினள். இறுதியாக,

"எண்ணும் எழுத்தும் இயலைந்தும் பண்நான்கும்
பண்ணின்ற கூத்துப் பதினொன்றும்—மண்ணின்மேல்
போக்கினள் பூம்புகார்ப் பொற்றொடி மாதவிதன்
வாக்கினல் ஆடரங்கின் வந்து,"

என்று அடிகள் கூறி முடிக்கின்ருர். இதன் கருத்தாவது மாதவி கணிதம், இலக்கணம் என்பவற்றையும், இயற்றமிழின் ஐந்து பகுதிகளையும், இசைத் தமிழின் நான்கு பெரும்பண்களையும், பண்ணுடன் கூடிய பதினொரு கூத்துக்களையும் தன் சொல்லாலும் நடனத்தாலும், உலக முழுதும் புகழுமாறு செய்து காட்டினள் என்பது.

இவ்வாறு அவள் தன் கூத்துக்கும்' பாட்டுக்கும், அழகுக்கும் ஏற்ற முறையில் நூல்நெறி வழுவாமல் ஆடிக்காட்டினளாதலின் அரசன் தனது பச்சை மாலையையும், "தலைக்கோல் அரிவை" என்ற பட்டத்தையும் அவளுக்குப் பரிசாக அளித்தான்; பின்னர் அவள் தகுதிக்குத் தலை வரிசையாக நூல்களிற் கூறியபடி ஆயிரத்தெண் கழஞ்சுப் பொன் பரிசாக வழங்கினன்.

பின்னர், ஒரு நாள் காவிரிப்பூம்பட்டினத்தில் இந்திர விழா நடைபெற்ற போது, விஞ்சையன் ஒருவன் தன் காதலியுடன் அதைக் காண வந்து, உருப்பசியின் வழி வந்த அம்மாதவி ஆடிய நடனச் சிறப்புக்களையெல்லாம் அவளுக்குச் சுட்டிக் காட்டி மகிழ்வித்தான். அது போழ்து மாதவி பதினொரு வகை ஆடல் களையும் அவற்றிற்குரிய சிவன், திருமால், முருகன் முதலிய தெய்வங்களின் அணி, கொள்கை, நிலை, கோலம், அவிநயம் முதலியவற்றுடன் ஆடிக் காட்டினள். இந்திர விழாவிற்காக வந்து கூடியிருந்த விஞ்சையரும் விண்ணவரும் மண்ணவரும் யாவரும் வியக்குமாறு மாதவியின் நடனம் சிறப்புற்றிருந்தது.

இளங்கோவடிகள் இங்ஙனம் விரித்துக் கூறியுள்ள செய்திகளால், இக்காலத்திலும் நாம் அறிந்திராத பல கலை நுணுக்கங்களும், நடன வகைகளும், இயலிசை நாடக நெறிகளும் அக்காலத்தில் சிறப்புற்றிருந்தன என்பது நன்குவிளங்கும். அவற்றையறிந்து போற்றுவது நம் கடனாகும்.

## அருஞ்சொற்பொருள் :

கடைபோக - முடிவு; புறந்தருதல் - ஆதரித்தல்; தோரிய மடந்தை - ஆடி மூத்தவள்; தலைக்கோல் தானம் - நடன அரங்கு; தாது அவிழ் - பூந்தாது (மகரந்தம்) சொரிகின்ற; அகவை — வயது; எழினி—திரை; மலையம் — பொதியமலை; பல்லியம் — பல இசைக் கருவிகள்; தண்ணுமை, ஆமந்திரிகை (இடக்கை) — இவை தோற் கருவிகள்; மெய்ப்பாடுகள் — உணர்ச்சிக் குறிப்புகள்; பைய — அழகிய; பண் நான்கு — பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி என்பன; கழஞ்சு — ஓர் எடை; அவிநயம் — அபிநயம், (பாடற்குறிப்பிற்கேற்ப ஆடுதல்).

## கேள்விகள் :

1. மாதவியின் வரலாறு யாது?
2. அரங்கின் அமைப்பினை விளக்குக.
3. தலைக்கோலின் இலக்கணத்தைக் கூறுக.
4. மாதவி ஆடிய நடனத்தை வருணிக்க.
5. அரசன் மாதவிக்குச் செய்த சிறப்பு யாது?

## பயிற்சி :

நீங்கள் கேட்டு இன்புற்ற ஓர் இசையரங்கினை அல்லது கண்டு களித்த நடனக் காட்சியை 25 வரிகளில் சுவைபட வருணிக்க.

## உரிச்சொல்

பெயர், வினைகளோடு பொருந்திப் பொருள்களின் குணங்களைத் தெரிவிக்குஞ்சொல் உரிச்சொல்லாகும். அஃது ஒரு குணம் உணர்த்தும் பல சொல், பல குணம் உணர்த்தும் ஒரு சொல் என இரு வகைப்படும்.

சால, உறு, தவ, நனி, கழி, கூர் என்பவை மிகுதி என்னும் ஒரு பொருள் குறித்த பல உரிச்சொற்கள்.

கடி என்பது காவல், நறுமணம் முதலிய பல பொருள் குறித்த ஓருரிச்சொல்.

இப்பாடத்தில் வந்துள்ள உரிச்சொற்களைக் கூறு.

---

## 9. செஞ்சோற்றுக் கடன்

(பண்டித, மீ. கந்தசாமிப் புலவர்)

[கண்ணபிரான் தூண்டுதலால் குந்திதேவி கன்னன் மாளிகையை அடைந்தாள். அவள் வருகையை வாயிற்காவலர் கன்னனுக்கு உணர்த்தினர். கன்னன் குந்திதேவியை வரவேற்க அரண்மனைத் தலைவாயிலுக்கு வந்தான். கன்னன் தன் மூத்த மைந்தன் என்பதைக்குந்திதேவி கண்ணபிரானல்அறிந்திருந்தாள். பிறந்ததும்அவளால்பேழையுள் வைத்துவிடப்பெற்றமையாலும், குழவிப் பருவத்துத் தேரோட்டியாலும் இளமைப் பருவத்துத் துரியோதனனாலும் வளர்க்கப் பெற்றமையாலும் குந்திதேவியே தன் தாய் எனக் கன்னன் அறியாதிருந்தான், மூத்தவரைத்தாய ரென்று ஆடவர் முறை கூறும் இந்நாட்டு வழக்குக்கு ஒப்பக் கன்னன் குந்திதேவியைத் தாயாகக் கூறுவானனன்.]

**கன்னன்:** தாயரே! தலையாலே வணங்குகின்றேன். வானத்தில் முழுமதி வருகை கண்டு அலைமோதி நீர் பொங்கும் பெருங்கடலே போல, உங்கள் வருகையால் என் மனத்திடை மகிழ்ச்சி பொங்கப் பெறுகின்றேன். தாங்கள் அரியரோ அரியர். நினைத்த போதெல்லாம் எளிதில் வருகை புரிவீர் அல்லீர். தங்கள்

வருகை அத்தி பூத்தது போல எப்போதோ ஒருகால் அரிதின் வாய்ப்பது! என் நல்வினேயே தங்களே இங்கு அழைத்து வந்துள்ளது! அந் நல்வினேக்கு யான் யாது கைம்மாறு ஆற்ற வல்லேன்! உள்ளே எழுந்தருளுங்கள்; இவ்வுயர் இருக்கையில் அமர்ந்தருளுங்கள். தங்கட்கு அடியேன் யாது பணி புரிய வேண்டுமோ?

**குந்திதேவி:** (இருக்கையில் அமர்ந்து) ஆருயிர் மைந்தனே பெண்டிர் பருவங் குறைந்த பிற ஆடவரைத் தம்பியர், மைந்தர் என்று எண்ணுதலுஞ் சொல்லுதலுஞ் செய்யும் இந்நாட்டுப் பண்பின்படி, உன்னே மைந்தன் என முகமனுக அழைத்திலேன். மெய்யாகவே நீ எனக்கு மைந்தன் ஆவாய். யான் உனக்குப் பெற்றெடுத்த தாயாவேன். இஃது உனக்குப் புதிராகலாம்; புதியதாகலாம்; புரியாததும் ஆகலாம். ஆனல், உண்மை யென்பதில் எள்ளளவும் ஐயம் இல்லே. எங்ஙனம் என்பதைக் கேட்பாய்; யான் குந்திபோச அரசர் மகளாவேன்; வசுதேவர் என் உடன்பிறந்தவராவார். எனக்குச்சிறுபருவமாகஇருந்தபோது துருவாச முனிவர் என் தந்தை மாளிகைக்குவந்தார். அவரோ, பெருஞ்சினத்தர்; பொய்யாத சொல்லினர். அவரை என் தந்தையார் வரவேற்று அரண்மனேயில் தங்கச் செய்தார்; அவருக்கு உவப்பான செயல்களேச் செய்து உள்ளத்துக் களிப்பு மூட்டினர். முனிவர்க்குப் பணிவிடை புரிவதற்கு என் தந்தை யாரால் யான் அரிய வாய்ப்புப்பெற்றேன். "இவரோ, முனிவர்; தவறு செய்தால் மிக முனிவர்" என எண்ணி ஓடியாடிக் குறிப்பு உணர்ந்து தொண்டு செய்தேன். சிறுமியாக இருந்தும் அவ மகிழப்பணிபுரிந்துவந்தமையால்அவர்வாழ்த்துஞ்சிறப்புற்றேன்; உவகை பூத்த உள்ளத்தவராய் முனிவர்எனக்கு ஆறு மந்திரங்கள் கற்பித்தருளினர். அவற்றுள் ஒன்றுலே கதிரோனுக்கு உன்னே நன்மகவாகப் பெற்றேன். பழிக்கு அஞ்சிப் பேழையுள் வைத்து யாற்றிடைவிட நேர்ந்தது. இம்முறையில் நீ எனக்கு மகனுவாய்! யானுனக்குத் தாய் ஆவேன்.

**கன்:** அன்னேயாரே! தாங்கள் என்னே அன்று பெற்றதாகச் சொல்கிறீர்கள். இதனே நான் எப்படி நம்புவது?

கேட்டதும் நம்புவதற்கு இயலாதே இது! நானும் பெற்றோர்கள் யார் என்பது தெரியாது சில வேளை கவல்வது உண்டு. விற் போரில் அருச்சுனனும் யானும் மாறுபடுவோம். யான் ஒருகால் விஞ்சினால் பலர் முன்னிலையில் என்னைத் தேரோட்டி மகன் என்பான் அவன். நான் பெட்டிபாம்புபோலத்தலை மடங்குவேன். தேரோட்டிகள் ஏவல் புரிவோராய் இருத்தலால் இன்று இழிவாக மதிக்கப்படுகின்றனர். அப்போதெல்லாம் என் உயிரே போவது போல இருக்கும். 'என்ன பிறப்பெடுத்தோம்!' என்று பெருமூச் செறிவேன். என் மன நிலையை எவ்வாறோ சில மாதர்கள் தெரிந்துகொண்டனர். அவர் யாவரும் என்னை மகன் முறை கொண்டாடித் தாயாரென வந்தனர். அங்க நாட்டு மன்னன் இன்று நான்; வீரருலகில் இணையற்ற பெருவீரனாக விளங்கு கின்றேன்; இச்சிறப்புக்களினும் மேலாக, இல்லை என்று இரப்போர்க்கு இல்லையென்று உரையாத இரக்க உள்ளம் கொண்டுள்ளேன்; ஈந்து சிவந்துள்ளன என் இவ்விரு கைக ளும். இந்த நிலையில் அப்பெண் மக்கள் என்னைத் தம் மக னெனக்கூறி வந்தது வியப்பில்லையன்றோ! ஏழையாய, ஒழுக்கங் கெட்டுப் பெரு நோய்க்கு இடமாகி இருந்தால், பெற்ற மகனாக இருப்பினும் 'இவன் எவனோ!' எனக் கூறிவிடுப்பர். தங்களைக் குறித்துக் கூறுவதாக அருள்கூர்ந்து கருதாதீர்கள். அவர்கள் என்ன ஆனார்கள் என்பதைக் கேளுங்கள். தேவர்கள் தந்த தூய ஆடையொன்று என்பாலுள்ளது. அதனை அவர்களிடம் தந்தேன். விரித்து உடுத்திய அளவிலே, அது அவர்களை எரித்து உருக்கி எலும்பாக்கியது. இவ்வாறு அடாது செய்தவர்கள் படாது பட்டார்கள்.

**குந்:** என் தவமகனே! அடாது செய்தவர்கள் தாம் படாது பட்டார்கள்; படத்தான் வேண்டும்; பட்டதும் நன்றே. நான் அவர்கள் போன்றவள் ஆகேன். அந்த மாய ஆடை வேறெங்குஞ் சென்றுவிடவில்லையே? உன்னிடமன்றோ உள்ளது? அதனை என்னிடைக் கொண்டு தருக. நான் தாயாவது பொய் யானால் அவர்கள் பட்ட பாடு படுவேன். தருக; விரைவிற்றருக.

[ஆடை கொண்டுவந்து தரப்பெற்றது. அதனை வாங்கி உதறி விரித்து, "இக்கன்னனை யான் பெறுதிருப்பேனாயின், முன்பு பல மாதர்களை எரித்ததுபோல என்னையும் எரித்துவிடு". என்று சொல்லி உடலை மூடி உடுத்தினாள். உடுத்தினதும் எரியாமல் இருந்ததோடு, பெற்ற அன்று போலப் பால் சோரவும் இருந்தாள். அதனைக் கன்னன் கண்டதும் ஐயம் நீங்கி, அன்புருவாகித் தன்னை மறந்தான்.]

**கன்** : யான் குடியிருந்த கோவிலாகத் திகழும் பெரியீர்! இன்றே யான் பேறு பெற்றேன். இப்போதே எனது தீராத கவலை தீர்ந்தது. மாபெரு மன்னன் மகள் மணி வயிற்றிலேதான் தோன்றியுள்ளேன் நான் என்பதை எண்ணும்போது என்னையே மறக்கின்றேன். குயிலினிடமிருந்து முட்டை உருவத்தில் தோன்றிக் காக்கையால் வளர்க்கப்படுகிற குஞ்சு போல்வேன் நான். உங்கள்பால் குழந்தையுருக்கொண்டு தோன்றித் துரியோதனனிடம் வளர்ந்து வந்தேன். குயிற் குஞ்சு என்று அதன் வாய் ஓசையால் தெரிந்ததும் காக்கை அதனைத் துரத்தி விடும். ஆனால், அந்த நிலை எனக்கு வந்திலது; இனியும் வராது; பெற்றதாய் அறியாத பித்தனாக இருந்தேன் முன்பு; இன்று தெரிந்து பெருமகிழ்ச்சியுறுகின்றேன். இப்போது என் உள்ளத்தில் ஊறுகிற உவகை முழுவதையும் புலனாக்குவதற்கு ஏற்ற மொழியறியேன். தாயீர்! இதற்கு முன் உலகியலுக்காக உங்களைத் தாயென்றேன்; தலைபணிந்தேன். இப்போது என் தாய என்னும் ஏமாப்புடனும் இறுமாப்புடனும் வணங்குகின்றேன்.

**குந்** : என் வாழ்க்கைப் பெருஞ் செல்வமே! இதுகாறும் நானும் உன்னை மகனென அறியாமலேதான் இருந்துள்ளேன். உன்னை யாவரும் சான்றோனெனக் கூறக்கேட்ட போதெல்லாம், 'இவனை மகனாகப் பெற்று, ஈன்ற பொழுதினும் பெரிதுவக்கும் அரிய வாய்ப்புப் பெற்றோம் இல்லையே!' என நொந்துள்ளேன். எல்லாம் இறைவன் செயல். நம்மை யொருவரை யொருவர் தாய் மகனென அறியாது பிரித்து வைத்ததும், இன்று அறிய வைத்ததும் அத்திருவருட்செயலன்றோ! நல்லது! ஒன்று

சொல்லுகின்றேன்; நீயோ, ஒப்புயர்வற்ற பெருவீரனாக உள்ளாய். அருமைத் தம்பியர் உனக்கு ஐவர் உண்டு. தன்னிகரில்லாத் தருமன், வீரமே உருவாய வீமன், வில்லுக்கு ஒருவனாகத் திகழும் விசயன், நற்பண்புமிக்க நகுலன், சாத்திரம் உணர்ந்த சகாதேவன் என்போர் உன் தம்பியர். "எம்பியை ஈங்குப் பெற்றேன்; என் எனக்கு அரியது?" என்று தன் தம்பி ஒருவனே இருப்பினும் அவனைக் குறித்து அண்ணன் மகிழ்வது உலக இயல்பு. உனக்கோ ஐவர் தம்பியர் உளர். அவரோ, அரிய தம்பியர்.

**கன்:** அம்மையீர், உடன் பிறப்பின் பெருமை என்னால் உணரப்படாததா? தருமனை நினைத்து மனம் தழைக்கின்றேன்; வீமனையெண்ணி விம்மிதம் கொள்கிறேன்; அருச்சுனனைக் குறித்து அடங்கா மகிழ்வடைகின்றேன்; நகுல சகாதேவர்களால் என்னை நானே மறக்கிறேன். உலகில் தங்கத்தைப் பெற்றாலும் பெறலாம். ஆனால், தம்பியரைப் பெற இயலுமோ?

**குந்:** என் அன்புக் களஞ்சியமே! ஐவரையும் உறவு கொண்டாடி அகமகிழ்கிறாயா? அவர் அருமை உணர்கிறாயா? வாழ்க நீ! ஒன்று என் உள்ளத்தை உறுத்துகின்றது. அதுதான் ஐவராக உள்ள அவர்கள் உன்னுடன் அறுவராக வேண்டும் என்பது. நான் சொல்லுவதைப் புரிந்திருப்பாய். என் மனக் கருத்தும் நீ அறியாததன்று. எமனுக்கு ஏழு பிள்ளைகள் கொடுத்தாலும் உயிரோடு ஒரு பிள்ளை கொடுக்க மனம் வருமோ? நீ என் பின் வருக; உன் தம்பியர் பக்கம் சேர்க. அவர் ஐவரும் உனக்கு நாடு தருகுவர்; அடி பணிகுவர்; ஏவல் புரிகுவர்; உனக்குத் தலைமை சேரும்; நீ பேரரசனாகத் திகழலாம். சிற்றரசர்கள் யாவரும் உன்னை வணங்கக் கடைத்தலை வந்து சேர்வர். உனக்கு ஆண்மையும் செல்வமும் மேலும் மேலும் பொங்கும். குருகுலத்தார்க்குள்ளேயே நீ குரிசிலாக வாழ்வு கூர்வாய். அதுவே உனது கடமையாம்.

**கன்:** அம்மா! தாங்கள் என்னைப் பெற்றீர்கள்; வளர்த்தீர்களில்லை. அப்பிள்ளைப் பருவத்திலேயே அன்பில்லாமை

யாலோ, பழிக்கு அஞ்சியதாலோ என்னை அகற்றிவிட்டீர்கள் அன்று தொட்டு இன்று வரை வளர்த்த பெருமை என் ஆருயிர் நண்பன் துரியோதனனையே சாரும். தேரோட்டி மகன் எனப் பிறரெல்லாம் சிறுமையாக எண்ணிய காலத்தில் துரியோதனன் எனக்குச் சிறப்புச் செய்தான்; இன்னுயிர் நண்பனாக எண்ணினன்; அருச்சுனன் போல்வாரெல்லாம் என்னைத் தீண்டுதற்கும் அருவருத்த அந்நாளில் துரியோதனன் அறு சுவை உணவை அருகில் வைத்து உண்பித்தான். யாளியணை இரண்டு செய்வித்து ஒன்று தனக்கும், ஒன்று எனக்கும் ஆக்கினன்; வளர்த்த இனப்பெயர் நீங்க என்னை அங்க நாட்டு மன்னன் ஆக்கினன்; தன்னை வணங்கும் தம்பியரையும் உறவினரையும் என்னை வணங்கச்செய்தான். இவ்வாறு அவனால் யான் பெற்ற ஏற்றமும் தோற்றமும் எண்ணில. இன்னமும் ஒன்று; யான் ஒருபோது மாபெரும் பிழையொன்று செய்து விட்டேன். அது மன்னிக்கவே முடியாதது. அன்றே என் தலை போயிருக்க வேண்டும். ஆனால், அவன் என்மேல் வைத்த நம்பிக்கையால் தலை பிழைத்தது. மன்னர் மன்னவனான துரியோதனன் வாழ்க்கைத்துணைவி பானுமதியென்னும் மாதரசி யாருமில்லாத தனியிடத்திலேயானும்அவளுமாகச்சொக்கட்டான் ஆடினேம். ஆட்டத்தில் வெற்றி எனக்கும் தோல்வி அவளுக்கு மாக வந்துகொண்டிருந்த வேளை அது. அவள் வாயிலை நோக்கிய வண்ணமும், யான் அதற்கு எதிர்த்த வண்ணமுமாக அமர்ந் திருந்தோம். அப்போது துரியோதனன் அம்மாளிகைக்குள்ளே அணுகினன். கணவன் வருதல் கண்டு அக்களங்க மற்ற மனத்தவள் சரேலென எழுந்தாள். அதனையுணராத யான் ஆட் டத்தின் இடையில் எழுதல் ஆகாது எனச் சொல்லி அவளை மீளவும் அமரச் செய்வதற்கு முன்றானையைப் பற்றி இழுத்து விட்டேன். அதனால், மேகலைமணிகள் அறுந்து உருண்டோடின. பின்பு நண்பனைக்கண்டேன்; கண்டதும் நான் நமனுலகே சென்று விட்டேன். என் வருத்த நிலையை அவன் கண்டான். என் செய லால் தன் மனத்து ஒரு சுறு மாற்றமும் கொள்ளாதவனாய், 'இம் மணிகளைப் பொறுக்கி உன்கையில் தருவோனோ? கோத்து மாலை

யாக்கிக் கொடுப்பேனே? என அறியாதான்போல வினவினன். அதன் பிறகுதான் எனக்கு உயிர் வந்தது. செஞ்சோறு தந்து என் உடலை வளர்த்துச் சிறுமையை மன்னித்து என் உயிர் தந்து காத்த உரவோன் அல்லனே அவன்? தாயார், தம்பியர் என்று இன்று தெரிந்ததும் அந்நன்றியை மறந்தேன் என்றால், நாயினுங் கீழ்ப்பட்டவன் ஆகேனே நான்? இனி வரும் போரில் எனது உயிரனைய தோழனுக்காகச் செஞ்சோற்றுக்கடன் கழிப்பதே எனக்குச் செயதக்க செயலாம். அம்மா! மேலும் மேலும் பேசி ஆவது ஒன்றுமில்லை. போரோ, தொடங்கும் நிலையில் உள்ளது. தாங்கள் என்பால் வந்த நோக்கம் யாது? உள்ளது உள்ளவாறே கூறுங்கள்.

[கன்னனது மறுமொழி கேட்ட குந்தி கதறி அழுதாள். அவனைப் பெற்றுப் பேழையுள் வைத்து ஆற்று வெள்ளத்தில் விடுத்தபோது கொண்ட வருத்தத்தைக் காட்டிலும் அவள் பல மடங்கு வருத்தப்பட்டாள். கன்னன் தன் மேலாடையால் அவள் கண்ணீரைத் துடைத்தான்; தன் இன்னுரையால் அவள் மனவருத்தத்தையும் துடைக்க முற்பட்டான்; மீளவும் அவளை நோக்கி,]

**கன்:** கண் கண்ட தெய்வமே! தாங்களே என்னை வளர்த்திருந்தால் பாலூட்டும் போதே நல்ல பண்புகளையும் சேர்த்தூட்டியிருப்பீர்கள்; 'நன்றி மறவேல்; பயனில பேசேல்; கோட்சொல் கூறேல்' என்றெல்லாங் கற்பித்திருப்பீர்கள். அவ்வாறு கற்பிக்கக் கேட்கும் பேறு பெறாத நான், உங்கள் மணி வயிற்றிற் கருவிருந்த தொடர்பால் ஒரு நற்பண்பையேனும் கடைப்பிடித்தால், அதனைக் கண்டு மகிழ வேண்டிய தாங்கள் கைவிடுமாறு எதிர்பார்க்கிறீர்களே! நன்றி மறந்தேன் ஆனால் அது குறித்து என்னைத் தூற்றும் இந்த நானிலம்; என்னைப் பெற்ற நற்றாய் யாரெனக்கேட்டுப் பெயர்தெரிந்திலது ஆயினும், பொதுமையின் தங்களையும் தூற்றாதோ? தங்கள் முயற்சியால் என்னைச் சாதல் ஒழித்துவிட முடியுமோ? யாவும் ஊழ்வினைப்படியே நடைபெறும். அழாதீர்கள். தாங்கள் என்னிடம் என்ன பெற விரும்புகிறீர்கள்? கேளுங்கள்; மறாமல் தருவேன்.

**குந் :** முதல்வனாகத் தோன்றிய என் புதல்வனே! உனது நன்றி மறவாப் பண்பை நான் போற்றுகின்றேன். இனிப் போர் நேரலாம். அப்போரில் உன்னுடன் அருச்சுனன் போர் புரிந்தால், உன்னை வந்து சார்ந்து பழிவாங்கக் காத்துக் கொண்டிருக்கும் அச்சுவசேனன் என்னும் பாம்புப் படையை ஒருமுறைதான் நீ அவன்மேற்றொடுத்தல் வேண்டும். அம்முறை அவன் தப்பினால், அதனை மீளவும் அவன்மேல் தொடுத்தல் ஆகாது. அவனையொழிந்த தருமன் முதலான நால்வரும், உனக்குப் பருவத்தாலும், வலிமையாலும் இளையர்; ஆதலால், அவர்களுடன் போர் புரியற்க; புரிந்தாலும் கொல்லற்க; இவைகளே உன்பால் யான் விரும்புவன.

**கன் :** தூய மனமுடைய தாயே! போர்க்களத்தில் கொல்ல வல்ல அம்பை ஒரு முறை ஒருவன்மேல் ஒருவன் தொடுத்த போது, அப்பகைவன் பிழைத்துக்கொண்டால் அதே அம்பை மறுமுறையும் அவன்மேல் தொடுத்தலை ஆண்மையாகவும், அறமாகவும், அழகாகவும், வீரர்கள் கொள்ளார். இது பொது முறை. இதற்கு ஒப்பவும், தாங்கள் கேட்டுகொள்வதற்கு இணங்கவும் பாம்புப் படையை அருச்சுனன்மேல் ஒரு முறையே தொடுப்பேன். அவனையொழிந்தோர் பிழைப்பர். தாங்கள் என்னிடம் இரண்டு உறுதி மொழிகள் கேட்டது போலவே யான் உங்களிடம் இரண்டு வரங்கள் வேண்டுவன். யான் இளமையில் தேரோட்டியால் வளர்க்கப்பட்டுள்ளேன். யாவரும் என்னைத் தேரோட்டி மகன் என்றே எண்ணியிருக் கின்றனர். இறந்த பிறகாவது இவ்விழிமொழி யொழிய வேண்டும். அடுத்துஇந்தச்சிறப்பெல்லாம் நான் துரியோதனனால் தான் அடைந்தேன். அவன் தந்த செஞ்சோறே எனக்குஇவ்வளவு சிறப்புத் தந்தது. அச்சோறு வாங்கியுண்டமைக்கு அவன் பொருட்டே என் உடலும் உயிரும் கழியவேண்டும். அதுவே நான் ஆற்ற நினைக்கும் செஞ்சோற்றுக் கடனும். இதுவும் நிறை வேறவேண்டும். ஆதலால், நான் போர்க்களத்தில் அருச்சுனன் கையம்பால் அடிபட்டு உயிர் பிரியுந் தறுவாயில் உள்ள போது, என்னைத் தாங்கள் மடிமேல் எடுத்து வைத்துக் கண்ணீர் வடித்து

ஒப்பாரி வைக்கவேண்டும். இதனால் நான் உங்கள் மகன் என்னும் உண்மை வெளியாகும். போர் முடியும் வரையும் நான் உங்கள் மணி வயிற்றிற் பிறந்தேன் என்பதை என் தம்பிமார் எவர்க்கும் தெரியாவண்ணம் காக்கவேண்டும். தெரிந்தால் போர் நிகழாது; என் எண்ணம் நிறைவேறாது; தம்பிமார் எனக்கு நாடு முழுவதையும் தருகுவர். நான் அவற்றையெல்லாம் எனக்குச் செஞ்சோறுதந்தசெம்மலும் இன்னுயிர் நண்பனுமான துரியோதனனுக்கே வழங்குவேன். ஆதலால், அவ்வுண்மையை மறைத்து வைக்கவேண்டும். இவ்விரண்டுமே எனக்கு விருப்பம். இவற்றை வழங்குங்கள்.

**குந்:** வள்ளன்மை படைத்த மகனே! அங்ஙனமே செய்வேன். இன்று கண்டு உன்னுடன் உரையாடியதுதான் என் வாழ்வில் முதன்முறையும், இறுதி முறையும்போலும்! நீ மறைய நான் கண்ணீர் வடித்து உயிருடன் இருப்பதா? இக்கொடுமை காண்பதன் முன்பு என் உயிர் பிரியுமானால் பெரிதும் மகிழ்வேன். என்செய்யலாம்!

(இவ்வாறுகூறிக் கண்ணீர்வடித்து, மனம் நொந்து வாய் திறந்து அழுது, பெருமூச்செறிந்து, மகனைத்தழுவிப் பிரிந்து குந்தி கண்ணபிரான் இருக்கும் இடம் நோக்கி மீண்டாள்)

## அருஞ்சொற்பொருள் :

கைம்மாறு – எதிர் நன்றி; முனிவர் - வெறுப்பர்; பேழை - பெட்டி; அடாது செய்தவர் - பொருந்தாதன செய்தவர்; புலனுக்குதல் – வெளிப்படுத்துதல்; ஏமாப்பு - பெருமகிழ்ச்சி; பெருமிதம்; குரிசில் ஆடவரில் சிறந்தோன்; மாற்றம் – சொல்; அச்சுவசேனன் - தக்ககன் மகன்; செஞ்சோறு - அறுசுவை கலந்த நால்வகை உணவு.

## கேள்விகள் :

1. குந்திதேவியைக் கன்னன் வரவேற்றது எங்ஙனம்?
2. கன்னன் தன் மகன் என்பதைக் குந்தி எவ்வாறு விளக்கினாள்?

3. துருவாசர் யார் ? அவர் பால் குந்தி பெற்றதென்ன ?

4. தானே பெற்ற தாயென்பதைக் கன்னனுக்கு மெய்ப்பித்தது எப்படி ?

5. தாயென்று தெரிந்ததும் கன்னன் குந்திக்கு மகிழ்ச்சி தெரிவித்தது எவ்வாறு ?

6. கன்னனைக் குந்தி யாது கூறி அழைத்தாள் ?

7. கன்னனுக்குத் சூரியன் செய்த நன்மைகள் யாவை ?

8. தாயின் அழைப்பைக் கன்னன் யாது கூறி மறுத்தான் ?

9. குந்தி கன்னனிடம் வேண்டிய வரங்கள் எவை ?

10. கன்னன் தன் தாயிடம் கேட்டுக்கொண்டவை எவை ?

## பயிற்சி :

செய்ந்நன்றி மறவாமை என்பதைக் குறித்து 20 வரிகளில் ஒரு கட்டுரை வரைக.

## வழக்கு :

வழக்காவது சொற்களை வழங்கும் முறையாம். அது இயல்பு வழக்கு, தகுதி வழக்கு என இருவகைப்படும்.

## இயல்பு வழக்கு :

எப்பொருளுக்கு எச்சொல் இயல்பாக அமைந்ததோ, அப்பொருளை அச் சொல்லாலே சொல்வது இயல்பு வழக்காம். அது இலக்கணமுடையது, இலக்கணப்போலி, மரூஉ என மூவகைப்படும்

1. இலக்கணமுடையது (இலக்கண அமைதியுடையது)- நிலம், நீர். தீ, காற்று, வானம்.

2. இலக்கணப்போலி (இலக்கணமுடையது போன்றது)- புறநகர், வாயில், வாய்க்கால், புறங்கடை.

3. மரூஉ (சிதைந்த உருவமுடையது)-அருமந்த, தஞ்சை' ஆறு (யாரு), ஆர், (யார்.)

## தகுதி வழக்கு :

ஒரு காலத்தில் ஒரு பொருளைக் குறித்தற்கு எழுந்த ஒரு சொல்லை இப்போது சொல்லுதல் தகுதியில்லையென ஒழித்து, அப்பொருளை வேறொரு சொல்லால் சொல்லுதல் தகுதியெனக் கொண்டு சொல்வது தகுதி வழக்காம். அது இடக்கரடக்கல், மங்கலம், குழூஉக் குறி என மூவகைப்படும்.

1. இடக்கரடக்கல்—கால் கழுவுதல், வாய் பூசுதல்.
2. மங்கலம்—நன்காடு, வெள்ளாடு.
3. குழூஉக்குறி—பறி, சொல் விளம்பி.

இப் பாடத்திலிருந்து இவ்விருவகை வழக்குச் சொற்களுக்கும் எடுத்துக்காட்டுக்களை எடுத்தெழுதுக.

# 10. குடும்பக் கலை

(திருமதி இராஜம்மாள் தேவதாஸ், எம். ஏ., எம். எஸ்ஸி., பி.எச்.டி.)

நம் நாட்டில் தொன்றுதொட்டு, இல்லறம் பெண்களுக்கு இன்றியமையாத கடமையாகவும், கலையாகவும் இருந்து வந்திருக்கிறது. பண்டைக் காலத்தில், பெண்கள் தங்கள் குடும்ப வாழ்க்கைக்கு வேண்டிய அறிவு நுட்பங்களைப் பெறுவதற்காக அறுபத்துநான்கு கலைகளைக் கற்றனர். அவர் களுக்கு வீடுகளில், தாய்மார், பாட்டிமார், மற்ற உறவினர் முதலியோர் குழந்தைப் பருவத்திலிருந்தே குடும்பச் சடங்குகள் மரபுகள், விருந்தோம்பல், சமைத்தல், தையல், நூல் நூற்றல் சமூகக் கடமைகள், சமயக் கொள்கைகள் முதலிய பல பணிகளைக்கற்பித்துவந்தனர். இறைவழிபாடு, இசை, ஆன்மிக வளர்ச்சி ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு, பெண்கள் தங்கள் வருங்கால இல்லங்களின் கடமைகளுக்குத் தகுதி யுடையவராயினர்; பள்ளிக்கூடங்களுக்குச் செல்லாமலே பெரியோர் வாயிலாக அறிவுரைகளைக் கேட்டும், வீட்டில் படித்தும், பழகியும் கல்வி பெற்றனர்.

இவ்வளவு பழமையும், பெருமையும் வாய்ந்த குடும்பக்கலை, இன்று கல்வித்திட்டங்களில், தொடக்கப்பள்ளி முதல், பல்கலைக் கழகங்கள் வரையிலும் இடம் பெற்றுள்ளது. முதியோர் கல்வியிலும், கிராம, நாட்டு நலத்திட்டங்களிலும் குடும்பக்கலை கற்பிக்கப்படுகிறது. அதற்குக் காரணம், பெண்களுடைய இயல்புகள், தேவைகள், கடமைகள் ஆகியவைகளுக்கேற்ப அவர்களுக்கு கல்வி புகட்ட வேண்டும் என்ற உண்மைதான். குடும்ப வாழ்க்கையை வெற்றிபெற நடத்துவதற்கு விஞ்ஞானம், பொருளாதாரம், மனவியல் போன்ற அறிவுத் துறைகள் பயன் படுகின்றன.

ஆயினும், குடும்பக் கலையைப் பற்றிப் பொதுவாகச் சில தவருன கருத்துக்களும் நிலவுகின்றன. "வெறுஞ்சமையலும்

தையலுந்தானே மனைவியற்கலை! அதில் கல்லூரிகளுக்குச் சென்று, புதிதாகத் தெரிந்துகொள்ள என்ன உள்ளது?'' என்று நினைப்பவர் பலர். ஆகவே, குடும்பக் கலையின் பொருள் தத்துவம், பயன்கள், குடும்ப வாழ்க்கைக்கு அதன் தேவை முதலியவற்றைப் பற்றி அனைவரும் தெளிவாகத் தெரிந்து கொள்வது நல்லது.

நாகரிகம் தொடங்கிய காலத்திலிருந்து, சமூகத்தின் வளர்ச்சிக்கும், நலத்திற்கும், பெருமைக்கும், இன்பத்திற்கும், அடிப்படையாக இருந்து வந்திருப்பது குடும்பமே. வீட்டையே கோயிலாகவும், அதில் வதியும் தாயையே கண்கண்ட தெய்வ மாகவும் பாராட்டிவந்த தமிழ்நாடு மனிதனுக்குள்ள நல்ல பண்புகளெல்லாம், தாயிடமிருந்தும், அவள் அமைத்துத் தரும் சூழ்நிலையிலிருந்தும் கிடைக்கின்றன. தியாகம், அன்பு, அறம், அருள், பத்தி, அறிவு, பொறுமை ஆகிய உயர்ந்த ஆன்மிகப் பண்புகள் நல்ல குடும்ப வாழ்க்கையிலிருந்து தோன்றுகின்றன.

இத்தகைய சீரிய குடும்ப வாழ்க்கைக்குத் தேவையான கல்வியை அளிப்பது குடும்பக் கலை. வாழ்க்கையில் உயர்ந்த இன்பத்தையும், நிறைவையும் பெறுவதே அதன் குறிக்கோள். அவற்றையடைய அது பல கலைகள், அறிவியல் ஆகியவற்றைப் பயன்படுத்தி, மனித வாழ்க்கைக்குக் குறிக்கோளைத் தந்து, அக்குறிக்கோளைத் தெளிவாக்கி, அதையடைய, வழிகாட்டி, மனப்போக்குகளைக் கட்டுப்படுத்தி வளர்த்து, உள்ளத்தைப் பண்படுத்திக் குடும்பத்தை மலர வைத்துச் சமூகத்தை வனப்புறுத்துகிறது.

வாழ்க்கையின் அன்றாடத் தேவைகளான உணவு, உடை, வீடு, பணம், உடல் வளர்ச்சி, உடல் நலம், குழந்தை வளர்ப்பு, சுகாதாரம், நோயில் பாதுகாப்பு, அணி செய்தல், சமூகக் கடமைகள், இறை வழிபாடு ஆகிய பல பகுதிகளைக் கொண்டது குடும்பக் கலை.

உணவுத் துறையில் உணவின் தன்மை, அதன் கூறுகள், தேவைகள், உடல் வளர்ச்சிக்கேற்ற உணவுகள், உடலில்

உணவுக்குண்டாகும் மாறுதல்கள், நோய்வாய்ப்படும் போது ஏற்படும் உணவுத் தேவைகள் போன்றவற்றைத் தெரிந்து கொள்ளலாம். வருவாய்க்குள் கிடைக்கும் உணவை, எங்ஙனம் சிறந்த முறையில் சமைத்துப் பயன்படுத்துவது, உணவைப் பாதுகாப்பது முதலிய பல செய்திகளையும் உணவியல் கற்பிக்கிறது.

உடைகளின் தன்மைகள், கூறுகள், நெசவு, நிறவன்மை, உறுதி, உடை சுருங்குவது, நீண்டுபோவது, நெகிழ்ந்து போவது முதலியன பற்றியும், பலவிதமான பட்டு, கம்பளி, பருத்தி, செயற்கைப் பட்டு, லினன், நைலான் முதலிய துணி வகைகளின் சிறப்புக்கள், குறைகள் பற்றியும், ஆடை தைக்கும் முறைகள், அணிசெய்யும் தையல்கள் பற்றியும், வயதிற்கும், பருவத்திற்கும், ஏற்ற உடைகள், உடைகளைத் துவைப்பது, உலர்த்துவது, கஞ்சி போடுவது, பெட்டிபோடுவது, பாதுகாப்பது, கிழிந்ததுணிகளைச் செப்பனிடுவது; கறைகளைப் போக்குவது முதலியன பற்றியும், உடையைப் பற்றிய பகுதியில் தெரிந்துகொள்ளலாம்.

வீட்டமைப்பில், வீட்டுச் சுகாதாரம், வெளிச்சம், காற்றோட்டம், நடமாட்ட வசதிகள், அழகு முதலிய பல கொள்கைகளைக் கவனிக்க வேண்டும். பணத்திற்கும் பண்பாட்டிற்கும் ஏற்றபடி, வசதியும் அழகும் நிறைந்த தேவைகளை நிறைவேற்றும் வண்ணம் வீடு கட்டப்படவேண்டும்.

குடும்ப ஆட்சிப் பகுதியில், வீட்டுப் பொருளாதாரம், வரவுக்குத் தக்க செலவு செய்வது, எல்லா வளங்களையும் பெருக்குவது, தேவைகளைத் தெரிந்து செலவுசெய்வது, எதிர் காலத்திற்குச் சேமித்து வைப்பது, குடும்பத்தைச் சிக்கனமாகவும் திறமையாகவும் நடத்துவது, பலவித வேலை சுருக்கும் முறைகளையும் கருவிகளையும் கண்டு பிடித்துக் கையாண்டு பயன் அடைவது, குடும்ப வாழ்க்கையில் அனைவருடனும் ஒன்றுபட்டு வாழ்வது ஆகிய பல பொருள்கள் அடங்கியுள்ளன.

உடல் நலமும், உள்ளத்தின் செம்மையுமே, குடும்ப வாழ்க்கையை உயர்த்தும் செல்வங்கள். குடும்ப வாழ்க்கைக்கு அடிப்

படை உடல் நலமே. ஆகவே, உடல் நலத்தைப் பெருக்கும் பழக்க வழக்கங்கள், கொள்கைகள், தூய உணவு, உடை, நீர், வீடு ஆகியவற்றை அடைவது, நோயைத் தடுப்பது, நோயுள்ளவர்களைப் பேணுவது ஆகியவற்றைச் சுகாதாரப் பகுதியில் அறிந்துகொள்ளலாம்.

குழந்தைகள் நம் வருங்காலச் செல்வங்கள். அவர்கள் கடவுட்பற்றுடன், வீரத்துடன், தூய்மையுடன், உண்மையுடன் வளர வீட்டில் நல்ல சூழ்நிலையை அமைத்துத் தரவேண்டும். அவர்களுடைய உள்ள உடல் வளர்ச்சிப் பருவங்களுக்கேற்றபடி உணவு, உடை, விளையாட்டு, ஓய்வு, கல்வி ஆகியவை அமைய வேண்டும். அவற்றைக் குழந்தை வளர்ப்புப் பகுதியில் காணலாம்.

மனிதனை ஆக்குவதும் அழிப்பதும் அவனுடைய சூழ்நிலையே. அதை ஆக்க முறையில் அமைத்துத் தருவது பெண்ணின் பெருங்கடமை. குழந்தை வளர்வதற்கும், இளமையில் அன்பு மலர்வதற்கும், முதுமையில் ஓய்வும் நலமும் கிடைப்பதற்கும், மக்கள் மனத்தில் பத்தியும் பண்பாடும் ஓங்குவதற்கும், குடும்பமே சிறந்த இடம். ஆகவே, குடும்பங்கள் தழைக்க, சமூகங்கள் வளரும்; சமூகங்கள் வளர, நாடு முன்னேறும். இச்சீரிய நோக்கங்களுக்கு உதவியாகக் குடும்பக்கலைப் பயிற்சி நிற்கிறது.

### அருஞ்சொற்பொருள் :

மரபு — பழக்க வழக்கம் (சம்பிரதாயம்); விருந்தோம்பல் — விருந்தினரைப் பேணுதல்; ஆன்மிக — ஆன்மாவைப் பற்றிய; சீரிய — சிறப்பான; கூறுகள் — பகுதிகள்; தக — தகுந்தவாறு; பேணுவது — பாதுகாப்பது; செப்பனிடுதல் — ஒழுங்குபடுத்தல்.

### கேள்விகள் :

1. நம் நாட்டில் பண்டைக் காலத்தில் பெண்களுக்குக் குடும்பப் பயிற்சி எவ்வாறு அளிக்கப்பட்டது?

2. குடும்பக் கலையைப் பற்றி நிலவும் தவறான கருத்து என்ன?

3. நல்ல குடும்ப வாழ்க்கையில் உண்டாகும் பண்புகள் யாவை?

4. குடும்பக் கலையின் குறிக்கோள் என்ன? அக்குறிக்கோளை அது எப்படி நிறைவேற்றுகிறது?

5. குடும்பக் கலையின் பகுதிகள் யாவை?

6. உடைகளைப் பற்றிக் குடும்பக் கலையில் கற்பிக்கப்படுவது என்ன?

7. குடும்ப ஆட்சி என்பது என்ன?

8. குழந்தைகளுக்கு எத்தகைய சூழ்நிலையை அமைத்துத்தர வேண்டும்?

## பயிற்சி :

கீழ்வரும் சொற்களுக்குள்ள வேறுபாட்டைக் கூறுக.

சீரிய - சிறிய; மரம் - மறம்; கூறு - கூர்; பெரு - பெறு: தழை-தளை - தலை: கலை - களை - கழை; உரவு - உறவு; பணி - பனி; உரை - உறை; உரி - உறி: கறி - கரி: நிரை - நிறை; இறை - இரை: துறை - துரை: உன் - உண்: ஊன் - ஊண்.

---

# 11. ஐக்கிய நாடுகளின் அமைப்பு — நோக்கம்

(திரு. கா. அப்பாத்துரை, எம்.ஏ., எல்.டி.)

ஐக்கிய நாடுகளின் அமைப்பு என்பது உலக நாடுகளின் ஒரு கூட்டுறவமைப்பு. அது சில நாடுகளால் திட்டமாகத் தீட்டப் பெற்றுப் பல நாடுகளின் ஏற்புப் பெற்றுள்ளது. நாளடைவில் எல்லா நாடுகளையும் உளப்படுத்தும் தன்மையில், அந்நோக்கத் துடனே அது தீட்டப்பட்டுள்ளது. உலக நாடுகளில் இருபத் தைந்து நாடுகள் தொடக்கத்திலேயே அதில் சேர்ந்திருந்தன. 1946க்குள் அத்தொகை 28 ஆகி, 1952க்குள் 60 ஆகிவிட்டது. இன்று அதன் கொடியின்கீழ் இணைக்கப்படாத பெரிய நாடு, புதிய மக்கள் சீனு ஒன்று மட்டுமே. மக்கள் தொகை அடிப்படையில் பார்த்தால், உலக மக்கள் தொகையாகிய 200 கோடியில் 160 கோடி மக்கள், ஐக்கிய நாடுகள் அமைப்பில் தத்தம் நாட்டரசாங்கங்கள் வழியாகத் தொடர்புடையவர்களே. அதாவது, உலகில் நூற்றுக்கு எண்பது பேர் அவ்வமைப்பின் ஆதரவாளராகியுள்ளனர். ஐ. நா. அமைப்புக்கு முன்னிருந்த சர்வதேச சங்கத்தில் உறுப்புகளாயிருந்த நாடுகள் நாற்பத்து நான்கும், அவற்றைச் சார்ந்த மக்கள் தொகை 130 கோடியு மாகவே இருந்தன என்பதை நோக்க, இவ்வுலக இயக்கத்தின் வளர்ச்சியும் அதற்குக் காட்டும் பேராதரவும் நன்கு விளங்கும்.

ஐ. நா. அமைப்பின் முடிந்த முடிவான நோக்கம், போரை ஒழித்து, வலுத்தாக்குதலுக்கு இடமில்லாது செய்து, நாடு களிடையே நட்புணர்ச்சியைப் பெருக்கி, மக்கள் நல்வாழ்வை வளர்த்து, உலக அமைதியையும் ஒற்றுமையையும் பேணுவது. உலகின் கலை, நாகரிகம், தொழில் வளம், மக்கள் நலம் ஆகிய வற்றுக்கு உதவத்தக்க ஒரு முழு முதல் அமைப்பாய் அது இயங்குகிறது. போர் ஒழிப்பும், அமைதிக்காப்பும், முந்திய உலக

அமைப்புக்கும் உலக இயக்கங்களுக்கும் நோக்கமாகவே இருந்தாலும், அதனை நாட்டு அரசாங்கங்களின் பொறுப்பு வாய்ந்த அமைப்பாக்கி, மக்கள் அவா ஆர்வங்களைத் தூண்டி ஈடுபடுத்திய அமைப்பு ஐ. நா. அமைப்பே.

இன்று ஐ. நா. அமைப்பே உலக நாடுகளிடையே ஒற்றுமையும் தொடர்பும் வளர்க்கும் அமைப்பாக மட்டுமே இயங்குகிறது. ஆயினும், இத்தொடர்பு வளர்வதற்கான வழி வகைகளும், அவற்றுடன் மக்கள் வாழ்க்கைத் தொடர்பு வளர்வதற்கான வகை துறைகளும் அமைப்பில் வகுக்கப்பட்டுள்ளன. உலகில் பல நாடுகளில் அரசியல் தேர்ச்சி பெற்ற அறிஞரும், பல நுணுக்கத்துறையாராய்ச்சி வல்லுநரும் அதன் கட்டமைப்பில் ஈடுபட்டதனால், அஃது எதிர்கால வளர்ச்சிகளுக்கு இடங் கொடுக்கும் வகையில் உறுதியான அடிப்படையுடனும், எளிதில் மாற்றியமைக்கத் தக்கதும் வளர்ச்சியடையத் தக்கதுமான நெகிழ்ச்சித் திறத்துடனும் வகுக்கப்பட்டுள்ளது. மொத்தத்தில் ஐ. நா. அமைப்பு உலக ஒற்றுமை நலனையும், நாட்டின் தனித்தனி நலன்களையும், அரசாங்கங்களையும், மக்களையும், ஒரே பேரிணைப்பில் இணைக்கும் ஓர் ஒப்பற்ற ஒற்றுமைக் கருவியே யாகும் என்பதில் ஐயமில்லை. அது அத்துடன் வருங்காலத்தில் ஒருலக ஆட்சியை அமைக்கத் தக்கது என்பதும் நம்பிக்கைக் குரிய செய்தியே.

இன்னும் ஆசியாவில் பொதுவாகவும், இந்திய மாநிலத்தில் சிறப்பாகவும், ஐக்கிய நாடுகள் பற்றிப் பொது மக்கள் உணர்ச்சியைப் தூண்டுவதற்குக் கழகங்கள் அமைக்கப்பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. திருவள்ளுவர், கன் பூசியஸ், புத்தர் இயேசு, முகமதுநபி ஆகிய பண்டை உலகப் பேரருளாளரையும், இராமலிங்க வள்ளலார், ஸ்ரீநாராயண குருசாமி, மகாத்மாகாந்தி அடிகள் போன்ற இக்காலப் பேரருளாளரையும் அளித்த கீழ்நாட்டுலகு இவ்வியக்கத்தில் பெரும்பங்கு கொள்வது பொருத்தமானதும் நலமானதும் மட்டுமின்றி, இயக்கத்தின் வளர்ச்சிக்கும் உறுதிக்கும் இன்றியமையாததுமாகும் என்னலாம். ஐரோப்பியப் போட்டி நாகரித்திலும், எண்ணற்ற படைப் பெருக்கத்தாலும்,

உணர்ச்சிக் கனிவில்லாப் பொருள் ஈட்டத்தாலும் அல்லற்படும் உலகுக்கு ஆசியாவும் இந்தியாவும்—சிறப்பாகத் தமிழகமும்—தொலை நோக்குடைய அருளொளி விளக்கம் தர முடியும். ஆகவே, தமிழகத் தலைவரும், இந்தியத் தலைவரும் அரசாங்கத்தாரும் ஆசியாவின் நாகரிகத் தாயகமாகிய இந்த நாட்டில் உலக இயக்க ஒளி விளக்கங்களாகிய ஐ. நா. கழகங்களை நிறுவ வேண்டுவது இன்றியமையாததொரு செயலாகும். அறிஞரும் மக்களும் இவ்வகையில் அவர்களை ஊக்கக் கடமைப் பட்டவர்கள்.

ஐ. நா. அமைப்பின் நோக்கங்களைக் கீழ் வருமாறு வகுத்துரைக்கலாம் :

(1) உலகில் அமைதியை உண்டு பண்ணுவதும் பேணுவதும்—அதாவது போரை ஒழிப்பதும், போர் ஏற்படத்தக்க சூழ்நிலைகளை மாற்றியமைப்பதும்—ஐ. நா. அமைப்பின் தலையான நோக்கம் ஆகும். போர் ஏற்படுவதற்கான சூழ்நிலைகளுக்குள் மிக முக்கியமானவை, போர் பற்றிய அச்சமும் ஐயப்பாடுந்தான். இதனால், வல்லரசுகளிடையே போர்க்கருவிகளின் படைப்பிலும் பெருக்கத்திலும் போட்டி ஏற்பட்டிருக்கிறது. நாட்டு மக்களின் நல்வாழ்வுக்கும் தொழில் வளத்துக்கும் செய்யவேண்டிய முயற்சிகள் யாவும் இவற்றால் தடைபடுகின்றன. பெரும்பாலும் ஏழை மக்களிடமிருந்தே திரட்டப்படுகிற வரிப்பணம், போரிலும் போர்க் கருவிகளிலும் வீணாக்கப்படுகிறது.

(2) ஐ. நா. அமைப்பு உலக நாடுகளிடையே நட்புணர்ச்சியையும் நல்லெண்ணத்தையும் உண்டு பண்ணி, அவற்றிடையே ஒத்துழைப்பையும் ஒருமுகப்பட்ட செயலையும் வளர்க்கக் கடமைப்பட்டுள்ளது. போர் அச்சத்துக்கும், போர் பற்றியஐயங்களுக்கும், அறிவுப் போட்டிகளுக்குங்கூடப் பெரும்பாலும் உள்ளார்ந்த பகைமையும் தப்பெண்ணங்களுமே காரணம். போருக்கான சூழ்நிலைகளை உண்டு பண்ணும் இவற்றை உடன்படு பேச்சாலும், இடையீட்டாளர் அறவுரை நல்லுரைகளாலும் போக்கி நட்பை வளர்ப்பதுதான் இச்சூழ்நிலையைப் போக்க வழியாகும்.

(3) ஐ. நா. அமைப்பு உலகில் நாடுகளிடையேயும், மக்களிடையேயும் கூடியமட்டும் ஒத்த நிலைமையையும் தன் முடியுரிமை(சுயநிர்ணயஉரிமை)யையும் பேணிவளர்த்து ஒரு நிகரான வாய்ப்புகளையும் அளிக்கவேண்டும். ஒத்த நிலையில்லாத இடங்களிற்கூட, இருக்கும் நிலையைத் தற்காலிகமாக ஏற்று, வலிமையுடைய உறுப்புக்கும் வலிமை குறைந்த உறுப்புக்கும் இடையே நட்பு மனப்பான்மையை வளர்த்து, ‘ஒருவர் வலிமை மற்றவர்க்கும் வலிமை தருவதே; ஒருவர் வலிமைக்கேடு மற்றவர்க்கும் வலிமைக் கேடே’ என்பதை உணர்த்தி, அவர்களை ஒத்த நிலை நோக்கி மனமொத்து வளரச் செய்தல் வேண்டும்.

(4) ஐ. நா. அமைப்பு, நாடுகளிடையேயும், நாட்டு மக்களிடையேயும் கூட்டுறவுப் பண்பை வளர்த்து, அதன் வழி உலக மக்களிடையே கல்வி, பொருளியல், சமூக, பண்பாட்டுத் துறைகளில் வளர்ச்சியையும் வளத்தையும் உண்டுபண்ணமுயலுகிறது. அரசர்களுக்கும் பேரரசர்களுக்கும் ஓரளவு உறுதி உண்டு பண்ணும் துறைகள் இவையே. மக்கள் வாழ்வில் வளம் பெற்றிருக்கும் அரசுதான் நல்லரசென்று புகழப்பெற்று, மக்கள் போற்றுதலைப்பெற்று வலியுடையதாய் இருக்கும். ஆனால், அதே வேளை மக்கள் வாழ்க்கையைச் சார்ந்த இத்துறைகளே நாட்டில் அரசியல் எல்லை கடந்து செயலாற்றுபவை. எனவே, இத்துறைகளில் கூட்டரசாங்க அமைப்புக்களையும், நாட்டுக்கு அப்பாற்பட்ட கூட்டுறவமைப்புக்களையும் ஊக்குவதனால் ஐ. நா. அமைப்பு உலகக் கூட்டுறவு மனப்பான்மையை வளர்க்கிறது.

(5) ஐ. நா. அமைப்பின் நோக்கங்களில் தனிச் சிறப்புடையன, அடிப்படை மனித உரிமைகள் எனப்படும் தனி மனிதன் உரிமைகளே. அமைப்பின் தலைசிறந்த புரட்சிகரமான வருங்கால வளர்ச்சிக்குதவும் வகையில் மிகவும் சிறப்பு வாய்ந்த கூறு இதுவே. சமூகமும் நாடும் கடந்து நாம் ஒருவகைக் கனக் காணினும், சமூகம், நாடு, உலகம், என்ற இவ்வெல்லா மேற் கட்டுமானங்களும் தனி மனிதன் வாழ்வாகிய அடித்தளத்தின் மீதன்றி, உறுதியாய் அமையமுடியாது. ஏனெனில்,

இக்கட்டடத்தில் உலகம் என்பதே மேற்கட்டு; நாடுகள், இதன் சுவர்கள்; சமூகங்கள், இதன் தூண்கள்; தனி மனிதனின் வாழ்வாகிய அடித்தளத்தின் மீதே இவை யாவும் நிலைபெறுகின்றன.

(6) தனி மனிதன் உரிமைகளைப் பொறுத்த மட்டில் பல் வேறுபட்ட மொழி, சமயம், இனம் ஆகியவை காரணமான எந்த வேற்றுமையும், ஒரு சார்பும் மக்களிடையே காட்டப்படா வென்பது ஐ. நா. உரிமை விளம்பரத்திலும். அதன் பல ஒழுங்கமைதிகளிலும், சட்டதிட்டங்களிலும் வற்புறுத்தப்படுகிறது. வலிவுடையவர், வலிவற்றவர் என்ற வேறுபாடு, நாடுகளிடையேயும் கூட்டு நிலை வாழ்விலும் எப்படிச் சமத்துவத்தையும் சரி நேர்மையையும் கெடுக்கிறதோ, அது போலவே, நாகரிக வாழ்வினிடையேயும் இனம், நிறம், சமயம், கோட்பாடு, மொழி, வகுப்பு ஆகியவை காரணமாகவும், பால் காரணமாகவும் பல வேறுபாடுகள் எழுந்து, அவற்றால் தனி மனிதன் சமத்துவ உரிமையும், சரி நேர்மையும் கெடுகின்றன. இவ்விரண்டையும் பேண வேண்டுமென்றால், இவ்வேறுபாடுகள் பேணப்படக் கூடாவென்பது வற்புறுத்தப்படுவதும். நடைமுறையில்கொண்டு வரப்படுவதும் இன்றியமையாதவை.

(7) இறுதியாக, மேற்கூறிய எல்லா நோக்கங்களும் நிறைவேறும்படி அரசாங்கங்களிடையிலும், நாட்டு மக்களிடையிலும் ஒத்துழைப்பையும், கூட்டுச் செயலையும் பெருக்குவது ஐக்கிய நாடுகள் அமைப்பின் முக்கிய நோக்கம் ஆகும். இது இந்நோக்கங் கொண்ட நிலையங்களை உண்டு பண்ணுவதாலும், வளர்ப்பதாலும், அத்தகைய பல வகைப்பட்ட நிலையங்களை இணைப்பதாலுமே முடியக்கூடும். சமூகப் பொருளியல் மன்றம். அதன் சார்பான ஐ. நா. கல்வி, விஞ்ஞான, பண்பாட்டுக் கழகம்; இதற்கு முன்னோடியாயிருந்த ஐ. நா. நல்லாக்க மறுசீரமைப்பு மன்றம் முதலிய கிளை உறுப்புகள், அனைத்து நாட்டுத் தொழிலாளர் அமைப்புப் போன்ற பிற இணை அமைப்புக்கள் ஆகியவற்றின் வகயிலாகவும், அவற்றின் ஒத்துழைப்புடனும்

செயலாற்றுவதுடன், அவற்றின் வேலை முறைகளை ஒரு முகப் படுத்தவும் ஐ. நா. இயக்கம் பாடுபடுகிறது.

### அருஞ்சொற்பொருள் :

நெகிழ்ச்சி — இளக்கம்; ஒரு முகப்பட்ட — ஒன்றுபட்ட; உள்ளார்ந்த — மனத்தில் பொருந்திய; இடையீட்டாளர் — சமரசம் செய்விப்போர்; மேற்கட்டுமானங்கள் — கட்டடத்தின் மேற்கோப்பு; ஒருசார்பு — ஒருவர் பக்கம் சார்ந்திருத்தல்.

### கேள்விகள் :

1. 1952-ஆம் ஆண்டு முடிய ஐ. நா. அமைப்பில் இணைந்த நாடுகள் எத்தனை? எந்த நாடு இன்னும் இணைக்கப்படாதிருக்கின்றது?
2. ஐ. நா. அமைப்பின் முடிவான நோக்கங்கள் யாவை?
3. இன்று ஐ. நா. அமைப்பு எத்தகைய அடிப்படையில் வகுக்கப் பட்டுள்ளது?
4. ஐ. நா. அமைப்பின் நோக்கங்களை விளக்கி ஒரு கட்டுரை எழுது.

### பயிற்சி :

ஐ. நா. ஆற்றியுள்ள தொண்டுகளைப் பற்றி 25 வரிகளில் ஒரு கட்டுரை எழுதுக.

# 12. அன்னைக்கு

(டாக்டர் மு. வரதராசனார், எம்,ஏ., எம்.ஓ.எல்., பி.எச்.டி.)

அன்புள்ள அம்மா,

உன் கட்டளைப்படியே இது வரையில் நடந்தேன்; இன்று நடக்க முடியவில்லை.

"தமிழர்கள் உணர்ச்சி அளவில் ஊக்கம் மிகுந்தவர்கள்; வாய்ச்சொல் அளவில் வீரம் மிகுந்தவர்கள்; இந்த இரண்டும் மட்டும் பெற்றவர்களால் ஒரு நாடு முன்னேற்றம் அடைய முடியாது. கடமையொழுங்கு ஒன்று வேண்டும். இந்த ஒன்று மட்டும் இருந்து, மற்ற இரண்டும் இல்லாதிருந்தாலும், கவலையில்லாமல் தமிழ் நாடு எப்போதோ தலையெடுத்திருக்கும். நீ ஒரு தமிழன்; பழங்காலப் பிற்போக்குத் தமிழனாய் இருந்து வாயால் மட்டும் விளங்காதே; உணர்வால் மட்டும் உயராதே; செயலாலே சீர்ப்படு," என்று நீ எனக்கு எழுதிய கடிதத்தை நான் மறந்துவிடவில்லை; என் கடமையில் கண்ணுங்கருத்துமாய் இருந்து முற்போக்குத் தமிழன்தான் என்பதைக் காட்டப் போகிறேன்; பாடங்களை நன்றாகக் கற்று முதல் வகுப்பில் தேறப் போகிறேன். ஆனாலும், நேற்றுவரையில் அமைதியாய் இருந்தது போல, இன்று இருக்க முடியவில்லை. ஆகையாலேதான் சில திங்கள் கழித்து இதுபோலக் கடிதம் எழுதுகிறேன்;

அம்மா, நான் எப்படி இன்று அமைதியாய் இருக்கமுடியும்? உலகம் அழுகின்றதே! நான் மட்டும் புத்தக உலகத்தில் என்னை மறந்திருக்க முடியுமா?

உலகம் கண்ணீர் விடுகின்றது; ஒரு வீடு, ஒரு நகரம், ஒரு நாடு மட்டும் கலங்கவில்லை; உலகம் கலங்கி உருகுகின்றது. வீடுதோறும் இழவு, நகரந்தோறும் சாக்காடு நேர்ந்தது போல இருக்கின்றதே! ஒவ்வொருவர் முகமும் வாடிச் சுருங்கி விட்டதே!

அம்மா, இமயமலை தலை கீழாய்ப் புரண்டிருந்தாலும் இவ்வளவு பெரிய அதிர்ச்சி உண்டாகியிருக்காது. நிலநடுக்கம் உண்டானாலும், ஒவ்வொரு பகுதிதான் நடுங்கும். ஆனால், உலகத்தார் உள்ளமெல்லாம் அதிரும் அதிர்ச்சி இந்திய நாட்டிலே டில்லியிலே நடந்துவிட்டதே!

வாழ்ந்த நாளிலும் எல்லாருடைய வாழ்க்கையிலும் ஒவ்வொரு வகை மாறுதலை ஏற்படுத்தும் ஆற்றல் அந்தத் தூய மெல்லிய உடலுக்கு இருந்தது. உணர்வற்று வீழ்ந்த நாளிலும் எல்லோரையும் ஒரு சேரக் கலங்க வைக்கும் ஆற்றல் அந்த நல்லுடலுக்கு இருந்ததே!

புத்தர் வாழ்ந்தார்; அவர் வாழ்நாளில் இலட்சக்கணக்கான மக்களின் வாழ்க்கையைத் திருத்த முடிந்தது. சாக்ரடீஸ் வாழ்ந்தார்; அவருடைய வாழ்நாளில் பதினாயிரக்கணக்கான மக்களின் வாழ்க்கையில் மாறுதலை விளைவிக்க முடிந்தது. ஏசுநாதரும் அவ்வாறே. ஆனால், வாழ்நாளிலேயே கோடிக் கணக்கான மக்களின் வாழ்க்கையில் மாறுதலை உண்டாக்கினவர் யார் அம்மா? காந்தியடிகள்—இந்தப் பெயரையும் நினைத்துத் தம் மனத்தையும் தொட்டுப் பார்க்கட்டும்! அவருடைய பகைவரும் அவரிடமிருந்து கற்று வளர்ந்த புதிய முறைகள் சில உண்டு என்பதை உணர்ந்து கொள்வார்களே!

எல்லோரும் அரசியல் காந்தியை அறிவார்கள். அரசியலில் அவர் பெருந்தலைவர் என்பது பெரும்பாலோர்க்குத் தெரிந்தது. ஆனால், இது முழு உண்மை அன்று; ஓரளவுதான் உண்மை. இன்னும் எண்ணிப் பார்த்தால், அவருடைய அரசியல் கொள்கையில் கருத்து வேறுபட்டவர் எங்கும் இருக்கின்றனர். அவருடைய அரசியல் கொள்கைக்குச் செல்வாக்கு இருந்தாலும், உடன்படாமல் புறக்கணித்த தலைவர்களும் உண்டு. அறிஞர்களும் உண்டு; தொண்டர்களும் உண்டு.

ஆனாலும் அவருடைய அரசியல் நெறியே இன்று வரையில் பெற்றுள்ள வெற்றிக்கெல்லாம் காரணம்; அவருடைய

அறிவுரையே இன்று பல தலைவர்கள் உயர்வுக்குக் காரணம்: பல அறிஞர்கள் பெருமைக்குக் காரணம்; இந்தியாவின் தலை நிமிர்ந்த வாழ்வுக்குக் காரணம்.

அம்மா, மறக்க முடியவில்லை! நம் வீட்டில் நாம் பல நாள் காந்தியடிகளின் கொள்கைகளைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்த நாட்களை மறக்க முடியவில்லை! 'அரசியலில் அவர் சொல்வதில் இது மட்டும் சரி; அது சரியன்று,' என்று வாதாடினோம். ஆனால் ஒவ்வொரு நாளும் அவருடைய தொண்டு வாழ்வையோ, இயற்கை நெறியையோ, சமயக் கொள்கையையோ, அற ஒழுக் கத்தையோ, கடமை ஒழுங்கையோ முடிவில் குறிப்பிட்டு அவரது ஒப்பற்ற நிலையை வணக்கத்தோடு போற்றி அடக்கத் தோடு அமைதியுறவில்லையா? அவரைவிடப் பெரிய அரசியல் அறிஞர்கள் இருக்கலாம். ஆனால், அவர் வாழ்ந்த வாழ்வைவிடச் சிறந்த வாழ்வை—தூய வாழ்வைக்—குறிப்பிட வாய் இல்லாமல் அடங்கிவிட்டோம் அல்லவா?

''உள்ளத்தாற் பொய்யா தொழுகின் உலகத்தார்
உள்ளத்துள் எல்லாம் உளன்.''

என்று இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் ஒரு தமிழர் எழுதி விட்டுச் சென்றார். இந்த இரண்டாயிரம் ஆண்டுகளாக அந்த ஒரு குறளுக்கு எடுத்துக்காட்டு இல்லாமலிருந்தது, காந்தியடி களின் வாழ்வுதான் ஒரே எடுத்துக்காட்டாய் நின்றது. அன்று திருவள்ளுவர், உண்மையின் பெருமையினை உணர்ந்து, உணர் வுலகத்தில் நின்று எழுதினார். எழுதிய அவரைப்பற்றியே தமிழ கத்தில் பலருக்குத் தெரியாது. ஆனால், அவர் உணர்ந்து எழுதிய கற்பனை அது. அந்த உண்மை, கற்பனையாகவே நிற்கவில்லை; ஓர் அரிய வாழ்வாய் மலர்ந்தது. அந்த மலர் வாடியது; சாம்ப லானது. மதவெறியின் போர்வை போர்த்த அரசியல் வெறி, அந்த அருமை மலரைக் கசக்கி எறிந்தது.

அந்த ஒரு குறள் மட்டும் என்ன! திருவள்ளுவரின் அறத்துப் பாலில் உள்ள ஒவ்வோர் எழுத்திற்கும் எடுத்துக்காட்டான வாழ்க்கை அல்லவா அது?

எத்தனையோ நம்பிக்கைகள், எவ்வெவ்வாறோ தடுமாறும் நாட்கள், ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் வருகின்றன. ஆனால், அறம் என்ற ஒன்று உலகத்தை ஆளும் சட்டமாய் இருக்கிறது என்பதை என்றும் தளரா நம்பிக்கையைக் கொண்டு வாழ்ந்த வாழ்வு, அன்று மாலை அடங்கிய அந்தப் பெருவாழ்வு!

இன்னொன்றும் இந்த நேரத்தில் எனக்குத் தோன்றுகிறது; 'அடிகள் பெரியவர்; ஒப்பற்ற தலைவர்,' என்பதை உலகமெல்லாம் உணர்ந்துவிட்டது உண்மைதான். ஆனால், அவருடைய கொள்கைகளின் பெருமையை உணர்ந்தவர் எத்தனை பேர் அம்மா? அரசியலில் மட்டும் அவர் இன்னவர் என்பதைப் பொது மக்கள் உணர முடிந்திருக்கலாம். இயற்கை, அறம், எளிமை, கடமை, ஒழுங்கு முதலியவற்றில் அந்த ஞாயிறு வீசிய ஒளியால் பயனடைந்தவர் மிக மிகச் சிலரே என்று எண்ணுகின்றேன். அப்பா ஒருநாள் கூறியது போல, காந்தியடிகளின் உயர்ந்த கொள்கைகள் பொது மக்கள் அறிவுக்கு எட்டாதவைகளே. பசியில்லாமல் உணவு விடுதிகளுக்குச் சென்று உண்பது போலக் கலையுணர்வு இல்லாமல் திரைப்படக்காட்சிக்குச் சென்று காண்பது போல, அன்று இல்லாமல் திருமணத்திற்குச் சென்று ஆரவாரம் செய்வது போல, நாகரிகத்தின் பெயரால் கொள்கைகளை உணராமல் வாயால் புகழும் மக்கள் மிகுதியாய் இருக்கின்றார்கள். அதனாலே தான், அந்தத் தூய உடல் வாடிய அன்று இரவே, கொலையும், கொள்ளையும், தீயிடலும், துன்புறுத்தலும் செய்யச் சிலர்க்கு மனம் வந்தது. ஆனாலும், அவர்களும் துயரக் கோலத்தோடு கண்ணீர் வடித்தார்கள் என்பதைக் கேட்கும்போது, அந்தக் கொடுமைகளுக்கு அவர்கள் காரணமல்லர், நெடுங்காலமாக நிலவி வரும் வெறியே காரணம் என்பது தெரிகின்றது.

அம்மா, என்னென்னவோ நினைவுக்கு வருகின்றன. தென்னாப்பிரிக்காவில் அவர் தொடங்கிய இயக்கத்துக்குத் தமிழ் மக்கள் துணையாய் நின்று அவரது அன்பையும் பெற்றார்கள். 'திக்கற்றவர்க்குத் தெய்வமே துணை,' என்னும் பழமொழியாலும், திருக்

குறள் கருத்துக்களாலும் தமிழ் மொழி அவருடைய போற்று தலைப் பெற்றது. தமிழ்ச் சிறுவர்களுக்குத் தமிழ் கற்பிக்கும் ஆசிரியர் இல்லாத போது அவரே தமிழாசிரியராய் இருந்து தொண்டு செய்ததும் நினைவுக்கு வருகின்றது. இன்னொன்றை நினைக்கும்போது நெஞ்சம் நெக்குருகுகின்றது! தமிழர்களின் பண்பாடும், தமிழ் மொழியின் கருத்து வளமும் அவர் மனத்தைக் கவர்ந்தது போலவே, தமிழ் நாட்டு வறுமையும் அவருடைய கோலத்தையே மாற்றிவிட்டதே! சேலத்திற்குத் தெற்கே தமிழ் மக்கள்—ஆண்களும் பெண்களும்—அரை நிர்வாணமாய் முழங் கால் வரையில் அரையாடை உடுத்து உழைப்பதைக் கண்ணால் கண்ட அன்றுதானே, அடிகளின் தலைப்பாகையும் அகன்றது! நீண்ட அங்கியும் நீங்கியது! பத்து முழ வேட்டியும் பறந்தது! 'இவர்களுக்கு மானத்தை மறைக்கவும் கந்தல் போதவில்லை!' என்று கசிந்துருகித் தமிழ் நாட்டுக் குடியானவன் கோலத்தை அல்லவா அவர் அன்று முதல் மேற்கொண்டார்! அந்தக் கோலந் தானே உலகம் புகழ்ந்து வணங்கிய வறுமைத் திருக்கோலம்!

அம்மா, ஏதோ எழுதினேன், ஆறுதல் பெற.

அன்புள்ள மகன்,

எழில்

அருஞ்சொற்பொருள் :

சாக்காடு—சாவ; புறக்கணித்தல்—அவட்சியம் செய்தல்; அரையாடை—இடுப்புத்துணி.

கேள்விகள் :

1. நம் நாட்டு மக்கட்கு ஏற்பட்ட பேரதிர்ச்சி தரும் செய்தி யாது?

2. தென்னாப்பிரிக்காவில் காந்தி அடிகளின் எத்தகைய உதவி அங்கு வாழ்ந்த தமிழருக்குக் கிடைத்தது.

3. காந்தி அடிகள் முழங்கால் வரை ஆடை அணியக் காரணமென்ன?

காந்தியடிகளின் பண்புகளை 20 வரிகளில் தொகுத்தெழுதுக

# 13. இசைக் கருவிகள்

(திரு. நா. பாலுசாமி, எம். ஏ.)

## தோற்றுவாய்

பண்டைத் தமிழகம் கலை நிலையமாகக் காட்சி அளித்தது. பல்வேறு கலைகளின் வளர்ச்சிக்கும் தாய் மொழியாகிய தமிழ் கருவியாக அமைந்திருந்தது. தமிழர், இயல், இசை, கூத்து ஆகிய முத்துறைகளிலும் தமிழை வளர்த்தனர். அதனால் தமிழ் முத்தமிழ் எனப்படுவதாயிற்று. "சங்கத் தமிழ் மூன்றும் தா," என்ற ஔவையாரின் அருள் மொழி இதனை வலியுறுத்தும்.

ஒரு சமுதாயத்தின் வளர்ச்சியையும், வளத்தையும் காட்டுவன மேலே கூறப்பட்ட முத்துறைகளாகும். இயல் மக்களது திட்பத்தையும், இசை அவர் தம் நுட்பத்தையும், கூத்து ஒட்பத்தையும், காட்டவல்லன. இயல், இசை, கூத்து என்ற மூன்றனுள்ளும் நடுவணதாகிய இசை தனிச் சிறப்பு வாய்ந்தது. இயலிலும், கூத்திலும், இசை கலந்திருப்பது வெளிப்படை. உரையாலும் பாட்டாலும் இயன்ற இயலில், சொற்கள், முறையே பொருளோடு புணர்ந்தும், அசை, சீர், தளை, தொடை, அடி ஆகியவற்றால் இயன்றும் இசை யின்பம் தருகின்றன. கூத்தின் சிறப்பை மிகுவிப்பதும், அதற்கு ஏற்ற பின்னணியும் இசையேயாகும். எனவே, இசையே ஏனைய இயல் கூத்துக் களினும் சிறப்புடையதாம்.

உலக வாழ்க்கையில் யாவராலும் விரும்பப்படும் தன்மை வாய்ந்தது புகழ். "ஒன்றா உலகத்து உயர்ந்த புகழல்லால் பொன்றாது நிற்பதொன் றில்," என்றார் வள்ளுவனாரும். இத்தகைய புகழை இசை என்று வழங்கினர் தமிழர். "ஈதல் இசைபடவாழ்தல்" என்ற பொய்யா மொழித்தொடரே இதற்குப் போதிய சான்றாகும். இதிலிருந்து தமிழரது வாழ்க்கையில் இசைக் கலை எத்துணை இடம் பெற்றிருந்தது என்பது தெற்றெனப் புலப்படும்.

தமிழ்மொழியில் எண்ணற்ற இயற்றமிழ்க் கலை நூல்கள் எழுந்தமை போலவே, இசைக்கலை நூல்களும், கூத்துக் கலை நூல்களும் பல தோன்றியிருந்தமை புலனாகின்றது. இசை நுணுக்கம், இசை மரபு முதலிய இசை நூல்களும், செயிற்றியம் முதலிய கூத்திலக்கண நூல்களும் பண்டு வழக்கில் இருந்தமை உரையாசிரியர்களின் குறிப்புக்களிலிருந்து தெரிய வருகின்றது. இயற்கலை நூல்களுள் பல கடற்கோளுக்கு இரையாகி ஒழிந்தமை போலவே, இசை நூல்களும் எச்சமற்று இறந்தொழிந்தன. இது பெரிதும் வருந்துதற்குரியது.

பண்டைத் தமிழகத்தில் கவியரசரும் புவியரசரும் ஒருங்கு கூடிக் கழகம் நிறுவி, முத்தமிழ்க் கலைகளையும் நன்கு போற்றினர். இதுவே தமிழ்ச் சங்கம் என வழங்கப்பெற்றது. இச்சங்கத்தில் இயற்புலவரும், இசைப்புலவரும், கூத்துநூற்புலவரும் தனித்தனி அமர்ந்து, தத்தம் துறைகளில் சிறந்து விளங்கினர். இச்சங்கத்தின் நிலைக்களமாய் விளங்கிய பெருமை பாண்டியர் கோநகரமாகிய மதுரையைச் சாரும். சேர நாட்டுப் புலவரும், சோழ நாட்டுப் புலவரும், பாண்டியர் தலை நகரத்தில் வீற்றிருந்தனர். இங்ஙனம், முத்தமிழுக்கும் தமிழ்ச் சங்கத்தில் தனித்தனி துறைகள் அமைந்திருந்தமை,

''சிறைவான் புனற்றில்லைச் சிற்றம்
பலத்துமென் சிந்தையுள்ளும்
உறைவா னுயர்மதிற் கூடலி
னாய்ந்தவொண் டீந்தமிழின்
துறைவாய் நுழைந்தனை யோவன்றி
யேழிசைச் சூழல்புக்கோ
இறைவா! தடவரைத் தோட்கென்கொ
லாம்புகுந் தெய்தியதே!''

என்ற மணிவாசகனாரது திருக்கோவைச் செய்யுளால் தெளியலாம். இப்பாட்டில் ''ஒண்டீந் தமிழின் துறை'' என்ற தொடர் அகப்புறத் துறைகளால் இயன்ற இயற்றமிழ்ப் பகுதியையும், ''ஏழிசைச் சூழல்'' என்ற தொடர் இசைத் தமிழ்ப்

பகுதியையும் குறிப்பனவாகும். மூன்றும் பகுதியாகிய கூத்து இப்பாட்டில் குறிக்கப்பட்டிலதேனும், அஃது இருந்தது எனக் கோடல் இழுக்கின்றும்.

இங்ஙனம், சங்கத்திலே வளர்ந்த முத்தமிழ்ப் பாவைகளுள் இசைத்தமிழ்ப் பாவையின் ஏற்றத்திற்கு உறுதுணை புரிந்த இசைக் கருவிகளைப் பற்றி கண்டு ஆராய்வோம்;

**இசைக்கருவிகள் :**

இசை பிறத்தற்குரிய நிலைக்களங்கள் இரண்டாம். ஒன்று கண்டம்; மற்றொன்று கருவி. இவ்விரண்டினின்றும் எழும் இசைப்பாடல்கள் முறையே கண்டப் பாடல் (வாய்ப்பாட்டு) கருவிப் பாடல் எனப்படும். கண்டத்தால் எழுப்பப்படும் இசைப் பாடலுக்கும் கருவிப்பாடல் உறுதுணை புரிய வல்லது. இசைவாணர் ஒருவர் கண்டத்தால் பாடுகின்றுழி அப்பாடலின் போக்கிற்கும் நோக்குற்கும் ஏற்பப் பல்வகைக் கருவிகளும் துணைநின்று இசை கூட்டுமேல், அது கேட்போருக்கு எத்துணை இன்பம் பயக்கும்! இத்தகைய இசை நிகழ்ச்சி பல்லியம் (Orchestra) எனப்படும். இனி, இவ்விசைக் கருவிகளின் வகையும் தொகையும் காண்போம்.

இசைக் கருவிகள் மூவகைப்படும்; அவை தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி என்பன. இவற்றோடு கஞ்சக்கருவி என்றொரு வகை உண்டு. தோலால் போர்ப்புண்டு கையாலும் கடிப்பாலும் தட்ட இசை தருவது தோற்கருவி. துளையிட்டு அதன் வழியாக இசையெழுப்பப் பயன்படுவது துளைக்கருவி, நரம்புகளுக்கு முறுக்கிட்டு விரலால் தடவ இசை தருவது நரம்புக் கருவி. ஒன்றோடு ஒன்று மோதுறலால் இசை பிறப்பிப்பது கஞ்சக் கருவி.

**தோற்கருவிகள் :**

பண்டைக் காலத்தில் வழங்கிய தோற்கருவிகள் முப்பத்து ஒன்று என்பது சிலப்பதிகார உரையாசிரியராகிய அடியார்க்கு

நல்லார் காட்டும் மேற்கோளிலிருந்து தெரிகின்றது. அவை, பேரிகை, படகம், இடக்கை, உடுக்கை, மத்தளம், சல்லிகை, கரடிகை, குடமுழா, கணப்பறை, தமருகம், தண்ணுமை, தடாரி, முழவு, முரசு, தகுணிச்சம், துடி முதலியன. இவை அக முழவு, அகப்புற முழவு, புறமுழவு, புறப்புறமுழவு, பண்ணமை முழவு, நாண்முழவு, காலை முழவு என எழுவகைப்படும். மத்தளம், சல்லிகை, இடக்கை, கரடிகை முதலியன அக முழாக்கள், தண்ணுமை, தகுணிச்சம் முதலியன அகப்புற முழாக்கள். கணப்பறை முதலியன புறமுழா. இங்குக் கூறப்படாத நெய்தற் பறை முதலியன புறப்புற விழா. முரசு முதலியன பண்ணமை முழா. நாழிகைப் பறை நாண்முழா, துடி, காலை முழா. இவ்வாறு பகுத்துக் காட்டுவர் அடியார்க்கு நல்லார். இவற்றுள் காலத்தால் மிக்க தொன்மைவாய்ந்த தொல்காப்பியத்துள் பறை, துடி, முரசு ஆகியமூன்று தோற்கருவிகளே குறிக்கப்பட்டுள்ளன.

**துளைக்கருவிகள் :**

துளைக்கருவிகளுள் தொன்மை வாய்ந்தது குழல். இது வங்கியம் எனவும்படும். இது மூங்கில், வெண்கலம், கருங்காலி முதலியவற்றினுல் செய்யப்படும். ஆயின், மூங்கிற்குழலே சிறந்தது. இது பொதுவாக இருபது விரல் நீளமும், நான்கரை விரல் சுற்றளவும் உள்ளதாகச் செய்யப்படும். இதில் ஏழு துளைகள் இடப்படும். திருவள்ளுவர் இசை இனிமைக்கு எடுத்துக் காட்டாகக் குழலையே முதலில் அமைத்துள்ளார். ''குழலினிது யாழினிது'' என்ற தொடர் இதனை விளக்கும். குழலின் சிறப்பைப் பரிபாடல், ''ஏழ்புழை ஐம்புழை யாழிசை கேழ்த்தள்ள,'' எனப் பாராட்டுகின்றது. இவ்வடியின்கண் ஏழு துளைகளையும், ஐந்து துளைகளையும் உடைய குழல் முதலிடம் பெற்றிருப்பது கவனிக்கத் தக்கது. பண்டு போலவே இன்றும் இவ்விசைக் கருவி இசையரங்குகளில் பெருஞ்சிறப்புற்று வருவது மகிழ்ச்சிக்குரியதாகும். இக்காலத்தில் வழங்கும் நாதசுரம், மகிடி (பாம்பாட்டியின் இசைக்கருவி) முதலியனவும் துளைக்கருவிகளே

**நரம்புக் கருவிகள் :**

நரம்புக் கருவிகளுள் யாழ் தலை சிறந்தது. இது பேரியாழ், மகரயாழ், செங்கோட்டியாழ், சகோடயாழ் என நால்வகைப்படும். இனி யாழ்களில் அமைந்துள்ள நரம்புகளின் எண்ணிக்கையின் சிறுமை பெருமை நோக்கி அவற்றைச் சீறியாழ், பேரியாழ் என இரு வகையாகப் பகுப்பாரும் உளர். இவை தவிர, வில்யாழ் என்பதும் பண்டைக்காலத்தில் இருந்ததாகத் தெரிகின்றது. பெரும்பாணாற்றுப்படையுள் இவ்யாழ் குறிக்கப்படுதலே இதற்குச் சான்று. சங்க இலக்கியங்களிலும் இடைக்கால இலக்கியங்களிலும் யாழைப் பற்றிய குறிப்புக்கள் மிக அதிகமாகக் காணப் படுகின்றன. பண்டைக்கால மக்களின் வாழ்க்கையில் யாழ் பேரிடம் பெற்றிருந்தது. இதன் பெருமையை விதந்து கூறும் விபுலானந்தர், "முன்னாளிலே பாணன் கையிலும் பாடினி கையிலுமிருந்த யாழ்க் கருவியானது, இளங்கோவடிகள் காலத்திலே இசையாசிரியன் கையிலும் நாடக மகள் கையிலும் போய்ச் சேர்ந்துவிட்டது; ஆளுடைய பிள்ளையாருடைய காலத்திலே தெய்வமீந்த பொற்பலகை மீதேறி, அன்பர் உள்ளத்தை உருக்கிய அருட்கருவியாயிற்று; கொங்கு வேளும் திருத்தக்க தேவரும் நூல் எழுதிய காலத்திலே, அரசிளங் குமரிகள் கையில் ஏறி, அவர் மனம் விரும்பிய காதலரை அவருக்கு அளிக்குங் கருவியாயிற்று," என்றனர்.

இனி இத்தகைய சிறப்பு வாய்ந்த இவ்விசைக்கருவி இன்று இறந்து போயினமைபற்றி இரங்கியழுங்கும் அப்பெருமகனார், "வரலாற்றுக்கால எல்லைக்கு எட்டாத காலத்தில் வில்யாழ் எனப் பெயரிய குழவியாய் உதித்து, மழலைச் சொற்பேசி, இடையர் இடைச்சியரை மகிழ்வித்துச் சீறியாழ் என்னும் பேதைப் பருவச் சிறுமியாகிப் பாணனொடும் பாடினியொடும் நாடெங்கும் திரிந்து, ஏழைகளும் இதயம் களிப்பெய்த இன்சொற்கூறிப் பின்பு பேரியாழ் என்னும் பெயரோடு பெதும்பைப் பருவம் எய்திப் பெரும்பாணரொடு சென்று, குறுநில மன்னரும் முடிமன்னரும் தமிழ்ப்புலவரும், கொடை வள்ளல்களும் கேட்டு வியப்பெய்தும்

வண்ணம் நயம்பட உரை பகர்ந்து, அதன்பின் மங்கைப் பருவம் எய்தி அப்பருவத்திற்கேற்பப் புதிய ஆடையும் அணிகலனும் பூண்டு நாடக அரங்கத்திலே திறமைகாட்டி, மடந்தைப் பருவம் வந்து எய்துதலும் திருநீலகண்டப் பெரும்பாணரோடும், மதங்க சூளாமணியாரோடும் அம்மையப்பர் உறைகின்ற திருக்கோயில்கள் பலவற்றை வலம் வந்து, தெய்வ இசையினாலே அன்பர் உள்ளத்தினை உருக்கி, முத்தமிழ் விரகரால் பாராட்டப்பட்டு, அரிவைப் பருவம் வந்து எய்துதலும் அரசிளங் குமரிகளுக்கு இன்னுயிர்ப் பாங்கியாகி அவர்க்கேற்ற தலைவரை அவர்பாற் சேர்த்துச் சீரும் சிறப்பும் எய்தி நின்ற யாழ் என்னும் மென்மொழி நங்கை, இருந்த இடம் தெரியாது மறைந்து போயினாள்,'' எனக் கூறியுள்ளார்.

இனிச் சங்க நூல்களின் துணைகொண்டு யாழின் உறுப்புக்களைப் பற்றிச் சில கூறுவோம். பத்துப் பாட்டைச் சார்ந்த பொருநராற்றுப்படை ஆசிரியர் முடத்தாமக் கண்ணியார் யாழின் பல்வேறு உறுப்புக்களைப் பற்றிப் பின் வரும் விளக்கம் தந்துள்ளார்; ''மான் குளம்பு அழுத்திய இடத்தையொத்த இரண்டருகும் தாழ்ந்து நடு உயர்ந்த பத்தரினையும், விளக்கினது எரிகின்ற நிறத்தை உடைய விசித்துப் போர்த்தலுற்ற தோல் இரண்டு தலையும் கூடித்தைத்த மரத்தை மூடிய போர்வையினையும், நண்டின் கண்ணைக் கண்டால் ஒத்த முடுக்குதல் அமைந்த ஆணியினையும், எட்டாம்பிறை வடிவை உடைத்தாய் உள்நாக்கு இல்லாத வறிய வாயினையும், பாம்பு தலையெடுத்தால் ஒத்த ஓங்கிய கரிய தண்டினையும், கரிய நிறத்தை உடையோளுடைய முன்கைத் தொடியை ஒக்கும் வார்க் கட்டினையும், தினையரிசியில் குற்றலரிசியையொத்த விரலால் அசைக்கும் நரம்பின் தொடர்ச்சியினையும், மணமகனது கோலத்தையொத்த காட்சியினையும் உடைய யாழ்.'' இவ்வாறு யாழின் உறுப்புக்கள் பலவற்றையும் இயற்கைப் பொருள்களோடு பொருந்திக் காட்டி இருப்பது இன்பம் தருவதாகும். இங்ஙனமே பெரும்பாணாற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, மலைபடுகடாம் ஆகிய பாட்டுக்களும் யாழின் உறுப்புக்களை விரித்துள்ளன.

யாழைப்பற்றித் தமிழ் நூல்களில் கூறப்படும் பல்வேறு செய்திகளையும் ஒருங்கு சேர்த்து ஆராய்ந்து, இறந்து போன யாழைச் சிறந்த முறையில் தமது மதி நுட்பத்தால் மீண்டும் செய்து காட்டி, யாழ் நூல் எனப் பெரிய ஆராய்ச்சி நூலினை எழுதியருளிய காலஞ்சென்ற விபுலானந்த அடிகளாரின் தமிழ்க் கலைத்தொண்டினை என்னென்போம்! அப்பெரியாரை இதுகாலை நினைத்தாலே அவர்க்குத் தமிழகம் காட்டும் கைம்மாருகும்.

இறுதியாகக் கஞ்சக் கருவிகளைப் பற்றிச் சிறிது காண்போம். கஞ்சக் கருவி என்பது ஒன்ருேடொன்று மோதுறுதலால் இசை யெழுப்பும் கருவியாகும் என்பது கண்டோம். இக்காலத்தில் வழங்கும் தாளம், சாலரா, சப்பளாக் கட்டை முதலியன இவ்வகையைச் சார்ந்தவை.

இதுகாறும் இசையின் தன்மையையும், இசைக்கருவிகளின் சிறப்புக்களையும் ஒருவாறு கண்டோம். இங்குக் கூறப்படாத இசைக்கருவிகள் பல உள. விரிப்பிற் பெருகுமென்றஞ்சி அவை விடுக்கப்பட்டன. வாழ்க தமிழிசை! வளர்க தமிழிசைக் கருவிகள்!

## அருஞ்சொற்பொருள் :

திட்பம் – உறுதி; ஒட்பம் – புகழ்; விதந்து - மிகுத்து; அழுங்கும் - வருந்தும்; விரகர் - வல்லோர்; விசித்து - இறுக்கி.

## கேள்விகள் :

1. இசைக் கருவிகளின் வகைகள் எவை?
2. தோற்கருவிகள் சிலவற்றைக் குறிப்பிடுக.
3. யாழின் பெருமையை விபுலானந்தர் எங்ஙனம் குறிப்பிடுகிருர்?
4. பொருநராற்றுப்படை யாழைப் பற்றிக் கூறுவது யாது?

## பயிற்சி :

யாழ் இறந்து போனமை பற்றி இப்பாடத்தில் கூறப்படும் செய்தியை உம் சொந்த நடையில் விளக்கி 20 வரிகள் எழுதுக.

# 14. தராசு

## (தழுவல்)

(கவியரசர் சுப்பிரமணிய பாரதியார்)

இன்று நமது கடைக்கு ஒரு தமிழ்க் கவிராயர் வந்தார்; இவர் கைக்கோளர்; ஒட்டக்கூத்தர்கூட அந்தக் குலத்தாரென்று நினைக்கிறேன்.

இவருக்கு ஆங்கிலம் தெரியாது இவர் தம்முடைய பெயரை வெளிப்படுத்தக் கூடாதென்று சொன்னார். ஆதலால், வெளிப்படுத்தவில்லை,

தராசு முகமலர்ச்சியுடன் சிரித்தது. "இப்படி ஒரு கவிராயன் வந்தால் எனக்கு மகிழ்ச்சி; எப்போதும் வீண் வம்பு பேசுவோரே வந்தால் என்ன செய்வேன்!" என்றது. "கவிராயரே, என்ன கேட்க வந்தீர்?" என்று தராசு கேட்டது.

"எனக்குக் கவிராயர் என்பது பரம்பரையாக வந்த பட்டம். அது என்னுடைய தகுதியால் ஏற்படவில்லை. அத் தகுதி பெற முயற்சி செய்து வருகிறேன். அது பற்றிச் சில சொற்கள் கேட்க வந்தேன்," என்று கவிராயர் சொன்னார். "இதுவரை பாடின பாட்டுண்டானால் சொல்லும்," என்று தராசு கேட்டது.

"இதுவரை நாற்பது அல்லது ஐம்பது அடிகளுக்கு மேல் பாடியது இல்லை. இப்போதுதான் தொடக்கம். அது அத்தனை சுவையுமில்லை," என்று சொல்லிக் கவிராயர் விழித்தார்.

"மாதிரி சொல்லும்," என்றது தராசு.

புலவர் பாடத் தொடங்கினார்:

"காளை யொருவன் கவிச்சுவையைக்—கரை
காண நினைத்த முழுநினைப்பில்—அம்மை
தோளசைத் தங்கு நடம்புரிவாள்—இவன்
தொல்லறி வாளர் திறம்பெறுவான்.

ஆ! எங்கெங்குக் காணினும் சக்தியடா!—தம்பி
ஏழு கடலவள் மேனியடா!
தங்கும் வெளியினிற் கோடியண்டம்—எங்கள்
தாயின்கைப் பந்தென வோடுமடா!
கங்குலில் ஏழு முகிலினமும்—வந்து
கர்ச்சனை செய்தது கேட்ட துண்டோ?
மங்கை நகைத்த ஒலியதுவாம்—அவள்
வாயிற் குறுநகை மின்னலடா!''

தராசு: புலவரே, தமிழ் யாரிடம் படித்தீர்?

கவிராயர்: இன்னும் படிக்கவில்லை; இப்போதுதான் தொடங்குகிறேன்.

தராசு: சரிதான், தொடக்கம்; குற்றமில்லை. விடா முயற்சியும், கடவுட்பற்றும் அறிவிலே விடுதலையும் ஏறினால் கவிதையிலே வலிமை ஏறும்.

இங்ஙனம் சொல்லைச் சொல்லிக்கொண்டிருக்கையில் சீட்டிக் கடைச் சேட்டு வந்தார்.

''சாமியாரே, தீபாவளி அண்மையிலிருக்கிறது. ஏதேனும் சீட்டித் துணி செலவுண்டா?'' என்று கேட்டுக் கொண்டார்.

''இல்லை,'' என்று சொன்னேன்.

கவிராயர் தராசை நோக்கி, ''நம்முடைய உரையாடலுக்கு நடுவிலே சிறிது இடையூறு உண்டாயிற்று,'' என்றார்.

தராசு: உமக்கும் அதுதான்காணும் சொல். நெசவிலே நாட்டு நெசவு மேல். விலைக்கு நெய்வதைக்காட்டிலும் புகழுக்கு நெய்வதே மேல். பணம் நல்லது; ஆனால், பணத்தைக் காட்டிலும் தொழிலருமை மேல். காசிப் பட்டுப்போலே பாட்டு நெய்ய வேண்டும். அல்லது உறுதியான, உழவனுக்கு வேண்டிய கச்சை வேட்டி போலே நெய்ய வேண்டும். மல் நெசவு கூடாது, மஸ்லின் நீடித்து நிற்காது. பாட்டிலே வலிமை,

தெளிவு, மேன்மை, ஆழம், நேர்மை இத்தனையுமிருக்கவேண்டும்; இதற்கு மேலே நல்ல வண்ணஞ் சேர்த்தால் குற்றமில்லை. அது சேராமலிருந்தால் சிறப்பு.

அப்போது புலவர் தராசை நோக்கி, "நீயே எனது ஆசிரியர்," என்று சொல்லி வணங்கினர்.

தராசு: "எழுக! நீ புலவன்!" என்றது.

நேற்று மாலை தராசுக் கடைக்குச் சதுரங்கப் பட்டணத்திலிருந்து ஒரு மாத்துவ (ராவ்ஜீ) இளைஞன் வந்தான். "தராசுக் கடை இதுதானா?" என்று கேட்டான். "ஆம்" என்றேன். அவன் என் பக்கத்திலிருந்த தராசை ஒரு கோணற்பார்வையாகப் பார்த்தான்; கொஞ்சம் மீசையைத் திருத்தி விட்டுக்கொண்டான்; மூக்குக் கண்ணாடியை நேராக்கிக்கொண்டான். மனத்துக்குள் ஏதோ ஆங்கிலச் சொற்கள் சொல்லிக்கொண்டான்; என்னை ஒரு பார்வை பார்த்தான்.

"நான் கேட்கிற கேள்விக்கு விடை நீர் சொல்லுவீரா இந்தத் தராசு சொல்லுமா?" என்று கேட்டான்.

"தராசுதான் சொல்லும்," என்றேன்.

நம்பிக்கை கொள்ளாதவன் போல விழித்தான்.

"அப்படித்தான் சென்னைப்பட்டினத்தில்கேள்விப்பட்டேன். வியப்பான தராசு! உமக்கெங்கே கிடைத்தது? தமிழ்தான் பேசுமோ? ஆங்கிலம் தெரியாதாமே?" என்றான் அவன்.

நீ கேட்க வந்தவற்றைச் சொல், வீணாக நேரம் கழிப்பதில் பயனில்லை," என்று நான் நினைப்பூட்டினேன்.

அந்தப் பிள்ளையின் பெயர் வாசுதேவ ராவ். அவன் சொல்லுகிறான்; "பட்டாளம் சேர்க்கிறார்களே, அது உம்முடைய தராசுக்குத் தெரிந்திருக்குமென்றே நினைக்கிறேன்.

அதிலே சேரலாமா? சேர்ந்தால் பயனுண்டா? நம்மவர்களுக்குத் தளபதி பதவி கொடுப்பதில்லையென்று வைத்திருந்த வழக்கத்தை மாற்றி இப்போது புதிய விதிப்படி நமக்குப் படையில் உயர்ந்த வேலைகள் கொடுக்க விருப்புடன் இருக்கிறார்களென்று தெரிகிறது. இது நம்பத்தக்க செய்திதானா? நான் எப்படியேனும் நம்முடைய இந்தியத் தாய்க்கு உழைக்க வேண்டுமென்ற கருத்துடனிருக்கிறேன். இந்தப்பட்டாளத்தில் நாம் சேர்வதனால் நமது நாட்டிற்கு ஏதேனும் நன்மை ஏற்படுமா? அதை உம்முடைய புகழ் பெற்ற தராசினிடம் ஆராய்ச்சி செய்ய வந்தேன்;" என்றான்.

"ஆராய்ச்சியா? என்று தராசு கேட்டது.

**வாசுதேவன்** : ஆம்! ஆராய்ச்சிதான்; அதாவது ஆலோசனை.

அப்போது நான் வாசுதேவனை நோக்கி, "நீ ஏன் கேட்கிறாய்? நீ பட்டாளத்தில் சேரப்போகிறாயா?" என்றேன்,

**வாசுதேவன்** : ஆகா! நான் சேர்வதென்றால் ஏதோ எளிதாக நினைத்துவிடாதீர், எனக்குச் சென்னைப்பட்டினம் முதல் திருநெல்வேலி வரைக்கும் ஒவ்வொரு பெரிய ஊரிலும் நண்பர்கள் இருக்கிறார்கள். நான் சேர்ந்தால் அவர்கள் அத்தனை பேரும் சேர்வார்கள்; நான் சேராவிட்டால் அவர்கள் சேரமாட்டார்கள்.

தராசு, கடகடவென்று சிரித்தது.

வாசுதேவனுடைய கன்னங்கள் சிவந்து போயின. அவன் மூக்குக்கண்ணாடியை நேரே வைத்துக்கொண்டான்; மீசையைத் திருகினான். "இந்தத் தராசு என்னை நோக்கி ஏன் சிரிக்கிறது?" என்று மிகவும் சினத்துடன் என்னை நோக்கிக் கேட்டான்.

**தராசு** : முன்னொரு தடவை ஒரு வழக்கறிஞர் என்னிடம் வந்து எனக்குச் சில அறிவுரைகள் கூறிவிட்டுப் போனார். அதாவது, அரசியல் பற்றி நான் எவ்விதமான

கருத்தும் சொல்லக்கூடாதென்றும், போர்க்காலத்தில் அரசியல் பற்றி யாரும் ஒரு சொல்கூடப் பேசாதிருப்பதே நாம் இந்த அரசினருக்குச் செலுத்த வேண்டிய கடமையென்றும் பல முறை வற்புறுத்திச் சொன்னார். நானும் அவர் சொல்வது முழுதும் பொருந்துமென்பதை ஒப்புக்கொண்டு, நம்மால் கூடிய வரை இந்த அரசினருக்கு ஏற்பவே நடந்து விட்டுப் போகலாமென்ற எண்ணத்தால், அவருடைய சொற்படி நடப்பதாக உறுதி கொடுத்துவிட்டேன். நீயோ, அரசியல் பற்றிக் கேள்வி கேட்கிறாய். என்ன செய்வதென்று எண்ணிப் பார்க்கிறேன்,

**வாசுதேவன் :** இல்லை, இல்லை; நீ என்னைக் கண்டு சிரிக்கிறாய். நான் மதிப்புடன் கேட்க வந்தேன், உன்னுடைய குணம் எனக்குத் தெரியாமல் போய்விட்டது. போனால் போகட்டும் நீ; சிரித்ததைப் பற்றி எனக்குக் கவலையில்லை. உன்னைப் பொறுத்து விடுகிறேன். நான் கேட்க வந்ததற்கு விடை சொல்.

**தராசு :** தம்பி, நான் உனக்கு அஞ்சி ஒன்றையும் மறைத்துப் பேசவில்லை. நீ கேட்க வந்ததற்கு மறுமொழி ஏற்கெனவே சொல்லியாய்விட்டது, சிரித்தது உன்னைக் குறித்தே தான். அதில் ஐயமில்லை.

"காரணமென்ன?" என்று வாசுதேவன் சினத்தோடு கேட்டான்.

"என்னைப் பார்க்கும்போது தேசத்துக்குச் சண்டை போடக்கூடிய வீரனாகத் தோன்றவில்லை. சண்டையிலே சேர்கிறவன் இத்தனை ஆராய்ச்சியும், எண்ணங்களும் நடத்த மாட்டான்; படையிலென்று போய்ச் சேர்ந்துவிடுவான்," என்று தராசு சொல்லிற்று.

"என்னை நீ ஊர்காவலன் (போலீஸ்காரன்) என்று நினைக்கிறாயா?" என்று வாசுதேவன் கேட்டான்.

"நான் அப்படிச் சொல்லவில்லை," என்றது தராசு.

"நான் போய் வரலாமா?" என்று வாசுதேவன் கேட்டான்.

"போய் வா," என்றது தராசு.

அவன் போன பிறகு தராசு என்னிடம் சொல்லியது; இவன் உளவு பார்க்க வந்தவன். ஐயமில்லை. பட்டாளத்தில் சேர்ந்து நாட்டைக் காப்பாற்றக் கூடிய தகுதியுடையவன் இத்தனை வீண் பேச்சுப்பேசமாட்டான். அவனுக்கு இத்தனை செருக்கிராது."

*　　　*　　　*

நேற்றுக்காலையிலே பொழுது விடிந்து இரண்டு நாழிகைக்கு முன்னே நமது தராசுக் கடைக்குச் சென்னைப்பட்டினத்திலிருந்து ஒரு வழக்கறிஞர் வந்தார், இவருக்கு 40 வயதிருக்கும்; சிவப்பு நிறம். உருளைக்கிழங்கைப் போல நல்ல வட்டமான சதைப்பற்றிய முகம். நெற்றியிலே சந்தனம். அளவான தொப்பை. அதை மறைத்து 'அல்பாகா' என்ற பட்டுத் துணியுடுப்பு; காலிலே ஆங்கிலேயர் செருப்பு; தலையிலே மஸ்லின் பாகை; தங்க விளிம்புடைய மூக்குக் கண்ணாடி; உடுப்புப் பையிலே தங்கக் கடிகாரம், சங்கிலி முதலியன.

இவருக்குக் கண்ணிலே ஒரு குறை. பக்கத்திலிருக்கிற பொருள் நேரே தெரியாது; தூரத்திலே இருப்பது தெரியும். எனவே, கண் முன்னே பெரிய தராசு தொங்கவிட்டிருப்பதை இவர் காணுமல், கொஞ்சம் விலகியிருந்த நமது நண்பர் எலிக் குஞ்சுச் செட்டியாரை நோக்கித் திரும்பிக்கொண்டு, "தராசே, தராசே, உன்னுடைய புகழ் சென்னைப்பட்டினமெல்லாம் பரவியிருக்கிறது, உன்னிடம் சில கேள்விகள் கேட்கும்பொருட்டு வந்தேன். கேட்கலாமா?" என்ருர்.

செட்டியார், "நான் தராசில்லை, சாமி; நான் எலிக்குஞ்சுச் செட்டியார். அதோ கிழக்கே தொங்கவிட்டிருக்கிறதே அதுதான் தராசு, பக்கத்திலிருக்கிருரே, அவர்தான் தராசுக் கடைக் காரர்," என்ருர்.

வழக்கறிஞர் வெட்கமடைந்தார். நான் அதை அறிந்து வேண்டிய முகமன் சொல்லி முடித்த பிறகு, தராசினிடம் வழக்கறிஞர் கேள்விகள் கேட்கத் தொடங்கினர்.

**வழக்கறிஞர்:** நமது நாட்டு அருள் நிறைந்த அரசினர் நமக்கு எப்போது தன் ஆட்சி கொடுப்பார்கள்?

**தராசு:** ஒவ்வொரு சிற்றூரிலும் மக்கள் தலைவர் பள்ளிக்கூடங்கள் வைத்து, நாட்டு மொழிகளிலே புதிய படிப்புச் சொல்லிக்கொடுக்க ஏற்பாடு செய்தால், உடனே கொடுத்து விடுவார்கள்.

**வழக்கறிஞர்:** அது எப்போது முடியும்?

**தராசு:** நீர் போய் நான்கு சிற்றூர்களில் நான் சொல்லிய படி பள்ளிக்கூடங்கள் ஏற்பாடு செய்துவிட்டுப் பிறகு வந்து கேளும், சொல்லுகிறேன்.

**வழக்கறிஞர்:** சரி, வேருெரு கேள்வி கேட்கிறேன்; ஒருவனுக்கு வழக்கறிஞர் வேலையில் நல்ல வரும்படி வாராவிட்டால் அதற்கென்ன செய்யலாம்?

**தராசு:** அந்த வேலையை விட்டு வாணிகம் அல்லது கைத்தொழில் தொடங்கலாம்; பள்ளிக்கூடங்கள் நடத்தலாம் நூல் ஆராய்ச்சிகள் செய்யலாம்.

**வழக்கறிஞர்:** நூல் ஆராய்ச்சி செய்தால் பணம் வருமா? திருமகளுக்கும் கலைமகளுக்கும் பகை என்று சொல்லுகிருர்களே?

**தராசு:** அதெல்லாம் பழங்கதை, எவ்விதமான செல்வங்களுக்கும் அறிவுதான் வேர். அறிவிருந்தால் எதையும் வெல்லலாம். கல்வி வலிமையே வலிமை. உலகத்தில் இப்போது மிகுந்த செல்வத்துடன் இருக்கும் மக்களெல்லாம் கல்வி வலிமையாலே செல்வம் பெற்ருர்கள். வேறு கேள்வியுண்டா?

**வழக்கறிஞர் :** இல்லை. தராசே, வணக்கம்! நான் போய்வருகிறேன்.

திரும்பிப் போகும்போது வழக்கறிஞர் முகமலர்ச்சியுடன் போனார். தராசு அவரைக் காட்டி, "இன்னும் ஓராண்டில் இவர் மனிதராய்விடுவார்," என்று சொல்லிற்று.

## அருஞ்சொற்பொருள் :

தொல்லறிவாளர் - பழமையான அறிவுடையவர்கள்; மேனி - உடல்; கங்குல் - இரவு; குறுநகை - புன்னகை.

## கேள்விகள் :

1. கவிராயருக்குத் தராசு கூறிய அறிவுரை என்ன ?
2. வாசுதேவன் உளவாளி என்று எப்படி அறியலாம் ?
3. தன் ஆட்சி பெறுவதற்குப் பாரதியார் கூறிய வழி யாது ?
4. தராசு என்னும் தலைப்பு இக்கட்டுரைக்குப் பொருந்துமாற்றை விளக்குக.

## பயிற்சி :

இக்கட்டுரையில், நாம் தன்னாட்சி பெறுவதற்கு முன்பு நம் நாடு இருந்த நிலைமையைச் சில நிகழ்ச்சிகளால் பாரதியார் சுட்டிக் காட்டுகிறார். அவை என்னவென்பதை 15 வரிகளில் கூறுக.

---

# 15. நாட்டு நலத் திட்டங்கள்

(திரு. என். இலக்குமணப்பெருமாள் நாயுடு, பி.ஏ.,)

இந்தியாவில் கிராமங்களில் வாழும் மக்கள் தொகை மொத்தம் சுமார் 30 கோடி என்று கணக்கிடப்பட்டிருக்கிறது. இது இந்தியாவின் மொத்தமக்கள் தொகையில்80விழுக்காட்டிற்கு மேலாகும். கிராமப் புறங்களில் வாழும் மக்களது நிலையை உயர்த்தினால்தான் நம் நாடு முழுவதும் முன்னேற முடியும். மகாத்துமா காந்தி முதலான பலதலைவர்களும் இந்த உண்மையை வற்புறுத்தியிருக்கிறார்கள். கிராம மக்களின் நல்வாழ்வு அயலார் ஆட்சியில் பேணப்படாமல் குன்றியிருந்தது, நம் நாடு தன்னுரிமை பெற்ற பின்னர், கிராம மக்களின் முன்னேற்றத்தைக் குறிக்கோளாகக் கொண்டு பல திட்டங்களை நமது அரசு நிறைவேற்றி வருகின்றது. இத்தகைய நாட்டுநலத் திட்டங்களின் நோக்கம் மக்கள் புதுமை வாழ்க்கை வாழவும் அவர்கள் உணர்வையும் ஊக்கத்தையும் தட்டி எழுப்பி நல்வாழ்வு வாழவும் வழி வகுத்துக் கொடுப்பதேயாகும்.

1952 அக்டோபர் 2 ஆம் நாளாகிய காந்தியடிகள் பிறந்த பெருநாளில் தொடங்கி இப்பொழுது நடைபெற்று வரும் ஐந் தாண்டுத்திட்டங்களின் முதல் குறிக்கோள், அன்னாரின் உயிர்ப்புப் போன்றதாகிய கிராம மக்களின் வளர்ச்சியே. பல்வேறு நலத் துறைகளிலும் கிராம மக்கள் முன்னேற வேண்டும். உழவுத் தொழிலில் முழு அளவு பலனைப் பெற முயற்சி செய்யாதிருத்தல் வேலையின்மை, போதிய ஊதியமின்மை முதலியவைகள் காரணமாக, கிராம மக்கள் அல்லலுறும் நிலைமையை நீக்குவதே இத் திட்டங்களின் இறுதிக் குறிக்கோள். தரிசாகக் கிடக்கும் நிலங்களைப் பண்படுத்திப் பயிரிடற்கு ஏற்றவாறு அமைத்தல் நீர்ப்பாசன வசதிகளைச் செய்து முடித்தல், திருந்திய முறையில், ஆராய்ச்சி செய்யப்பட்ட உழவு முறைகளைக் கையாண்டு அதிகப் பலனை அடைய வழி கோலுதல், கால் நடைகளின்

வளர்ச்சிக்கான உதவிகளைச் செய்தல், திருந்திய உழவுக் கருவிகளையும் உரிய காலத்தில் உழவர்களுக்கு வேண்டிய கடனுதவிகளையும் தர ஏற்பாடுகள் செய்தல், உழவுக்கு உதவியாக நல்ல சாலைகள் அமைத்து விளைபொருள்களைக் குறைந்த செலவில் விற்பனை நிலையத்திற்குக் கொண்டுவந்து விற்று மிக்க ஊதியம் பெற உதவுதல், இவை போன்ற பலவும் நாட்டு நலத் திட்டங்களின் பல்வேறு குறிக்கோள்களாம்.

பயிரிடலில் மக்கள் கருத்தைச் செலுத்தி, மிகுதியாக உணவுப் பொருள் முதலியவற்றை விளைவித்தார்களானால், நாட்டில் பஞ்சமேது? பசி எது? வேலையில்லாத் திண்டாட்டம் ஏது? இத்துடன் குடிசைக் கைத்தொழில்களுக்கான உதவியும் அரசாங்கத்திடமிருந்து கிடைத்துவிட்டால், கிராமங்களில் வறுமைக்கு இடமேது? செல்வம் கொழிக்குமல்லவா? இவ்விதமாகக் கிராம மக்கள் பொருளாதாரத் துறையில் நலம் பெற்று எல்லாத் துறைகளிலும் முன்னேற வழி கோல உதவுவதற்கான முறையில் திட்டங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. திட்டங்களை அரசாங்கமே வகுத்து அவற்றை நிறைவேற்றினால் முழு வெற்றி கிடைக்கவேமாட்டாது; எதிர்பார்த்த நலனும்கிட்டாது. திட்டங்களை வகுப்பதிலும் நிறைவேற்றுவதிலும் மக்களுக்குப் பங்கு இருக்கவேண்டும். மக்களாகவே திட்டமிட்டு மக்களாகவே செயற்படுத்தும் திட்டத்தில் மக்கள் பெற்றுக்கொள்வர். அதனால் திட்டத்தின் வெற்றி உறுதியாவதுடன் மக்களின் ஊக்கமும் உறுதியும் வலுப்பட்டு, அவர்கள் நாட்டின் நலனுக்காக இன்னும் பல்வேறு திட்டங்களை நிறைவேற்றப் பெரிதும் உதவுவர். இவ்வண்ணம் நாட்டின் நலனில் மக்கள் கருத்துக் கொள்ளும் பண்பை வளர்ப்பதும் இத்திட்டங்களின் ஒரு சிறந்த குறிக்கோளாகும்.

நாட்டு நலத் திட்டங்கள், தேசிய வளர்ச்சித் திட்டங்கள் என்றும், சமுதாய நலத் திட்டங்கள் என்றும் இருவகையாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. தேசிய வளர்ச்சித் திட்டம் நிறைவேற்றப்படும் பகுதிகளில் அடிப்படையான குறிக்கோள்களாகிய

பயிரிடல், கால் நடைகளின் வளர்ச்சி, கூட்டுறவு, பாதைகள், பாலங்கள், பள்ளிகள் முதலியவை அமைத்தல், சமூகக் கல்வியைப் பரப்புதல் என்பன மேற்கொள்ளப்படும். சமுதாய நலத் திட்டப் பகுதிகளில், மேலே சொன்ன அடிப்படைத் தேவைகளான நலன்களோடு, பொதுச் சுகாதாரம், கிராமக் கைத்தொழில் முதலியனவும் மேற்கொள்ளப்படுகின்றன. தேசீய வளர்ச்சித் திட்டப் பகுதிகளுக்கு அளிக்கப்படும் பண உதவியைவிடச் சமுதாய நலத் திட்டப் பகுதிகளுக்கு மிகுதியான பண உதவி அளிக்கப்படுகிறது. ஒவ்வோர் ஆண்டும் வளர்ச்சி வேலைகளைத் தீவிரப்படுத்துவதற்குத் தேசீய வளர்ச்சித் திட்டப் பகுதிகள் சமுதாய நலத் திட்டப் பகுதிகளாக மாற்றப்பட்டு வருகின்றன. இந்த இருவகைத் திட்டங்களும் மூன்று ஆண்டுகள் செயற்பட்ட பின்னர் நிலையான நாட்டு நலத் திட்டமாக மாறி செயற்படும்.

நாட்டில் பல சமுதாய நலத்திட்டங்கள் தொடங்கப்பட்டு மக்களுக்குப் பணியாற்றி வருகின்றன. ஆண்டுதோறும் புது இடங்களில் திட்டங்கள் தொடங்கப்படுகின்றன. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் கால வரையறைக்குள் நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் சமுதாய நல வளர்ச்சி அலுவலகங்கள் ஏற்படுத்தப் பட்டு நாடு முழுவதும் நலம் பெறத் திட்டமிடப்பட்டிருக்கிறது.

இத்திட்டத்தின்படி, உழவுத் தொழிலைப் பெருக்குவதற்குத் தரிசு நிலங்கள் உழுது சாகுபடி செய்யப்பட்டு வருகின்றன. நீர்ப்பாசன வாய்க்கால்கள், குழாய்க்கிணறுகள், இறைகிணறுகள், குளங்கள் முதலியவை தோண்டப்படுகின்றன; உயர்தரமான விதைகளும் உரங்களும் கொடுக்கப்படுகின்றன; முன்னேற்ற மான பயிர்த்தொழில் முறைகள் கையாளப்படுகின்றன; ஆடுமாடு களுக்கு மருத்துவ வசதியும் செய்யப்பட்டுள்ளது; உழவுக் குக் கடன் வசதியும், விளைபொருள்களை விற்பதற்கு வசதியும் செய்து தரப்படுகின்றன. கால் நடைப் பண்ணைகள் நிறுவப் பெற்றுள்ளன; மரங்களும் காடுகளும் வளர்க்கப்படுகின்றன. இன்னும் இவை போன்ற பல உதவிகள் அளிக்கப்படுகின்றன.

கிராமங்களில் போக்கு வரத்து வசதிக்கான சாலைகளை அமைப்பதும், ஏற்றிச் செல்வதற்கான வண்டிகளை ஏற்பாடு செய்வதும், இத்திட்டத்தின் கீழ்ச் செய்யப்படுகின்றன. கிராம மக்களுக்குக் கட்டாய ஆரம்ப இலவசக் கல்வியும் அளிக்கப்படுகிறது. உயர்தர, நடுத்தரப்பள்ளிகள், முதியோர்கல்விநிலையங்கள், நூல்நிலையங்கள் ஆகியவையும் அமைக்கப்பட்டு வருகின்றன.

கிராம மக்கள், கல்வியறிவின்மையால், சுகாதார வாழ்க்கை அறியாதவர்களாய் இருக்கின்றனர். ஆதலால், அவர்களுக்குச் சுகாதார முறையும் கற்பிக்கப்படுகிறது. சுற்றுப்புறத்தைத் தூய்மையாக வைத்துக்கொள்ளுதல், கிராமத்தைத் தூயதாக வைத்துக்கொள்ளுதல், நோயுற்றவர்களுக்கு மருத்துவ வசதியளித்தல் முதலியன சுகாதார வசதிகளின் கீழ் அடங்கும்.

அன்றியும்கிராமத்தொழில்களில் ஈடுபட்டிருப்பவர்களுக்குத் தம் தொழிலில் போதிய பயிற்சியும், தொழில் பற்றிய விஞ்ஞான அறிவும் இல்லை. ஆகவே, அவர்களது வேலைத் திறமையை விரியச் செய்ய, அவர்களுக்கு நல்ல முறையில் பயிற்சியளிக்க வேண்டும். இத்திட்டத்தின் கீழ், கிராமத்தில் நடைபெறும் எல்லாத் தொழில்களுக்கும் ஏற்ற பயிற்சிகள் அளிக்கப்படும். உழவர்கள், கைவினைஞர்கள், நிருவாக ஊழியர்கள், சுகாதார ஊழியர்கள், மேற்பார்வையாளர்கள் முதலிய எல்லாத் திறத்தினருக்கும் வேண்டிய பயிற்சிகள் அளிக்கப்படும். பயிற்சி பெறாத ஏனையோருக்கும் இத்திட்டத்தின் கீழ் வேலைகள் கொடுக்கப்படும். குடிசைத் தொழில்கள், கைவேலைகள், வாணிபம், திட்டம் சம்பந்தமான வேலைகள் ஆகியவற்றில் இவர்கள் அமர்த்தப்படுவார்கள்.

இவையேயன்றிக் கிராமங்களில், குடியிருப்பு வசதிகளைச் செம்மைப்படுத்தவும் பெருக்கவும் புதிய முறைகள் கையாளப்படும். கிராம மக்களின் வீடுகள் சுகாதாரம் அற்ற சிறு குடில்களாகவும், நோய்களுக்கு இருப்பிடமாகவும் இருப்பது யாவரும் அறிந்ததே. அங்ஙனம் உள்ள வீடுகளைச் சுகாதார வசதிகளுடன்,

ஆரோக்கியமான இருப்பிடங்களாக மாற்ற வேண்டும். ஆகவே, நல்ல முறையில் புது வீடு கட்டும் வேலைகள் இத்திட்டத்தின் கீழ்த் தொடங்கப்படும்.

இறுதியாக, நம் நாட்டுப் பண்பாட்டுக்கும், பழக்க வழக்கங்களுக்கும் ஏற்ற பொழுது போக்குகளையும் ஏற்பாடு செய்வது, இத்திட்டத்தின் ஒரு நோக்கமாகும். மக்களுக்குக் கல்வியறிவு, பொது அறிவு முதலியவைகளைப் புகட்டப் படக்காட்சிகளும், வானொலி நிகழ்ச்சிகளும், சொற்பொழிவுகளும் ஏற்படுத்தப்படும்; பல வித விளையாட்டுகள், நாடகம், கூட்டு வழிபாடு முதலிய ஊக்க மூட்டக்கூடிய நிகழ்ச்சிகள் நடத்தப்பெறும்.

மேற்கூறிய திட்டக் கூறுகளையெல்லாம் நோக்கும்போது, இவ்வளவையும் ஒரு குறிப்பிட்ட குறுகிய காலத்திற்குள் செய்து முடிக்க முடியுமா என்ற ஐயம் தோன்றலாம். ஆனால், உண்மையில் கிராம மக்களின் ஒத்துழைப்பிருந்தால் இவையெல்லாவற்றையும் அங்ஙனமே செய்து முடிக்க இயலும். அவர்கள் எல்லாவற்றிற்கும் அரசாங்கத்தையும் பிறரையுமே நம்பிக்கொண்டிராமல், தம் கையே தமக்கு உதவி என்ற கோட்பாட்டின்படி தாங்களே இவ்வேலைகளைச் செய்ய முன் வரவேண்டும். இத் திட்டத்தின் சிறந்த அடிப்படை, மக்களின் ஒத்துழைப்புத்தான். அதுவே இதில் மிகுதியாக வற்புறுத்தப்படுவது. மக்களுடைய முயற்சியும் ஊக்கமும் எந்த அளவுக்கு இருக்கின்றனவோ, அந்த அளவுக்கு அரசாங்கம் பொருளுதவியளிக்கும். அரசாங்கமே தனித்து இவைகளை நிறைவேற்றிவைக்க முன்வாராது. மக்களின் ஒத்துழைப்பை அடிப்படையாகவும், ஒரு சிறந்த கண்டிப்பாகவும் கொண்டே அரசாங்கம் இவைகளை நிறைவேற்றித் தர முன் வந்திருக்கிறது. ஆகவே, மக்கள் இவற்றைத் தம் சொந்த வேலையாகக் கருதி ஒத்துழைக்க முன் வரவேண்டும். நம் வீட்டில் ஒரு திருமணம் நடக்கிறதென்றால், அதற்காக ஒவ்வொருவரும் ஒவ்வொரு வேலையை நாமாக எப்படி மகிழ்ச்சியோடு ஏற்றுச்செய்வோமோ, அதுபோலவே இத்திட்ட வேலைகளையும் நாம் நிறை

வேற்ற வேண்டும் என்று அரசாங்கம் எதிர்பார்க்கிறது. எனவே, இதை ஒரு கிராம விழா என்று கிராம மக்கள் கருத வேண்டும்.

இத்திட்டங்களை நிறைவேற்ற மக்கள் தாமாக முன் வருவதில், அவர்கள் தம்முடைய நாட்டுப்பற்றுணர்ச்சியையும் வெளியிட ஓர் அரிய வாய்ப்பு அளிக்கப்பட்டுள்ளது. நம் நாடு இப்பொழுது செல்வ நிலையில் பின் தங்கியிருக்கிறது. மேற்கூறிய எல்லா வேலைகளுக்கும் அரசாங்கம் பணம் கொடுத்து வேலையாட்களை அமர்த்துவதென்றால் இப்பொழுதுள்ள நிலையில் இத்திட்டம் நிறைவேறாது. ஆதலாலேதான் அரசாங்கம், மக்கள் தம் உழைப்பையேனும் வேறு பொருள்களையேனும், இலவசமாகக் கொடுத்துதவுமாறு கேட்கிறது. இங்ஙனம் கொடுத்துதவுவதன் மூலம் நாம் நம் நாட்டுப் பற்றைக் காட்ட முடியும். எத்தனையோ பேர் நம் நாட்டுக்கு விடுதலை தேடித்தர, உடல், பொருள், ஆவி மூன்றையும் கொடுத்து, இரத்தமும் சிந்தியிருக்கிறார்கள். அப்படி அவர்கள்தேடிக்கொடுத்தவிடுதலையை இலவசமாகத் துய்ப்பதற்கு ஏனையோர் ஒருப்படக் கூடாது. அவர்களும் தம்மாலான தொண்டுகளில் ஈடுபடவேண்டும். விடுதலைக்காக உழைத்தவர்கள் செய்த தொண்டைவிட, இத்தொண்டு ஒரு வகையில் மிகச், சிறந்தது. இதனைச்செய்ய முன்வாராவிட்டால், நாம் எள்ளளவும் நாட்டுப் பற்றுடையவர்களாக மாட்டோம். ஜப்பான், சீனா, ரஷ்யா முதலிய நாடுகள், இவ்வகையில் நமக்கு வழிகாட்டிகளாக விருக்கின்றன. அவை, தாம் விடுதலை பெற்ற சில ஆண்டுகளுக்குள் வியக்கத் தகுந்த முன்னேற்றத்தை அடைந்திருக்கின்றன. அந்நாடுகளைக் கண்டாவது நாம் உணர்ச்சி பெற்றெழுவோமாக! வாழ்க நம் நாடு! வெல்க நலத்திட்டங்கள்!

## அருஞ்சொற்பொருள் :

குறிக்கோள் — நோக்கம்: அல்லல் — துன்பம்; ஊதியம்— வருவாய்; தரிசு — விளையாத நிலம்; கொழிக்கும் — மிகுந்திருக்கும்; சாகுபடி — பயிர்செய்தல்; குடில்—குடிசை; துய்த்தல்— அநுபவித்தல்.

## கேள்விகள்:

1. கிராம முன்னேற்றத்தின் அவசியம் என்ன ?
2. சமுதாய வளர்ச்சித் திட்டம், தேசிய வளர்ச்சித் திட்டம் என்பவை என்ன ?
3. நாட்டு நலத் திட்டங்களின் பகுதிகள் எவை ?
4. இத் திட்டங்களின் அடிப்படை அமிசம் யாது ?
5. இத் திட்டங்களை நிறைவேற்றுவதன் மூலம், நாம் நம் நாட்டுப் பற்றை எப்படி வெளியிட முடியும் ?

## பயிற்சி :

கிராம முன்னேற்றம் என்பது பற்றி 25 வரிகளில் ஒரு கட்டுரை எழுதுக.

# அறிவியலா? அழிவியலா?

## (சொற்போர் மன்ற நிகழ்ச்சி)

(திரு. பி. டி. செல்லப்பா, பி. ஏ., எம். எஸ்ஸி.)

**ஆசிரியர்:** அன்பு மிகு மாணவர்களே! இன்று நம் மன்றத்தில் அறிவியலின் விளைவுகளைப் பற்றிச் சொற்போர் நிகழ்த்துவதற்கு நாமனைவரும் இங்குக் கூடியுள்ளோம் என்பது உங்களுக்குத் தெரியும். இச்சொற்போரில் நேரிடையாகக் கலந்து கொண்டு பேச முன்வந்திருக்கும் முத்து, கந்தன், கமலம், இரத்தினம் ஆகிய நால்வரையும் நான் பாராட்டுகின்றேன். நீங்கள் அனைவரும் அவர்களைப் போலவே பேரார்வம் உடையவர்கள் என்பதும் எனக்குத் தெரியும். எனினும், சொற்போர் நன் முறையில் சுருங்கிய நேரத்தில் நடைபெற, நால்வர் பேசுதலே சாலும் என்பது எனது கருத்து. நீங்களும் இதனை ஒப்புக் கொள்வீர்கள். நிகழ்ச்சி நடைபெறும்போது அனைவரும் மிக அமைதியாக இருந்து பேசுபவர்களைத் தக்க சமயங்களில் ஊக்கிக் கைதட்டுதலால் உங்களது மகிழ்ச்சியையும் பாராட்டுதலையும் தெரிவிக்கலாம். இப்பொழுது எடுத்துக்கொண்ட பொருள்பற்றி நான் ஒன்றும் பேசப் புகவில்லை. என் கருத்துக்களை இறுதியில் கூறுவேன். முதற்கண் இப்பொருளை ஒட்டிப் பேசுமாறு நான் முத்து என்பவரை அழைக்கின்றேன்.

**முத்து;** தலைமை தாங்கும் தகுதி மிக்க ஆசிரியரவர்களே! அன்புசால் நண்பர்களே! அனைவருக்கும் எனது தாழ்ந்தவணக்கம். இன்று நாம் ஆராய எடுத்துக்கொண்ட பொருள் அறிவியலின் விளைவுகளைப் பற்றியதாகும். நாம் அனைவரும் வகுப்பில் அறிவியலைப் பாடமாகப் படிக்கிறோம். அதில் அனைவருக்கும் அளவு கடந்த பற்றுண்டு என்பதை நான் அறிவேன். ஏனெனின், அப்பாடத்தின் தன்மையே அறிவைத் தூண்டுவது; அறிவாவலைப் பெருக்குவது; அறிவை வளர்ப்பது. மற்றெந்தப் பாடத்திலும் நம்மைச் சுற்றியுள்ள இயற்கைப் பொருள்களைப் பற்றியும்,

மனிதன் இயற்கையை வென்று இணையற்று விளங்கும் தன்மையினையும் நாம் அத்துணைத் தெளிவாகக் காண்பதில்லை. இவ்விருபதாம் நூற்றாண்டு, விஞ்ஞான காலத்தின் இணையற்ற உச்சி போன்றது. இதன்கண் நாம் எண்ணிறந்த புதுமைகளைக் கண்டும் துய்த்தும் வருகிறோம். அன்றாடம் நாம் காணும் விஞ்ஞானப் புதுமைகளைக் கணக்கிடவும் முடியாது. மூன்று நூற்றாண்டுகள் தொடர்ந்து நடந்துவந்த அறிவியல் முன்னேற்றமும் ஆராய்ச்சியும் இன்று மக்களினத்தின் அறிவையே திகைக்கவைக்கும் அளவுக்கு மிகுதியாகியுள்ளன. நமது வெற்றிகளைக் கண்டு நாமே வியக்கிறோம். தொலைபேசிகளென்ன, கம்பியில்லாத் தந்தியென்ன, வானொலியென்ன, வானவூர்திகளென்ன, பேசும் படங்கள் என்ன, பொறியியல் புதுமைகள் என்ன, விண்ணையும் மண்ணையும் காற்றையும் நீரையும் கடிதில் கடந்து செல்லும் கண்டுபிடிப்புக்கள் என்ன, இவையெல்லாம் நமது அளவிறந்த அறிவியல் வெற்றியின் அறிகுறிகளே. இவற்றைக் கண்டு வியவாதார் யார்? போற்றாதார் யார்? இன்னம் மிக விரைவில் நாம் காணப்போகும் புதுமைகளும் எத்தனையே! ஆளின்றி வான வெளியில் ஆயிரக்கணக்கான கல் தொலைவுசென்றுதாக்கும் எறிபடைகள் (rockets and missiles). வானத்தில் பல்லாயிரம் கல் உயரத்தில் சென்று பூமியை வட்டமிடும் செயற்கைத் திங்கள், திங்கள் மண்டலத்தை நோக்கிச் செலுத்தப்படும் கருவிகள், இவையெல்லாம் விஞ்ஞானத்தின் மாபெரும் வெற்றி அடையாளங்கள். இவற்றைக் கண்டு நாம் பெருமைப்படுகிறோம்; மகிழ்ச்சியால் பூரிக்கிறோம்; இறுமாப்பால் செம்மாந்திருக்கிறோம்; எனவே, அறிவியல் என்பது மக்கள் இனத்திற்கே ஒரு மாபெரிய அருட்கொடை. வாழ்க அறிவியல்! ஓங்குக அறிவு! (எல்லோரும் கை தட்டல்).

**ஆசிரியர் :** மாணவர்களே! இதுகாறும் அறிவியலின் அளவற்ற வெற்றிகளைப் பற்றி முத்து அவர்கள் மிக அழகாகவும் சுருக்கமாகவும் எடுத்துரைத்தார். இனி அடுத்தாற்போல அவரது கருத்தை ஒட்டிப் பேசுவதற்குத் துடித்துக்கொண்டிருக்கும் கந்தன் அவர்களை நான் மேடைக்கு வருமாறு அழைக்கின்றேன்.

**கந்தன் :** ஆசிரியப் பெருந்தகையவர்களே! அறிவின் சுடர்களாக விளங்கும் அருமை நண்பர்களே! வணக்கம்! எனது நண்பர் முத்து அவர்கள் உங்கள் முன்னிலையில் பல முத்துக்களைச் சொரிந்தார். நீங்கள் அனைவரும் அக்காலை அவற்றைக் கொள்ளை யாக அள்ளியெடுத்துப் பொதிந்து வைத்துக்கொண்டதையும் யான் அகக் கண்ணால் கண்டேன். அவரது கருத்தை அனைவரும் ஒப்புக்கொண்டதற்கு அறிகுறியாக நீங்கள் நீண்ட நேரம் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தீர்கள். நான் அவரைவிட என்ன மிகுதியும் கூற முடியும்? எனினும், அவர் கூறாது விடுத்த சில குறிப்புகளை மட்டும் யான் உங்கள் முன்னிலையில் தெரிவிக்கின்றேன். அறிவியல் பெற்ற வெற்றிகள், அறிவு வளர்ச்சி, கருவிப் பெருக்கம் ஆகியவற்றுடன் மட்டில் நின்றுவிடவில்லை. நமது வாணாளையும், உடல் நலத்தை யும், உணவையும், எண்ணத்தையுங்கூட அது நன்முறையில் மாற்றி யமைத்துவிட்டது. மருத்துவத் துறையில் கண்டுபிடிக்கப்பட்ட பல்விதமான மருந்துகள், நோய் தீர்க்கும் முறைகள், அறுத்துச் செய்யும் வியத்தகு முறை (surgical wonders) முதலிய வற்றால் நாம் இன்று, இதுகாறும் தீராவென்று கருதிய நோய் களையும் தீர்த்து, முன்னைவிட மிகுந்த உடல்நலத்துடனும், நீண்ட வாணாளுடனும் இருக்கிறோம். உடல்நலத்திற்கேற்ற உணவை யும் அதை உட்கொள்ளும் முறைகளையும் பற்றி அறிந்திருக்கி றோம்; நோய்கள் பற்றிய பல மூட எண்ணங்களைத் தகர்த்தெறிந்து விட்டு "நோய் நாடி, நோய் முதல் நாடி, அது தீர்க்கும் வாய்நாடி, வாய்ப்பச் செய்து" வருகின்றோம். சீரிய உணவுப் பெருக்க முறைகளையும் செயற்படுத்துகிறோம். ஏன்? உணவிற்காக மிகுந்த கொழுமையும் சுவையும் உள்ள புதிய செயற்கை உணவுகளை உண்டாக்குவதற்கும் நாம் அறிந்திருக்கின்றோம். அது போல, வன்மையும் வனப்பும் உடைய புதிய உயிரினங்களையும் தோற்றுவிக்க அறிந்திருக்கிறோம். இவையெல்லாம் நமது விஞ்ஞான அறிவினால் உண்டாகும் விந்தைகளே. இதைவிட விஞ்ஞானத்தின் வெற்றிக்கு வேறு என்ன சான்று வேண்டும்? இவற்றால் எல்லாம் நாம் நன்மையே அடைந்து வருகிறோம் என்று கூறுவதற்கு ஐயமென்னை? எனவே, அறிவியலால் நாம்

அடைந்துள்ள நற்பயன்கள் நவிலவொண்ணுதன. ஆகவே, உங்கள் அனைவரையும் நான் அழைக்கின்றேன். அறிவியலை வளர்க்க வாரீர் என்று. நாம் ஒவ்வொருவரும் ஒரு சி. வி. இராமனுக, ஜே. சி. போஸாக, பி. சி. ரேயாக மாறவேண்டு மென்பது என் அவா! அதனுல் நம் நாடும் உலகமும் எத்துணை நன்மையடையும் என்று நான் செப்ப வேண்டுவதில்லை. அறிவுத் தாய் வாழ்க! அதனுல் உலகம் உய்க! (மாபெருங் கை தட்டல்)

**ஆசிரியர்:** அமைதி! அமைதி! அருமை மாணவர்களே! கந்தன் பேசிய களிப்பில் என்றன் சொல்லை ஏற்க மறவன்மின். இதுகாறும் அறிவியலைப் பற்றி இருவர் ஒட்டிப் பேசியதைக் கேட்டீர்கள். இனி, அதனை வெட்டிப் பேச மட்டிலா ஆர்வத் துடன் மற்றிருவர் முனைந்து நிற்கிருர்கள். அவர்கள் பேச்சையும் கேளுங்கள். கேட்டு இறுதியில் உங்கள் தீர்ப்பை அளியுங்கள். இனி இப்பொருள் பற்றிக் கமலம் அவர்களை இங்கு வந்து பேசு மாறு யான்பணிக்கின்றேன்.

**கமலம்:** அமைதியின் ஆழியாம் அவைத் தலைவர் அவர்களே! அறிவியல் பெருமையில் திளைத்தும் திகைத்துத் திசை தெரியாது நிற்கும் அருமை நண்பர்களே! அனைவரையும் தலை தாழ்ந்து வணங்குகின்றேன். உடல் வலியும், குரல் வலியும் கொண்ட உங்கள் நண்பர் இருவர் இதுகாறும் அறிவியலின் பெருமைகளை உரத்த குரலில் பறை சாற்றினுர்கள். இவ்விரண்டு ஆற்றலும் அற்ற மெல்லியலாகிய யான், உணர்ச்சி வலிமை மட்டும் கொண்டு, உங்கள் முன்னிலையில் உரையாற்ற வந்துள்ளேன். முதற்கண் அறிவு வேறு, உணர்ச்சி வேறு என்பதை உங்களுக்கு நான் எடுத்தியம்ப விரும்புகின்றேன். அறிவைத் தீட்டித்தீட்டி அதன் இருமாப்பினுல் அழிவை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறது, இன்றைய உலகம். அதற்கு மாருக உணர்ச்சிகளை வளர்த்துப் பேணி உய்வடைய வேண்டுவது இன்று நம் கடமை. இதையே நான் இன்று உங்கள் முன்னிலையில் வற்புறுத்த விழைகின்றேன். அறிவியல் தீயதன்று. ஆனுல், ஆன்மவியல் இல்லாத அறிவியல், அழிவியலாகவே

முடியும். இதனையே அன்று காந்தியடிகள் வற்புறுத்தினர்; இன்றும் இராஜாஜி போன்ற அறிஞர்கள் இடித்துக் கூறிக் கொண்டிருக்கிருர்கள். இக்காலத்தில் நிகழ்ந்துவரும் ஒரு சார்பான அறிவியல் முன்னேற்றத்தை நோக்கும்போது, நாம் மறுமையையும் ஆன்மாவையும் மறந்துவிட்டோம் என்பது மலையிலக்கு. இம்மை வாழ்வு மட்டும் முழுமையான வாழ்வு ஆகாது. மறுமை கருதிச் செய்யும் தூய செயல்களே மனிதனை மனிதனுக்குபவை. இன்றேல், விலங்குகளுக்கும் நமக்கும் வேற்றுமை இல்லை! மாக்களும் மக்களும் ஒன்றே. "மனிதன் உணவால் மட்டும் வாழ்வதில்லை," என்ருர் ஒரு பேரறிஞர். அது போல, உலக அறிவினுல் மட்டும் நாம் உய்தியடைய முடியாது. மெய்யறிவு நூல்களைக் கற்று ஆன்ம முன்னேற்றத் திற்கு முயல்வதே அறிவுடைமை.

"அலகுசால் கற்பின் அறிவுநூல் கல்லாது,
உலகநூல் ஓதுவ தெல்லாம்—கலகல
கூஉந் துணையல்லால் கொண்டு தடுமாற்றம்
போஒந் துணையறிவா ரில்,"

என்ற செய்யுள் நீங்கள் அறிந்ததே. "கற்றதனு லாய பயன் என் கொல், வாலறிவன் நற்றாள் தொழாஅ ரெனின்?" என்று தமிழ் மறை முழங்குவதும் உங்களுக்குத் தெரியும். ஆயினும், இன்று நாம் என்ன காண்கிறேம்? எங்கும், அன்பின்மை, வெறுப்பு, தீய எண்ணம், அழிவுச் செயல்கள்—இவையே அறிவியல் நமக்கு அளித்த கொடைகள். நம் நண்பர்கள் அறிவியலின் இம்மை பயன்களைப் பற்றியே இசைபாடினர்கள். ஆனல், அவை வெற்று வாழ்க்கை வசதிகளேயன்றி, ஆன்ம வளர்ச்சிக்கு அடிகோலு பவையல்ல. 'அறிவியல், அன்பையும், பண்பையும், உள்ளத்தையும் உருவாக்கி வளர்ந்திருக்கிறதா?' என்பதே என்னுடைய கேள்வி. இவையில்லா மானிட வாழ்க்கை வேறு விலங்கு வாழ்க்கையே யன்றி வேறென்ன? அன்பர்களே! சிந்தியுங்கள். என் கேள்விக்கு விடை கூறுங்கள். உங்கள் உள்ளத்தைத் தொட்டுப் பார்த்து விடையளியுங்கள். உங்களில் யார், இன்று விஞ்ஞானம் நமக்கு முழுவதிலும் நன்மையே செய்திருக்கிறதென்று உறுதியாகக் கூற முடியும்? முடியுமா என்று நான் அறை கூவி அழைக்கின்றேன்: அன்பில்லா அறிவியல், பண்பில்லாப் படிப்புப் போன்றது;

உயிரில்லா உடல் போன்றது; கண்ணில்லா முகம் போன்றது; எண்ணில்லா எழுத்துப் போன்றது.

**ஆசிரியர்:** அன்பும் அறிவும் பண்பும் படிப்பும் பெற வந்திருக்கும் மாணவர்களே! கமலம் அவர்கள் கூறிய சொற்கள் உங்கள் மனத்தில்கூரிய அம்புகள்போலப்பாய்ந்து பதிந்திருக்கும். அவர் பேச்சு உங்கள் மனத்தில் சிந்தனையைத் தூண்டியிருக்கும். உங்கள் முகங்கள் கமலம் போல மலர்ந்திருப்பது கண்டு நீங்கள் கமலம் அவர்கள் பேச்சில் மகிழ்ந்திருப்பதை நான் உணர் கிறேன். இறுதியாக இரத்தினம்அவர்கள் அவர் கருத்தை ஒட்டிப் பேசவிருக்கிறார். அன்னாரை அரங்கிற்கு வருமாறு நான் ஆணை யிடுகின்றேன்.

**இரத்தினம்:** அன்பும் பண்பும் ஆற்றலும் மிக்க தலைவர் அவர்களே! பண்டைப் பெருமை மிக்க தண்டமிழ்த் தோன்றல்களே! அறிவியல் அளித்த நன்மைகளைப்பற்றி அளவின்றிக் கேட்டீர்கள். ஆனால், வேண்டுமென்றே அதனால் விளைந்த தீமைகளை, நம் நண்பர்கள் கூறாது விடுத்தனர் என்று நான் அவர்களைக் குற்றம் சாட்டுகின்றேன். அவர்கள் காண நான் இன்று அறிவியலைக் குற்றவாளிக் கூண்டில் ஏற்றுகின்றேன். அதனை நோக்கி ஒரு கேள்வியும் விடுக்கின்றேன். 'ஏ, அறிவியலே, நீ உனது அழிவியலை என்று நிறுத்தப் போகிறாய்? நீ உலகையே அழிக்கவல்ல அணுகுண்டுகளையும் ஹைடிரஜன் குண்டுகளையும் தந்த கொடியை அல்லையோ? உன்னால் எத்துணை ஆயிரம் உயிர் கள் மாண்டன? எத்துணைக்கோடி மதிப்புள்ள பொருள்கள் அழிந்தன? உன் திருவிளையாடல்களை எண்ணிப்பார்! எண்ணி வெட்கத்தால் தலை குனி. நண்பர்களே! அறிவியல் விளைத்த அழிவுகளைக் கண்டும் இனி அது விளைக்கவிருக்கும் இடையூறு களை அறிந்தும், அதனால் நன்மையே விளைந்தது என்று துணிந்து கூறுவீர்களா? அறிவியலை அழிவியல் என்று தானே கூறுவது பொருந்தும்? அறிவியல் அறிவைத் தந்தது; ஆனால், அன்பைத் தந்ததா? உடலை வளர்த்தது; உள்ளத்தைப் பேணியதா? பசியைப் போக்கியது; பண்பை ஊக்கியதா? பொருளைப்

பெருக்கியது; அருளை ஊட்டியதா? இல்லை, இல்லை, இல்லை என்றுதான் எல்லோரும் ஒரு முகமாக விடை இறுப்பீர்கள். இதில் ஐயமில்லை. ஆதலால், நண்பர்களே! அறிவியல் ஆக்கியதைவிட அழித்ததே மிகுதி. அது உயிர்களையும் பொருள்களையும் மட்டுமன்றி, உள்ளத்தையும் அழித்துவிட்டது. நமது பண்புகளைப் பாழாக்கிவிட்டது; நாகரிகத்தை அழிவுப்படுகுழியில் தள்ளிக்கொண்டிருக்கிறது. உலக முழுவதையுமே இமைப்பொழுதில் உருக்குலைத்து அழிக்கக் காத்துக்கொண்டிருக்கிறது. இத்தகைய அறிவியலையா அருட்கொடையென்று ஆராயாது கூறுவது? இதனையா நம்மை உய்விக்கவந்த உறுதிப் பொருள் என்று கொள்வது? கூடாது; கூடாது; ஒருகாலும் கூடாது; எக்காலும் முக்காலும் கூடாது.

**ஆசிரியர்**: அறிவும், ஆர்வமும் மிக்க மாணவ மணிகளே, இரத்தினம் அவர்கள் இரத்தினச் சுருக்கமாகச் சற்று உணர்ச்சி வயப்பட்டுப் பேசினர். அறிவியல் பற்றி இரு சார்பான கருத்துக்களையும் இதுகாறும் நீங்கள் கேட்டீர்கள். இனி நீங்கள் உங்கள் கருத்துக்களைத் தெரிவிக்க வேண்டும். நீங்கள் இவ்விரு விதக் கருத்துக்களில் எதை வரவேற்கிறீர்கள் என்பதை நன்கு சிந்தித்து முடிவு செய்து, நான் கூறும் முறையில் உங்கள் விருப்பையோ, எதிர்ப்பையோ காட்ட வேண்டும். இப்பொழுது, 'அறிவியல் நல்லதா, தீயதா?' என்பது கேள்வி; நல்லது என்று கருதுவோர் கைகளை உயர்த்தித் தம் இசைவை அறிவிக்க வேண்டும்; தீயது என்போரும் பின்னர் அவ்வாறே இசைவைத் தெரிவிக்க வேண்டும். முதலில் அறிவியல் நல்லது என்போர் கைகளை உயர்த்துக. (25 பேர் உயர்த்துகின்றனர்.) சரி, 25 பேர் அறிவியலை விரும்புகின்றனர். அதனை எதிர்ப்போர் அதாவது அறிவியலைத்தீயது என்று கருதுவோர், இப்பொழுது கைதூக்குக. (20 பேர் தூக்குகின்றனர்.)20 பேரே அறிவியலை எதிர்க்கின்றனர். நிற்க. என் கருத்தையும் இறுதியில் கூறுவது என் கடமை. நீவிர் அனைவரும் இரு திறத்தார் கூற்றிலும் உண்மை உண்டென்பதை முதற்கண் உணர வேண்டும். அறிவியல், அறிவையும்

இன்பத்தையும் வளர்த்திருக்கிறது; அதே சமயத்தில் அழிவையும் துன்பத்தையும் மிகுத்திருக்கிறது. அறிவியலின் அழிவுப் பாதையிலிருந்து நாம் நம்மை மீட்டுக்கொள்வதற்கு, அதனையே வணங்குவதை விட்டு, உள்ளத்தைப் பண்படுத்தும் பிற கலைத் துறைகளையும் கற்க வேண்டும். அதனால், நம் உணர்ச்சிகள் ஒழுங்குபடும். ஆணும் பெண்ணும் இன்றி முழு வாழ்க்கை இல்லாததுபோல, அறிவியலும் பிற கலைகளும் இல்லாதது முழுக் கல்வியாகாது. இன்றைய நிகழ்ச்சியிலிருந்தே நீங்கள் இவ்வுண்மையை ஒருவாறு உணர்ந்திருக்கலாம். இரண்டு ஆடவர்கள் அறிவியலை உயர்த்திக் காரசாரமாகப் பேசினர். இரண்டு பெண்டிர் அதனை எதிர்த்து அமைதியாக வாதாடினர். இவ்விரு பாலாரும்இரு சார்பான கொள்கையைக் கூறினும்,இரண்டும் ஒரு முழு உண்மையையே வற்புறுத்துகின்றன. அதாவது, அறிவும் பண்பும் ஒத்தியங்க வேண்டுமென்பது. அறிவியல் ஆண் என்றால் பிற கலைகள் பெண் எனத் தகும். வெற்று அறிவு, கூர்மையான கத்தி போன்றது; அல்லது நெருப்புப்போன்றது. கத்தியையும் நெருப்பையும் விழிப்பாகக் கட்டுப்படுத்திக் கையாள வேண்டும். இன்றெனின், அவை நமக்கு ஊறு விளைவித்துவிடும். அது போலவே அறிவியல் என்னும் கத்தியை அல்லது தீய பண்பை வளர்க்கும்வேலைகளின் துணைகொண்டு கட்டுப்படுத்தவேண்டும். இதற்காகத்தான் உங்களுக்குப் பள்ளிகளில், எல்லாக் கல்வித் துறைகளும் ஓரளவு கற்பிக்கப்படுகின்றன. அதனால், உங்கள் அறிவு, உள்ளம், பண்பு, உணர்ச்சிகள் முதலிய எல்லாக் கூறுகளும் ஒருங்கே வளர்ச்சியடைந்து சீர்படும். நீங்கள் எக்கலையையும் காய்தல் உவத்தல் இன்றிக் கற்றுப் பயனடைந்து பண்பாட்டுடன் விளங்க வேண்டும். வாழ்க அறிவு! வளர்க பண்பு! கூட்டம் இதனுடன் நிறைவெய்துகிறது. (பெருங்கை தட்டல்.)

அருஞ்சொற்பொருள்:

பொறியியல் - எந்திரக் கூறு; எறிபடைகள் - எறியப்படும் போர்க் கருவிகள்; அருட்கொடை - வரப்பிரசாதம்; நோய்

முதல் - நோய்க்குக் காரணம் : தீர்க்கும் வாய் - போக்கும் மருந்து; வாய்ப்ப - பொருந்துவன; ஆழி - கடல்.

## கேள்விகள் :

1. முத்துக் கூறிய கருத்துக்கள் யாவை ?
2. அறிவியலின் வெற்றிகளாகக் கந்தன் கூறியவை என்ன ?
3. கமலம் அறிவியலை எங்ஙனம் குறை கூறினார் ?
4. இரத்தினம் அறிவியலைக் குற்றஞ் சாட்டிக் கூறியது என்ன ?
5. ஆசிரியர் கூறிய இறுதிக் கருத்தை விளக்கி எழுதுக.

## பயிற்சி :

நீங்கள் கேட்ட ஒரு சொற்போர் மன்ற நிகழ்ச்சியில் பேசப்பட்ட கருத்துக்களைச் சுருக்கமாக 25 வரிகளில் எழுதுக.



# MANAVAR SENTAMIL MALAI

(VIII STANDARD)

PART I – TAMIL (Academic Course)

*Edited by* :

Prof. R. KRISHNAMOORTHY, M.A., L.T., B.O.L.

Head of the Dept. of Tamil,

MADURA COLLEGE, MADURAI.

*Published by* :

A. KARMEGA KONE

TallaKulam P. O. :: Madurai-2.

 1964 [Rs. 2-25 nP

Printed at the Loyola Printers Madurai-64.